# சங்கர நயினார் கோயில் – இலக்கிய வரலாற்று ஆய்வு

*சென்னைப் பல்கலைக்கழக*
*முனைவர் (பிஎச்.டி.) பட்டத்திற்கான*
*ஆய்வேடு*

*பகுதி நேர ஆய்வாளர்*
**உ.சண்முக சுந்தரி,** எம்.ஏ., எம்.ஃபில்.,
தமிழ்த் துறை
மாநிலக் கல்லூரி, சென்னை - 600 005

*மேற்பார்வையாளர்*
**முனைவர். மு.சண்முகம்,** எம்.ஏ., எம்.ஃபில்., பிஎச்.டி.,
இணைப் பேராசிரியர்
தமிழ்த் துறை
மாநிலக் கல்லூரி ( தன்னாட்சி)
சென்னை- 600 005

**தமிழ்த் துறை**
**மாநிலக் கல்லூரி (தன்னாட்சி)**
**சென்னை - 600 005**

**ஜூலை 2002**

**முனைவர் சு.இராசசேகரன்,**
துறைத் தலைவர்
தமிழ்த்துறை,
மாநிலக்கல்லூரி,
சென்னை - 600 005.

# துறைத் தலைவர் சான்றிதழ்

**திருமதி. உ. சண்முகசுந்தரி** அவர்கள் முனைவர் (பிஎச்.டி.) பட்டப் பகுதி நேர ஆய்வாளராக 1994-ஆம் ஆண்டில் சேர்ந்தவர் என்றும் முனைவர் பட்டப் பேற்றிற்காகச் **"சங்கரநயினார் கோயில் - இலக்கிய வரலாற்றாய்வு"** என்னும் தலைப்பில் இந்த ஆய்வேட்டை அளிக்கிறார் என்றும் சான்றளிக்கிறேன்.

சென்னை - 600 005
நாள் : 05-07-02

(சு.இராசசேகரன்)
துறைத் தலைவர்

தமிழ்த் துறைத்தலைவர்,
மாநிலக் கல்லூரி,
சென்னை-600 005.

# நன்றியுரை

ஆய்வு செய்வதற்கு அனுமதி வழங்கிய சென்னைப் பல்கலைக் கழகத்தாருக்கும், ஆய்வு செய்வதற்குரிய வசதிகளைச் செய்து தந்த சென்னை மாநிலக் கல்லூரி **முதல்வர்** அவர்களுக்கும், நந்தனம் கல்லூரி **முதல்வர்** அவர்களுக்கும் என் பணிவான நன்றியை உரித்தாக்குகின்றேன்.

ஆய்விற்கு வழிகாட்டியாக இருந்து என்னை நல்வழிப்படுத்திய பேராசிரியர் **முனைவர் மு.சண்முகம்** அவர்களுக்கு என் நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

ஆய்விற்கு உதவும் பல கருத்துக்களை எனக்கு வழங்கி ஊக்கப்படுத்திய மாநிலக் கல்லூரியின் முன்னாள் தமிழ்த்துறைத் தலைவர்கள் **முனைவர் ந.ஆடியபாதம், முனைவர் சொ.சுப்பிரமணிய கவிராயர்** ஆகியோருக்கும், இந்நாள் துறைத்தலைவர் **முனைவர் சு.இராஜசேகரன்** அவர்களுக்கும் என்றும் நன்றி உடையேன்.

ஆய்வுப் பொருள் குறித்துப் பல செழுமையான செய்திகளைக் கூறிய **முனைவர் மு.சுதந்தரமுத்து, முனைவர் அருணை பாலறாவாயன்** ஆகியோருக்கும் என் மனமார்ந்த நன்றிகள்.

**முனைவர் நா.பாலகிருட்டினன், பேராசிரியை வெ.அருந்ததி, முனைவர் சீ.மங்கையர்க்கரசி, முனைவர் இரா.கண்ணன், முனைவர் இரா.இராமன்** ஆகியோருக்கும் என் நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன். நந்தனம் கல்லூரி தமிழ்த்துறைத் தலைவர் **பேராசிரியர் சோ.சுப்புலெக்குமி** அவர்களுக்கும், முன்னாள்

தமிழ்த்துறைத் தலைவர் **உ.சுப்பிரமணியம்** அவர்களுக்கும் தமிழ்த்துறைப் பேராசிரியர்கள் அனைவருக்கும் என் நன்றி உரியது.

ஆய்விற்கு வேண்டிய உதவிகளைப் பெரிதும் செய்து உதவிய சங்கரநயினார் கோயில் நிர்வாக அதிகாரி அவர்களுக்கும், கோயில் அலுவலகத்தாருக்கும் என்றும் நன்றி உடையேன்.

**சென்னை ஆவணக் காப்பகத்தாருக்கும், உலகத் தமிழாராய்ச்சி நிறுவன நூலகத்தாருக்கும், உ.வே.சா. நூல் நிலையத்தாருக்கும், தொல்பொருள் ஆய்வுத் துறையினருக்கும்** என் நன்றியை உரித்தாக்குகின்றேன்.

இவ்வாய்விற்கு வேண்டிய உதவிகள் பல புரிந்த திருநெல்வேலி தொல்பொருள் ஆய்வுத் துறை ஆய்வாளர் **முனைவர் செந்தில் செல்வக்குமரன்** மற்றும் திருக்குற்றாலம் கல்வெட்டு ஆய்வாளர் **திரு.சிராவணன்** ஆகியோருக்கும் என் நன்றி உரித்தாகுக.

இவ்வாய்வை நான் முடிப்பதற்கு நாள்தோறும் எனக்கு ஊக்கமும், உற்சாகமும் கொடுத்த என் அன்புக் கணவர் **திரு.சி.நவநீதகிருட்டிணன்,** அவர்களுக்கு என் நெஞ்சார்ந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

இவ்வாய்வேட்டைச் செம்மையாகத் தட்டச்சு செய்து தந்த அடையாறு மாணவர் நகலத்தாருக்கு என் மனங்கனிந்த நன்றியை உரித்தாக்குகின்றேன்.

**(உ. சண்முகசுந்தரி)**

# சுருக்கக் குறியீட்டு விளக்கம்

| | | |
|---|---|---|
| அகம் | - | அகநானூறு |
| கழகம் | - | தென்னிந்திய சைவ சித்தாந்த கழகம் |
| குறள் | - | திருக்குறள் |
| செ.தி. | - | செப்புத் திருமேனி |
| சிலம்பு. | - | சிலப்பதிகாரம் |
| திருமுருகு. | - | திருமுருகாற்றுப்படை |
| தொல். | - | தொல்காப்பியம் |
| ப.ஆ. | - | பதிப்பாசிரியர் |
| உ.ஆ. | - | உரையாசிரியர் |
| பரி. | - | பரிபாடல் |
| புறம் | - | புறநானூறு |
| மணி | - | மணிமேகலை |
| மொ.பெ. | - | மொழிபெயர்ப்பு |
| S.I.I. | - | South Indian Inscriptions |
| Trams. | - | Translation or Translator |
| Vol. | - | Volume |

# பொருளடக்கம்

# முன்னுரை

சங்கர நயினார் கோயில் இலக்கிய வரலாற்று ஆய்வு எனும் தலைப்பில் நிகழ்த்தப்பெறும் இவ்வாய்வு திருநெல்வேலி மாவட்டம் சங்கரன்கோவில் வட்டத்தில் அமைந்துள்ள சங்கர நயினார் திருக்கோயில் பற்றிய ஆய்வாகும்.

மானுடத்தின் வாழ்வில் - பண்பாட்டில் சமயம் பெரும் பங்காற்றுகிறது. சமய நம்பிக்கை, இறைவழிபாடு, இவற்றோடு தொடர்புடைய வழிபாட்டுச் சடங்குகள் ஆகிய கூறுகள் காணப்பெறாத மனித இனக் குழுவையோ, நாட்டையோ காண இயலாது. எந்நாடாயினும் அல்லது எம் மக்களாயினும் ஆங்கெல்லாம் ஏதோ ஒரு சமயத்தின் செல்வாக்கு இருப்பதையே சமூக வரலாற்று ஆய்வுகள் எடுத்துக் காட்டுகின்றன.

மக்களினத்தின் தோற்றக்காலத்தை எடுத்துக்காட்ட முடியாததுபோல் சமயத்தின் தோற்றத்தையும் எடுத்துக்காட்ட முடிவதில்லை. ஐரோப்பியாவில் கிருத்துவ சமயத்தின் தோற்றத்தையும் அரபு நாடுகளில் இசுலாமியத்தின் தோற்றத்தையும் இந்தியாவில் சமண புத்த சமயங்களின் தோற்றத்தையும் கால வரையறையோடு காட்ட இயல்கிறது என்றாலும், இச்சமயங்கள் தோன்றுவதற்கு முன்பும் அங்கெல்லாம் இறை நம்பிக்கையும், வழிபாடும், சடங்கும், தத்துவக்கோட்பாடும் இருந்தமையும் அவற்றில் ஒரு மறுமலர்ச்சியாகவே மேற்சுட்டிய சமயங்கள் தோன்றின என்பதும் அறிவுலகம் நன்கறிந்ததே. எனவே மானுட வாழ்வில் இறை நம்பிக்கையும், வழிபாடும் எப்போது தோன்றின என்ற தடைக்கு விடைகாண இயலாது என்பது தேற்றம். இவ்விந்திய நாட்டில் பழம்பெருங் காலந்தொட்டே இறை பற்றிய கோட்பாடும் வழிபாடும் இருந்து வருகிறது. பல்வேறு சமயங்கள் இம்மண்ணில் தோன்றித் தழைத்து நின்றன என்றாலும், அவற்றுள்ளும் பெரும்பான்மை மக்களுக்கு உரிமையுடையதும் பல்வேறு அகப்புறச் சமயங்கள் தோன்ற நிலைக்களன்களாக அமைந்ததுமான சமயங்களாக சைவம், வைணம் ஆகிய இவ்விரண்டைக் குறிப்பிடலாம். இம்மண்ணில் முகிழ்த்தெழுந்த இச்சமயங் களிடையே பூசலும் போராட்டமும் எழாமலில்லை. அப்போராட்டங்கள் மக்களினக்

குழுக்கள் தம்முள்ளே மோதவும் அழியவும் வழிவகுத்தன. மக்களின் உயர்விற்கும் சிறப்பிற்கும் உறுதுணையாக இலங்க வேண்டிய சமயமே மக்களின் அழிவிற்கு ஏதுவாக நின்றதைக் கண்டு, சமயப் பெரியோர் சிலர் துணுக்குற்றனர். பரம்பொருள் ஒன்றே எனினும் அப்பொருளைப் பலவாகக் காணும் பேத உணர்வும் சமயக்காழ்ப்பும் சிறுபிள்ளை விளையாட்டே என்று அப்பெரியோர் மக்களுக்குப் போதித்தனர். சைவமும் வைணவமும் பரம்பொருளைத் தேடும் இருவேறு மார்க்கங்களே அன்றி, அவை தேடும் இறைவன் ஒருவனே என்பதை உலகிற்கு உணர்த்த சிவனும் மாலும் இணைந்த திருவுருவங்களையும் உருவாக்கி வழிபட வழிவகை செய்தனர். இவ்வாறு தோன்றிய திருவுருவமே சங்கரநாராயணர் திருவுருவமாகும். பேத உணர்வை அழித்து அபேத உணர்வை வளர்க்க சமயச் சான்றோர் கண்ட சங்கரநாராயணர் திருவுருவத்தைப் பெற்றிருப்பதால் சங்கரநயினார் கோயில் என வழங்கப்பெறும் திருக்கோயிலை, அதன் வரலாற்றை, அதன் வழி உணரலாகும் தமிழர் பண்பாட்டை எடுத்துக் காட்டுவதாக இவ்வாய்வு அமைந்துள்ளது.

## ஆய்வின் தேவை

தமிழகத்தில் பழங்காலம் முதல், அண்மைக்காலம் வரை, சிறிய, பெரிய கோயில்கள் ஆயிரக்கணக்கில் தோன்றியுள்ளன. சில கோயில்களில் பொதிந்துள்ள அழகுகளும், அதிசயங்களும், கலைநுட்பங்களும் பிறவும் பலவாம். இவற்றை ஆய்வின் மூலமாகவே எளிதில் அறிய முடியும். ஒரு கோயிலின் வரலாற்றை அறிய வேண்டும்; அதன் மேன்மையான அமைப்பை உணர வேண்டும்; கட்டடங்கள்,சிற்பங்கள், ஓவியங்கள் முதலியவற்றில் மறைந்துள்ள அரிய கலைநுட்பங்களைத் தெரிய வேண்டும்; சமுதாயத்தின் மையமாகக் கோயில் திகழ்வதற்குரிய காரணங்களைக் காண வேண்டும்; சமயம், பக்தி, இலக்கியம், கலை, நாகரிகம், பண்பாடு முதலியவற்றில் அதன் பங்கை - அதன் தாக்கத்தை வரையறுக்க வேண்டும்; கோயிலுடன் தொடர்புடைய புராணக்கதைகளைச் சுவைக்க வேண்டும்; இறைவனின் திருவருளால் பக்தர் பலரது வாழ்வில் நடந்த வியப்புக்குரிய எதிர்பாராத நல்ல நிகழ்ச்சிகளை அறிந்து வியக்க வேண்டும்; கோயிலுடன் தொடர்புடைய

மன்னர், புலவர், அடியார் முதலிய சான்றோர்களைப் பற்றி அறிய வேண்டும்; இவை போன்ற கருத்துகளையெல்லாம் தெள்ளத் தெளிவாகத் தெரிய வேண்டுமென்றால், கோயிலைப் பற்றிய ஆய்வு நிச்சயம் தேவை. அவ்வகையில் சங்கர நயினார் கோயிலைப் பற்றிய விரிவான ஆய்வாக இந்த ஆய்வு அமைகின்றது.

## ஆய்வு முன்னோடிகள்

திருத்தலக் கோயில்களைப் பற்றிய ஆய்வுகள் கடந்த ஐம்பதாண்டுகளாக நடைபெறுகின்றன. வரலாற்றுத்துறை, தமிழ்த்துறையைச் சார்ந்த ஆய்வாளர் இத்தகைய ஆய்வுகளை மேற்கொள்கின்றனர்.

டாக்டர் கே.கே.பிள்ளையவர்கள் சுசீந்திரம் கோயிலையும், டாக்டர் தி.வி.மகாலிங்கம் நாகேசுவர சுவாமி கோயிலையும், டாக்டர் சி.கிருஷ்ணமூர்த்தி திருவொற்றியூர்க் கோயிலையும், டாக்டர் எஸ்.பொன்னுசாமி திருவாரூர்க் கோயிலையும் ஆராய்ந்தனர். இவர்கள் கோயில்களைப் பல நோக்கு நிலைகளில் ஆராய்ந்த ஆய்வு முன்னோடிகளாகவும், வழிகாட்டிகளாகவும் திகழ்கின்றனர்.

Madurai Temple Complex - Jayachandran

ஆய்வாளர்களின் ஈடுபாட்டின் காரணமாக, கோயில்களைப் பற்றிய ஆய்வு மேலும் வளர்ச்சி பெற்றது. அழகர் கோயிலை டாக்டர் தொ.பரமசிவமும், திருப்பரங்குன்றத்தை டாக்டர் நாகப்பா நாச்சியப்பனும், திருச்செந்தூர் செந்தில் ஆண்டவர் கோயிலை டாக்டர் ந.கல்யாண சுந்தரமும், ஆழ்வார் திருநகரி ஆதிநாதர் கோயிலை டாக்டர் அழகர் இராமானுசமும் ஆராய்ந்தனர்.

தொடர்ந்து கோயில்களைப் பற்றிய ஆராய்ச்சிகளை மேற்கொண்டவர்கள் வருமாறு:-

| ஆய்வாளர் | கோயில் |
|---|---|
| டாக்டர் சு.இராசசேகரன் | திருமயிலைத் திருத்தலம் |
| டாக்டர் பி.பா.உமாமகேசுவரி | நெல்லையப்பர் கோயில் |
| டாக்டர் சி.இரத்தினம் | காஞ்சிபுரம் ஏகாம்பநாதர் கோயில் |
| டாக்டர் சொ.சுப்பிரமணிய கவிராயர் | திருக்குற்றாலநாத சுவாமி கோயில் |

கோயில்களைப் பற்றிய ஆய்வேடுகள் மேலும் பல உள்ளன. அறிஞர் பலர் திருத்தலங்களைப் பற்றி பல நூல்களை இயற்றினர். இவை நூற்றுக்குமேல் காணப்படுகின்றன. இவற்றுள் சில ஆய்வு நோக்கில் எழுதப்பட்டவை; சில, பக்தர்கள் திருத்தலங்களைத் தரிசிக்க வேண்டும் என்பதற்காக எழுதப்பட்ட வழிகாட்டி நூல்களாகும்.

## ஆதாரங்கள்

இந்த ஆய்வேட்டிற்கான முதன்மை ஆதாரங்களைப் பின்வருமாறு வரிசைப்படுத்தலாம்.

## கோயில்

சங்கர நயினார்கோயிலைப் பற்றி ஆய்வதற்கு அக்கோயிலே அடிப்படை ஆதாரமாக அமைகின்றது. அதன் கோபுரம், விமானங்கள், மண்டபங்கள், சன்னதிகள் முதலிய உறுப்புகள் அனைத்தும் முதன்மை மூலங்களாக விளங்க அவையே இவ் ஆய்வுக்கு முதன்மை ஆதாரங்களாகக் கொள்ளப்பட்டுள்ளன.

## கல்வெட்டுகள்

சங்கர நயினார் கோயிலைச் சார்ந்த கல்வெட்டுகள் மொத்தம் பதினைந்து. இவற்றுள் மூன்று சிதைந்தன. அண்மைக் காலத்தில் தாசில்தார் பொறித்தது ஒன்று. மற்றவை, பாண்டியர் சிலர் கோயிலுக்கும், பிறருக்கும் அளித்த தான வகைகளை விவரிக்கின்றன.

## இலக்கியங்கள்

சங்கர நயினார் கோயில் தல வரலாறும், சங்கரலிங்க உலாவும் சங்கர நயினார் கோயில் பற்றி பல செய்திகளைக் கூறுகின்றன. எனவே இவையும் தேர்ந்த ஆதார நூல்களாகக் கொள்ளப்பட்டுள்ளன.

குறிப்பாகச் சங்கரலிங்க உலாவில் புராணக்கதைகள், தலவரலாறு, கோயிலைக் கட்டிய உக்கிர பாண்டியனைப் பற்றிய வரலாற்றுக் குறிப்புகள், காவை வடமலையப்பப் பிள்ளையன் கோயிலுக்குச் செய்த திருப்பணிகள், ஓவியச்சாலை முதலியன பற்றிய அரிய குறிப்புகள் உள்ளன.

### நாட்டுப்புறப் பாடல்கள்

சங்கரநயினார் கோயிலைச் சுற்றியுள்ள கிராமப்புறங்களில் சங்கரன், கோமதியம்மை பற்றிய நாட்டுப்புறப் பாடல்கள் பல வழங்குகின்றன. ஆய்வாளர் கள ஆய்வின்போது அரிதின் முயன்று அவற்றைத் தொகுத்தார்.

அவற்றில் இதுவரை அச்சுவடிவம் பெறாத பாடல்கள் சில ஆய்வுக்குப் பயன்படுத்தப் பெற்றுள்ளன.

### கட்டுரைகள்

தனி நூல்களிலும், இதழ்களிலும் சங்கர நயினார் கோயிலைப் பற்றி அறிஞர் சிலர் கட்டுரைகளை எழுதியுள்ளனர். இவை திருத்தல அறிமுகக் கட்டுரைகளே; ஆய்வுக் கட்டுரைகள் அல்ல. இருப்பினும் இவை ஆய்வின் துணை மூலங்களாகப் பயன்படுகின்றன.

### மற்றவை

பழமொழிகளும், உலக வழக்குத் தொடர்களும், செவிவழிச் செய்திகளும் இன்ன பிறவும் ஆய்வுக்கு உதவின. இத்தகைய ஆதாரங்களைக் கொண்டு இந்த ஆய்வேடு முழு நிறைவான வடிவத்தைப் பெற்றுள்ளது.

## கருதுகோள்

சைவ வைணவ சமய ஒருமைப்பாட்டைக் குறிப்புணர்த்துவதாய் சங்கரநயினார் கோயில் அமைந்துள்ளதாகக் கருதவியலும் என்பது இவ்வாய்வின் கருதுகோளாகும்.

## ஆய்வின் நோக்கம்

மேற்குறித்த கருதுகோளை ஆய்கின்ற போக்கில், சங்கரநயினார் கோயிலின் தனிப்பெரும் மாண்புகளை எடுத்துக்காட்டுவதே, இந்த ஆய்வேட்டின் நோக்கமாகும்.

## ஆய்வின் பகுப்பு

இந்த ஆய்வேடு ஐந்து இயல்களைக் கொண்டுள்ளது. இவ்வியல்களைப் பின்வருமாறு வரிசைப்படுத்தலாம்.

இயல் ஒன்று : சங்கர நயினார் கோயில் வரலாறு

இயல் இரண்டு : சங்கர நயினார் கோயில் அமைப்பு

இயல் மூன்று : சங்கர நயினார் கோயில் திருவிழாக்களும், சமூக இயைபும்

இயல் நான்கு : சங்கர நயினார் கோயில் சார்ந்த இலக்கியங்கள்

இயல் ஐந்து : சைவ-வைணவ ஒருமைப்பாடும் சங்கர நயினார் கோயிலும்

**இயல் ஒன்று – சங்கரநயினார் கோயில் வரலாறு**

ஆய்வேட்டின் முதலியல் ஆய்வுக்கு அடிப்படைகளை அமைக்கின்றது. இதன் தொடக்கத்தில் சிவ வழிபாட்டின் வளர்ச்சியும், பாண்டிய நாட்டின் திருத்தலங்கள் சிலவற்றின் வரலாறும் தொகுத்துரைக்கப்பெற்றுள்ளன.

அடுத்துத் திருத்தலம், சங்கர நாயினார், கோமதியம்மைக்கு வழங்குகின்ற பெயர்களும், அவற்றின் விளக்கங்களும் விவரிக்கப்பெற்றுள்ளன. சங்கரன், சங்கர நயினார், சங்கர நாராயணர் ஆகிய முப்பெரும் பெயர்களும் சிறப்பாகத் தனித்தனியே ஆராயப்பெற்றுள்ளன.

கி.பி 11ஆம் நூற்றாண்டில் உக்கிர பாண்டியன் சங்கர நயினார் கோயிலை உருவாக்கினான். இந்தக் கோயிலுக்கு உக்கிர பாண்டியனும், பாண்டியர் பிறரும் செய்த திருப்பணிகள் பல. எனவே, ஆய்வுக்காகப் பாண்டியர் வரலாற்றை மிகச் சுருக்கமாக அறிய வேண்டிய தேவை ஏற்படுகிறது.

மன்னர், சமீன்தார், அடியார் எனப் பல்லோர் இக்கோயிலுக்குச் செய்த அறப்பணிகளையும் எடுத்துக் காட்டுவதாக இவ்வியல் அமைந்துள்ளது. சிறப்பாகக் காவைவடமலையப்பப்பிள்ளையனும், மாவீரன் பூலித்தேவனும் கோயிலுக்குச் செய்த திருப்பணிகளையும் இதே இயல் எடுத்துரைக்கின்றது.

கோயிலின் அறங்காவலர் செய்த திருப்பணிகள் பல. கோயிலைச் சார்ந்த வரலாற்றுக் குறிப்புகள் இரண்டு உண்டு. அவற்றையெல்லாம் உணர்த்துவதோடு கோயில் நிர்வாகம், வரவு செலவின விவரம் ஆகியனவற்றையும் இந்த இயல் விளக்குகிறது.

கோயிலைச் சார்ந்த கல்வெட்டுகளைப் பற்றிய ஆய்வுடன் இவ்வியல் முற்றுப்பெறுகிறது.

**இயல் இரண்டு - சங்கரநயினார் கோயிலின் அமைப்பு**

சங்கரநயினார் கோயில் இப்போது அமைந்துள்ள முழு அமைப்பையும் இரண்டாம் இயல் விளக்குகிறது.

கோமதியம்மன், சங்கரநாராயணர், சங்கரலிங்கர் ஆகிய தெய்வங்களின் தனித்தனிச் சன்னிதிகள், தனித்தனி கோயில்களைப் போலவே திருக்காட்சி தருவது கோயிலின் ஒரு தனிச்சிறப்பு என்பது எடுத்துரைக்கப்படுகிறது.

கோயிலில் அமைந்துள்ள பரிவாரத் தெய்வங்களின் சன்னிதிகளும், மண்டபங்களும், திருச்சுற்றுகளும் அவற்றின் அமைப்புகளும், அழகுகளும் இவ்வியலில் விவரிக்கப்பட்டுள்ளன.

மேலும், கோயிலில் அமைந்துள்ள அனைத்துச் சிற்பங்களும், ஓவியங்களும் ஆய்வுக்கு உட்படுத்தப் பெற்றுள்ளன.

சுருங்கக் கூறுவதாயின் இவ்வியல், கோயிலின் கட்டமைப்பை வரலாற்று முறையில் ஆராய்கிறது.

**இயல் மூன்று - சங்கர நயினார் கோயில் திருவிழாக்களும், சமூக இயைபும்**

நாள், வாரம், பட்சம், மாதம், ஆண்டு ஆகிய ஐந்து காலங்களில் நிகழ்கின்ற வழிபாடுகளைப் பஞ்ச பருவ வழிபாடுகள் என்று ஒரு தொகுப்பாகக் கூறுவது வழக்கம். பஞ்ச பருவ வழிபாடுகள் அனைத்தும் கோயிலில் முழு நிறைவாக நிகழ்கின்றன. இவற்றின் விளக்கங்கள் இந்த இயலில் கூறப்பெற்றுள்ளன.

கோயிலில் ஆண்டு தோறும் நடைபெறுகின்ற சித்திரைத் திருவிழாவும் 'ஆடித்தவசு' திருவிழாவும் உச்சநிலைச் சிறப்புடையன.

'ஆடித்தவசு' விழாவின் புராண வரலாற்றுப் பின்னணி, நடைபெறுகின்ற முறைகள், தத்துவ உட்பொருள்கள், முதலியனவற்றை இவ்வியல் விளக்குகிறது.

குடமுழுக்குப் பெருவிழாவும் கி.பி.1934ஆம் ஆண்டு கோயிலில் சிறப்பாக நடைபெற்றது. இதைப்பற்றிய விவரமும் இந்த இயலில் உள்ளது.

**இயல் நான்கு – சங்கரநயினார் கோயில் சார்ந்த இலக்கியங்கள்**

சங்கரநயினார் கோயிலைச் சார்ந்த இலக்கியங்களைப் பற்றிய விவரங்களை இவ்வியல் தொகுத்துரைக்கிறது.

இக்கோயில் சார்ந்த இலக்கியங்கள் வரலாற்று மூலங்களாக மட்டுமே கொள்ளப்பெற்றுள்ளன என்பது இங்குக் குறிப்பிட வேண்டிய ஒன்றாகும். எனவே அவ்விலக்கியங்களின் இலக்கிய நயம் ஏதும் ஆயப்பெறவில்லை என்பது அறிய வேண்டியதாகும். சங்கர நயினார் கோயிலின் தல வரலாற்றைக் கி.பி.12ஆம் நூற்றாண்டில் சீவல மாற பாண்டியனார் இயற்றினார். இந்நூலைத் தழுவியே இதற்குப் பின் தோன்றிய கோயிலைச் சார்ந்த அனைத்து நூல்களும் எழுதப்பெற்றன. எனவே, கோயிலைப் பற்றியறிவதற்கு இந்நூலே முதல் நூலும், மூலநூலும் ஆகும்.

‘சங்கரலிங்க உலா’ என்ற சிற்றிலக்கியமும் குறிக்கத்தக்க மற்றொரு நூலாம். மற்ற நூல்கள் அனைத்தும் சங்கரலிங்கரையும், கோமதியம்மனையும் வணங்கி வழிபடுகின்ற வழிபாட்டு நூல்களாக இருக்கின்றன. இவ்விலக்கியங்கள் வழி உணரலாகும் இக்கோயில் பற்றிய வரலாற்றை இவ்வியல் ஆய்கிறது.

**இயல் ஐந்து - சைவ-வைணவ ஒருமைப்பாடும் சங்கர நயினார் கோயிலும்**

சைவமும் வைணவமும் மிகப் பழங்கால முதலே தமிழகத்தில் செல்வாக்குப் பெற்றிருந்தன. இவை நிகராகவே வளர்ந்தன. ஆனால் சில காரணங்களால் முரண்பட்டன.

முரண்பாடு முற்றியபோது சமூகங்களிடையே பூசல்களும் எழுந்தன. அவற்றைக் களைய வேண்டிய இன்றியமையாமை சமயப்பெரியோர்களுக்கு ஏற்பட்டது. சமயங்கள் பலவாயினும்அவை நாடும் பரம்பொருள் ஒன்றே என்பதை மக்களுக்கு உணர்த்த அப்பெரியோர்கள் பல வழிகளில் முயன்றனர். அவ்வழிகளில்

ஒன்று, மக்களால் வெவ்வேறாகக் கருதப்பட்ட இறையுருவங்களை இணைத்து ஒரே மூர்த்தமாகக் (திருவுருவாக) காட்டுவது. இவ்வகையில் அமைந்ததே சங்கரநாராயணர் திருவுருவமாகும்.

சங்கர நாராயண வடிவ வரலாறு; இந்த வடிவத்தைச் சைவ, வைணவ அடியார்கள் வருணித்த முறைகள் முதலியன இந்த இயலில் இடம் பெறுகின்றன.

சிவனும், திருமாலும் சங்கப் பாடல்களில் இரு பெருந்தெய்வங்களாக மதிக்கப்படுகின்றனர்.

சங்க இலக்கியங்களுக்குப் பின் எழுந்த சிலப்பதிகாரம், மணிமேகலை ஆகிய காப்பியங்களிலும் இவ்விரு தெய்வங்கள், வழிபாட்டு முறைகள் பற்றிய குறிப்புகள் காணப்படுகின்றன. ஆனால் பக்தி இயக்கக் காலத்தில் இவ்விரு சமயங்களும் முரண்பட்டுள்ளன.

முரண்பாட்டைக் களைய வேண்டும் என்பதற்காக மேற்கொள்ளப்பட்ட பல முயற்சிகளை, நடவடிக்கைகளை இந்த இயல் விரிவாக ஆராய்கிறது.

இரு சமய ஒருமைப்பாட்டிற்காகச் சங்கரநயினார் கோயிலும் தன்னளவில் சில கடமைகளை நிறைவேற்றியுள்ளது. இதில் ஆறு சமயப் பரம்பொருள்களும் தரிசனம் தருகின்றனர்.

சங்கரநாராயண வடிவ வரலாறு, இரு சமய ஒருமைப்பாடு என்பன இந்த இயல் நுவல்கின்ற மையக் கருத்துகளாம்.

மேற்காட்டிய ஐந்து இயல்களில் கூறப்பெற்றுள்ள செய்திகளைத் தொகுத்து முடிவுரையாக அமைக்கப்பெற்றுள்ளது. அதன்பின் சங்கர நயினார் கோயிலின் வரைபடம், கள ஆய்வின் போது பெறப்பட்ட தகவல் பட்டியல், கோமதியம்பிகை, சங்கரநாராயணர் உள்ளிட்ட தெய்வங்கள் பலவற்றின் படங்கள், இக்கோயில் வரலாற்றோடு இயைபுடைய கதைகள் ஆகியவை பின்னிணைப்புகளாகத் தரப்பட்டுள்ளன.

**இரு விளக்கங்கள்**

இந்த ஆய்வேட்டைப் பற்றிய இரு விளக்கங்கள் இங்குக் குறிக்கத்தக்கன.

**கூறியது கூறல்**

மிகச் சில கருத்துகள் ஆய்வேட்டின் சில இடங்களில் மீண்டும் மீண்டும் பயின்று வருகின்றன. ஆய்வுக் கட்டுரைகளின் கட்டுக்கோப்புச் சீராக அமைவதற்காகவும், சில கருத்துகளை அடிக்கடி எழுத வேண்டிய தேவை இருப்பதாலும், அவற்றை வற்புறுத்தி வரையறுக்க வேண்டிய சூழ்நிலை இருப்பதாலும், கருத்துகள் எழுதப்பட்ட இடங்களில் தெளிவாகப் புரிய வேண்டும் என்பதாலும் ''கூறியன கூறப்பட்டன'' இவை ஆய்வேட்டின் குறைகளல்ல; குணமாகக் கருதத்தக்கன. கூறியன கூறப்பட்டாலும் அவை தெளிவாக அமைய வேண்டும் என்பதே குறிக்கோள்.

**வடசொற்கலப்பு**

இந்த ஆய்வேடு சமயத் தொடர்புடையது. தமிழில் சமயத் தொடர்பான கலைச் சொற்களுக்குப் பதிலாக வடமொழிச் சொற்களே வழங்கப் பெறுகின்றன. எனவே இவ்வாய்வில் வடசொற்கள் சில வந்து கலப்பதைத் தவிர்க்க முடியவில்லை.

வடசொற்கலப்புக்கு இரு வரம்புகள் பின்பற்றப்படுகின்றன 1.தெய்வங்களின் பெயர்கள் உள்ளன உள்ளவாறே எழுதப்பெற்றுள்ளன. 2. மக்கள் நூற்றாண்டுகளாக மரபின்படி மிக இயல்பாகப் பயன்படுத்துகின்ற வடசொற்களும் கலந்திருக்கின்றன. சில காட்டுகள் :- 1. அபிடேகம், 2. அர்ச்சனை, 3. ஆராதனை, 4. சக்தி, 5. சன்னிதி, 6. சாமி, 7. தரிசனம், 8. தலம், 9. திதி, 10. தீர்த்தம், 11. நட்சத்திரம், 12. பிரகாரம், 13. பிரசாதம், 14. பூசை, 15. மூர்த்தி, 16. வாகனம், 17. விமானம். ஆய்வேட்டில் விரவியுள்ள இத்தகைய வடசொற்கள் மிகக் குறைவே.

இவ்வாறு சங்கரநயினார் கோயில் -இலக்கிய வரலாற்று ஆய்வு எனும் இவ்வாய்வேடு அமைக்கப்பெற்றுள்ளது.

# இயல் ஒன்று

# சங்கர நயினார் கோயில் வரலாறு

சிவ வழிபாட்டின் வளர்ச்சியையும், பாண்டிய நாட்டுத் திருத்தலங்கள் சிலவற்றின் வரலாற்றையும் இவ்வியல் தொகுத்துக் கூறுகின்றது. மேலும் சங்கரன், சங்கர நயினார், சங்கர நாராயணர் ஆகிய முப்பெரும் பெயர்களைப் பற்றி ஆராய்வதாகவும், கோயில் திருப்பணிகள் - கோயில் நிர்வாகம் - வரவு செலவு விவரங்கள் குறித்து விளக்குவதாகவும், கோயில் தொடர்புடைய கல்வெட்டுச் செய்திகளை எடுத்துரைப்பதாகவும் அமைகின்றது.

## சிவ வழிபாட்டின் வளர்ச்சிப்படிகள்

### பழமையான வழிபாடு

சிவ வழிபாடு மிகப் பழமை வாய்ந்தது. அது தோன்றிய காலத்தை ஓரளவு கருதிக் கூறலாமேயொழியத் துல்லியமாகக் கணித்துக் கூற முடியாது. சிந்துவெளி மொகஞ்சதாரோ நாகரிகம் ஐயாயிரம் ஆண்டுகளுக்கு முற்பட்டது. இங்கே சிவலிங்கங்களும், யோகம் செய்கின்ற யோகிகளின் உருவம் பதித்த முத்திரைகளும் கிடைத்துள்ளன. இவை தொன்மைக்குரிய சிவ வழிபாட்டின் சான்றுகளேயாம். இதே போல, ஹரப்பாவில் கிடைத்துள்ள சில முத்திரைகள் சிவநெறியின் சிறப்புகளை வெளிப்படுத்துகின்றன. எனவே, சிவ வழிபாடு மொகஞ்சதாரோ, ஹரப்பா காலப் பழமையுடையது.

### ரிக்வேதத்தில் சிவ வழிபாடு

வேதங்களில் ரிக்வேதம் மிகவும் பழமையானது. இது உருத்திரனைக் குறிப்பிடுகின்றது. இவன் பெருஞ்சினமுடையவன்; சடையுடையவன்; அக்னியுடன் தொடர்புடையவன்; அக்னியாக இருப்பவனும் இவனே; இவன் விலங்குகளின் தலைவன் என்று அவ்வேதம் விளக்குகின்றது.

''ருத்ரன் ரிக் வேதத்தில் மிகத் தாழ்ந்த இடத்தையே பெறுகின்றான்''[1]

மிகக் கொடுமையானவனாகக் குறிப்பிடப்படுகின்ற ரிக் வேத உருத்திரன் வேறு; தமிழர் கண்ட சிவன் வேறு. மாநிறமுடையவன் உருத்திரன்; சிவப்பு நிறமுடையவன் சிவன். இது அடிப்படை வேறுபாடு. எனினும் உருத்திரனுக்கும் சிவனுக்கும் ஒருபுடை ஒப்புமைகள் மிகச் சிலவே உள்ளன; காலப்போக்கில் உருத்திரன் சிவனாக மதிக்கப்பட்டுப் பின்னர்ப் பரத்துவ நிலையை அடைகின்றான் என்பர்.

**லிங்க வழிபாடு**

சிந்து வெளி நாகரிக காலத்தில் சிவலிங்க வழிபாடு இருந்தது. அகழ்வாய்வின் போது சிவலிங்கங்கள் கிடைத்துள்ளன. வேத காலத்திற்கு முற்பட்ட கற்காலத்திலும் லிங்க வழிபாடு இருந்தது. இதிகாச காலத்தில், இராமன் லிங்கத்தை வழிபட்டான் என்பர்.

குடிமல்லம், களத்தூர், குடுமியான் மலை ஆகிய இடங்களில் பழங்காலத்தைச் சார்ந்த லிங்கங்கள் உள்ளன. இவை கி.பி. 2ஆம் நூற்றாண்டைச் சார்ந்தவை என்பது ஆய்வாளரின் முடிபு.[2]

**தொல்காப்பியத்தில் சிவன்**

தமிழின் மிகப் பழைய இலக்கண நூலான தொல்காப்பியம் 1. மாயோன், 2. சேயோன், 3. வேந்தன், 4. வருணன் என்ற நான்கு தெய்வங்களைக் குறிப்பிடுகின்றது.[3] சிவபெருமானைப் பற்றிய எந்தச் செய்தியும் தொல்காப்பியத்தில் இல்லை.

**சங்கப் பாடல்களில் சிவபெருமான்**

சிவனைப் பற்றிய பல குறிப்புகள் சங்கப் பாடல்களில் மலிந்து காணப்படுகின்றன. அவனது தோற்ற வடிவம் வரையறை செய்யப்பட்டிருந்தது.

**''கடவுள் நிலைஇய கல்லோங்கு நெடுவரை**
**வடதிசை எல்லை இமயம்''**[4]

என்றும்,

**''ஆலமர் கடவுள் அன்னநின் செல்வம்''**[5]

என்றும்,

**''காரியுண்டிக் கடவுள்''**[6]

என்றும் புலவர் சிவனைக் 'கடவுள்' என்று குறிப்பிடுகின்றனர். அனைத்து உயிர்களுக்கும், அனைத்துப் பொருள்களுக்கும் அப்பாற்பட்டு, எல்லை கடந்த இடத்தில் உள்ளவனும், அவற்றின் உள்ளிருந்து அவற்றைக் கடத்துபவனும் கடவுள் ஆவன் என்பர். ஆகவே கடவுளே பரம்பொருள்; கடவுளாகக் கருதப்பட்ட சிவனே பரம்பொருளாகப் போற்றப்பட்டான். பல தெய்வங்களின் வரிசையில் கடவுளான சிவனுக்கு முதன்மை இடம் இருந்தது எனலாம்.

**''நீரும் நிலனும் தீயும் வளியும்**
**மாக விசும்போ டைந்துடன் இயற்றிய**
**மழுவாள் நெடியோன் தலைவ னாக''**

என்று சிவனை 'மழுவாள் நெடியோன்' என்றும் 'தலைவன்' என்றும் மதுரைக் காஞ்சி குறிப்பிடுகிறது.[7]

## சிவனது தோற்றப் பொலிவு

சிவனது தோற்றப் பொலிவு குறித்துக் கீழ்க்காணும் வகையில் கூறுவர். சிவன் தாழ்ந்த நீண்ட சடையையுடையவன்;[8] முடிமேல் பிறைநிலாவைச் சூடியவன்;[9] கங்கையைத் தாங்கியவன்;[10] மூன்று கண்களையுடையவன்;[11] நெற்றியில் இமையா நாட்டமுடையவன்;[12] வேதத்தை ஓதுகின்ற வாயைக் கொண்டவன்;[13] நீல நிறமுடைய மிடற்றையுடையவன்;[14] மார்பில் கொன்றை மாலையைச் சூடியவன்;[15]

கையில் மழுப்படையைத் தரித்தவன்;[16] எட்டுக் கைகளையுடையவன்;[17] புலித் தோலாடையைப் புனைந்தவன்;[18] அவனுக்கு வாகனம் காளை;[19] கொடியின் இலச்சினையும் காளை.[20] உயிர்களைக் காக்கும் கடவுளும் அழிக்கும் கடவுளும் அவனே.[21] அவனது வண்ணம் அந்திவான் வண்ணம்; சண்பக வண்ணம்.[22] அவனுக்குரிய நட்சத்திரம் திருவாதிரையாம்.[23]

### சிவனது பல்வேறு வடிவங்கள்

பழங்கால மக்கள் சிவனைப் பல்வேறு வடிவங்களில் வழிபட்டனர். அவன் கயிலாய மலையில் உமையுடன் வீற்றிருப்பது சுகபோகி வடிவம்.[24] அறம் உரைக்கின்ற ஆலமர் செல்வனாக அமைந்திருப்பது தவயோகி வடிவம்.[25] நீல மணிமிடற்று ஒருவன் என்பது நீலகண்ட வடிவம்.[26] நீலமேனி வாலிழை பாகத்து ஒருவன் என்பது அர்த்தநாரி வடிவம்.[27] சிவனும், திருமாலும் சரிபாதியாய் இணைந்து திருக்காட்சி தருவது சங்கர நாராயணர் வடிவம்.[28] இவ்வாறு வெவ்வேறு வடிவங்களில் சிவனை வழிபட்டனர். சங்கப் பாடல்களில் இத்தனை வடிவ வேறுபாடுகள் சிவனைத் தவிர வேறு தெய்வங்களுக்குச் சுட்டப்படவில்லை என்பதும் இங்குக் குறிக்கத்தக்கது. இவ்வடிவங்கள் சிவ வழிபாட்டின் பழமையையும், பெருமையையும் காட்டுகின்றன.

### சிவனது வெற்றிப் பொலிவுகள்

சிவன் திரிபுரத்தை எரித்தான்.[29] இராவணன் கயிலாயத்தைக் கைகளால் பெயர்த்தெடுக்க, அவன் இடர்ப்படும்படி கயிலையைக் கால் விரலால் அழுத்தியவன் சிவன்.[30] இவை இவனது சிறந்த வெற்றிகளாகும் என்பர்.

### மக்கள் சூடிய சிவபெருமானின் பெயர்கள்

இறையனார், உருத்திரனார், சத்திநாதர், பெருந்தேவனார், பேரெயில் முறுவலார், வெண்பூதியார் முதலிய சிவனுக்குரிய பல பெயர்களை மக்கள் சூட்டிக் கொண்டனர். பெருந்தேவன் எனில் மகாதேவன் என்றும் பேரெயில் முறுவலார்

எனில் முறுவலால் முப்புரங்களை எரித்தவன் என்றும் வெண்பூதி எனில் உடம்பெல்லாம் வெண்ணீற்றைப் பூசியவன் என்றும் பொருள்படும்.

(கடியலூர்) உருத்திரங்கண்ணனார் என்ற பெயர் சற்று உற்று நோக்கத்தக்கது. உருத்திரன் என்பது சிவனைக் குறிப்பது. கண்ணன் = திருமாலின் ஓர் அவதாரம். ஏற்றமிகு இவ்விருவர் பெயர்களும் இணைந்தன. இப்பெயர் 'சங்கர நாராயணர்' என்ற பெயருக்கு ஒரு முன்னோடியாகவும் கொள்ளத்தக்கது.

**சிவச்சின்னங்கள்**

சைவ சமயத்தின் புறச்சின்னம் திருநீறு; அகச்சின்னம் ஐந்தெழுத்து மந்திரம் ஆகும்.

திருநீற்றைக் கலித்தொகையின் கடவுள் வாழ்த்து முதன்முதலாகக் குறிக்கின்றது.[31]

மேற்கண்டவற்றால், சங்க காலத்தில் சிவ வழிபாடு ஓர் உன்னதமான நிலையில் இருந்தது என்பது புலனாகின்றது. செங்கற்களால் கட்டப் பெற்ற சிவன் கோயில்கள் இருந்தன; அக்கோயில்களில் சிவனைச் சிற்ப வடிவங்களிலும், ஓவிய வடிவங்களிலும் பக்தர்கள் தினமும் வழிபட்டனர்.

**சிலப்பதிகாரம்**

சங்கப் பாடல்களைத் தொடர்ந்து சிலப்பதிகாரம் தோன்றியதால், சிவனைப்பற்றி அவை கூறிய கருத்துகள் பலவற்றைச் சிலப்பதிகாரமும் எடுத்துரைக்கின்றது.

ஐந்தெழுத்து மந்திரத்தையும் எட்டெழுத்து மந்திரத்தையும் நிகராகப் போற்றுகிறது சிலப்பதிகாரம்.[32]

**''நுதல்விழி நாட்டத் திறையோன் கோயிலும்''**[33]

''.... பிறவா யாக்கைப் பெரியோன் கோயிலும்''[34]

என்று சிவனைச் சிறப்பித்து அவனுக்குத் தனிக்கோயில் இருந்ததை இளங்கோவடிகள் சுட்டுகின்றார். சிவன், இமையா நாட்டமுடைய இறைவன்; பிறவாத யாக்கையையுடைய பெரியவன்; பல தெய்வங்களின் வரிசையில் இவனுக்கே முதன்மையிடம் இருந்தது.

வேட்டுவவரியில் சிவன், உமையைப் பற்றிய குறிப்புகள் பல, விரிவாகக் காணப்படுகின்றன. 'பாகம் ஆளுடையான்' - 'திங்கள் வாழ் சடையான்' என்று அடிகள் சிவனை வருணிக்கின்றார்.[35]

சேரன் செங்குட்டுவன் கண்ணகிக்குப் படிமம் அமைக்க, இமயத்தில் கல்லெடுக்க வடதிசை நோக்கிப் பயணம் செல்கின்றான். சிவன் கோயிலுக்கு வந்து, வழிபட்டு, வலம் வந்து, அக்கோயிலின் சேடத்தைத் தன் முடிமீது சூடுகின்றான்.[36]

சேரன் செங்குட்டுவன் அவைக்கு வந்த சாக்கையன் என்பவன், சிவனாடிய கொடுகொட்டி என்ற கூத்தை ஆடிக்காட்டுகிறான்.[37]

இத்தகு சான்றுகளால் சிலப்பதிகார காலத்திலும் சிவ வழிபாடு சிறந்திருந்தது என்பது தெரிகிறது.

**மணிமேகலை**

''நுதல்விழி நாட்டத் திறையோன் முதலாப்
பதிவாழ் சதுக்கத்துப் பூத மீறாக''[38]

என்று மணிமேகலையும் சிவனையே முதல்வனாய்க் குறிக்கின்றது.

கி.பி.2ஆம் நூற்றாண்டு வரை தோன்றிய பாடல்களிலும், நூல்களிலும் 'சிவன்' என்ற சொல் இல்லை. 'சைவம்' என்ற சொல் மணிமேகலையில் முதன் முதல் காணப்படுகிறது.[39]

வஞ்சி மாநகரில் வாழ்ந்த சமயவாதிகள் பலராவர். இவர்களில் ஒருவன் சைவவாதி. அவனிடம் மணிமேகலை ‘‘உன் கடவுள் எத்தகையது’’ என வினவினாள். அவன் சிவனின் அரிய தோற்றத்தையும், செயல்களையும் தொகுத்துக் கூறினான்.[40]

இதுகாறும் கண்டவற்றால் சிவலிங்க வழிபாடும், சிவவடிவ வழிபாடும் தொன்மையானவை என்பதும், சமுதாயப்பிரிவினர் தாம் விரும்பிய தெய்வங்களைத் தாம் விரும்பிய முறைகளில் வழிபட்டனர் என்பதும், அவர்கள் வழிபட்ட பல தெய்வங்களில் முதன்மைச் சிறப்புடையவன் சிவனே என்பதும் புலப்படுகிறது.

சிவனது வடிவங்கள் பல; அவன் எழுந்தருளிய கோயில்களும் பல; அவற்றில் தினமும் வழிபாடுகள் நடைபெற்றன. அவனைப் பற்றிய புராணக் கதைகள் அவனது மேன்மைகளை மேலும் மேம்படுத்திக் காட்டின.

கி.பி. இரண்டாம் நூற்றாண்டளவில் ‘சைவ சமயம்’ சமுதாயத்தில் பரவியிருந்தது. சைவவாதிகள், மாற்றுச் சமயக் கொள்கைகளை மறுத்துத் தம் சமயக் கொள்கைகளை நிலைநாட்டினர். சமய முரண்பாடுகள் இருந்தன. மன்னர், சமுதாயத்தில் பரவியிருந்த பல சமயங்களையும் நிகராக மதித்துப் போற்றினர். தாமும் கோயில்களுக்குச் சென்று வழிபட்டு மற்றவர்களுக்கு வழிகாட்டினர். எனவே, சிவ வழிபாடும், சைவ சமயமும் வேகமாக வளர்ச்சி பெறத் தொடங்கின.

### மாமல்லபுரத்தில் சிவன் படிமங்கள்

சிவனது மிகப் பழைய கற்சிலை வடிவங்களை மாமல்லபுரத்தில் காணலாம். முன்னர்ச் சுதையால் செய்யப்பட்ட கடவுட் படிமங்களாகவும், வண்ண ஓவியங்களாகவும் அமைந்த சிவனின் வடிவங்கள் பல, பின்னர் கற்சிலை வடிவங்களாக மாற்றி அமைக்கப்பட்டன. மாமல்லபுரத்தில் உள்ள சிவனின் பல்வேறு சிலை வடிவங்களையும், அவை அமைந்துள்ள இடங்களையும் பின்வருமாறு தொகுக்கலாம்.[41]

**தர்மராசா ரதம்**

சோமாஸ்கந்தர், சந்திரசேகரர், தட்சிணாமூர்த்தி, அர்த்தநாரி, பைரவர், தாண்டவமூர்த்தி, நந்தீச அனுக்கிரக மூர்த்தி, சண்டேச அனுக்கிரக மூர்த்தி, கங்காதரர், சங்கரநாராயணர்.

**கடற்கரைக் கோயில் :** 1. திருபுராந்தகர், 2. ஏகபாததிரி மூர்த்தி.

**அர்ச்சுனன் ரதம் :** 1. விருஷபாந்தக மூர்த்தி.

**அர்ச்சுனன் தவம்:** 1. பாசுபத மூர்த்தி.

மேற்கண்ட பதினான்கு வடிவங்களில் சங்கப் பாடல்கள் புனைந்து பாடாத வடிவங்கள் ஆறு. அவை வருமாறு :-

சோமாஸ்கந்தர், பைரவர், நந்தீச அனுக்கிரக மூர்த்தி, கண்டேச அனுக்கிரக மூர்த்தி, ஏகபாத திரிமூர்த்தி, பாசுபத மூர்த்தி.

மற்றவை குறிப்பாகவோ, வெளிப்படையாகவோ புனைந்துரைக்கப் பட்டுள்ளன.

**சங்கரநாராயணர் வடிவம்**

1. ஆதிவராகர் குகை திருமாலுக்குரிய கோயில், 2. தர்மராசா ரதம் சிவனுக்குரிய கோயில். இந்த இரு கோயில்களிலும் சங்கர நாராயணர் வடிவம் காணப்படுகிறது என்பது சிறப்பாகக் குறிக்கத்தகுந்தது.

## கி.பி.7ஆம் நூற்றாண்டு முதல் 12ஆம் நூற்றாண்டு வரை

கி.பி.2ஆம் நூற்றாண்டு முதல் சைவ சமயம் வளர்ச்சி பெறத் தொடங்கியது. கி.பி.7ஆம் நூற்றாண்டு முதல் அதன் வளர்ச்சி வேகம் மிகைப்பட்டது. மன்னர்களாலும், சமயக் குரவர்களாலும், நாயன்மார்களாலும், பக்தி இலக்கியங்

களாலும், திருத்தலத் தோற்றங்களாலும், கலைகளாலும், கோயில்களாலும், சிவ பக்தர்களாலும் இன்னபிற காரணங்களாலும் சைவ சமயத்தின் வளர்ச்சி 11, 12ஆம் நூற்றாண்டுகளில் உச்சநிலையை எய்தியது.

**பாண்டிய நாட்டுத் திருத்தலங்கள்**

பாண்டியர்கள் இயல்பாகவே கொண்ட பக்தி உணர்வாலும், அவர்களது தெய்விகத் திருப்பணிகளாலும் நாட்டில் திருத்தலங்கள் பல பல்கின. அவற்றுள் தேர்ந்த சிலவற்றை இனிக் காணலாம்.

**இராமேச்சுவரம்**

இராமன் வழிபட்ட ஈச்சுவரம் இராமேச்சுவரம். நாட்டில் பல இடங்களிலிருந்தும் இராமேச்சுவரத்திற்குப் பக்தர்கள் வருகை புரிகின்றனர். காசிக்கு இணையான தென்னாட்டுப் புண்ணியத்தலம் இது.

**மதுரை**

மதுரை மாநகரின் வளங்களையும், நலங்களையும் மதுரைக் காஞ்சியும், சிலப்பதிகார மதுரைக் காண்டமும் விரிவாக விவரிக்கின்றன. மதுரையில்,

> **‘‘நுதல்விழி நாட்டத் திறையோன் கோயிலும்**
> **உவணச் சேவல் உயர்ந்தோன் நியமமும்**
> **மேழி வலனுயர்த்த வெள்ளை நகரமும்**
> **கோழிச் சேவற் கொடியோன் கோட்டமும்’’**[42]

இருந்தன. மதுரையில் மக்கள் பல தெய்வங்களுக்குக் கோயில்களை அமைத்து அவரவர் விரும்பிய தெய்வங்களை வழிபட்டனர்.

### ஆறுபடை வீடுகள்

முருகனுக்குரிய ஆறுபடை வீடுகளில் திருப்பரங்குன்றம், திருச்சீரலைவாய், திருவாவினன்குடி, பழமுதிர்ச்சோலை (திருமாலிருஞ்சோலை, அழகர்மலை) ஆகிய நான்கு படைவீடுகள் பாண்டிய நாட்டைச் சார்ந்தவை. மற்றும், கழுகுமலையும், திருமலையும் ''குன்று தோறாடலில்'' அடங்குகின்ற பாண்டிய நாட்டு மலைகளாம்.

### ஐந்து அம்பலங்கள்

| | | |
|---|---|---|
| பொன்னம்பலம் | - | சிதம்பரம் |
| இரத்தின அம்பலம் | - | திருவாலங்காடு |
| வெள்ளியம்பலம் | - | மதுரை |
| தாமிர அம்பலம் | - | திருநெல்வேலி |
| சித்திர அம்பலம் | - | திருக்குற்றாலம் |

இவற்றில் இறுதி மூன்று அம்பலங்களும் பாண்டிய நாட்டில் உள்ளன.

### சக்தி பீடங்கள்

மதுரையில் அருளாட்சி செய்கின்றவள் மீனாட்சியம்மை. தென்னெல்லையில் வீற்றிருக்கின்றவள் குமரியம்மை. ஸ்ரீ வில்லிபுத்தூரில் ஆண்டாளம்மையார் திருக்கோலம் பூண்டுள்ளார். சங்கரநயினார் கோயிலில் அன்னை கோமதி எழுந்தருளியுள்ளார். இத்தலங்கள் அனைத்தும் இறைவிகளால் ஏற்றம் பெற்றவை. இத்தகைய சக்தி பீடங்கள் சில பாண்டிய நாட்டில் இருக்கின்றன.

### வைணவத் திருத்தலங்களும், சைவத் திருத்தலங்களும்

கி.பி.7,8,9ஆம் நூற்றாண்டுகளுக்குப் பிறகு பாண்டிய நாட்டில் திருத்தலங்களின் எண்ணிக்கை கூடியது. பாண்டிய நாட்டிலுள்ள திவ்ய தேசங்கள் பதினெட்டு.[43] தேவாரப் பாடல்பெற்ற திருத்தலங்கள் பதினான்கு.[44]

## வேறுசில திருத்தலங்கள்

மேலும், தனுஷ்கோடி, ஆவுடையார் கோயில் (திருப்பெருந்துறை) திருவாதவூர், பாபநாசம், உத்தரகோச மங்கை, மன்னார் கோயில் முதலியன பாண்டிய நாட்டுத் திருத்தலங்களே.

### *சங்கர நாராயணர் கோயில்*

திருக்குறுங்குடி என்ற வைணவத் திருத்தலத்தில், நின்ற நம்பி, கிடந்த நம்பி ஆகியோர் சன்னிதிகளுக்கிடையில் சிவ சன்னிதியும், பைரவ சன்னிதியும் இருப்பது ஒரு தனிச்சிறப்பு.

மாறாகத் திருநெல்வேலிச் சிவன் கோயிலில் திருமாலின் சன்னிதியும் உள்ளது. முதலில் சிவனுக்கும் திருமாலுக்கும் தனித்தனி கோயில்கள் இருந்தன. அடுத்து, திருமாலுக்குரிய கோயிலில் சிவனுக்குத் தனிச் சன்னிதியும், சிவனுக்குரிய கோயிலில் திருமாலுக்குத் தனிச் சன்னிதியும் அமைந்தன. இருவரும் வடிவத்தால் இணைந்து சங்கர நாராயணராகத் திருக்காட்சி தருகின்ற திருத்தலம் சங்கரன் கோயில். இத்திருத்தலம் கி.பி. 1022ஆம் ஆண்டு தோன்றிய பாண்டிய நாட்டு சிவத் தலமாகும். தமிழகத்தில் கி.பி.11ஆம் நூற்றாண்டில் சிவ வழிபாடு உச்சநிலையில் இருந்தபோது, பாண்டிய நாட்டில் திருத்தலங்கள் பல தோன்றின. அப்பொழுது சங்கரன் கோயில் உருவானது.

## பெயர் வகைகள்

### திருத்தலத்தின் பெயர்கள்

சங்கரன்கோயில் அல்லது சங்கரநயினார் கோயில் என இன்று வழங்கப்பெறும் இத்திருத்தலம் புன்னைவனம், பாம்புக்கோயில், கூழைநகர், இராசை, இராசபுரம் ஆகிய பெயர்களாலும் வழங்கப்பெற்றுள்ளமையை நூல் வழக்கு மற்றும் உலக வழக்கு ஆகிய இவ்விரு வழக்குகளிலும் காண முடிகிறது. இத்திருத்தலத்திற்கு இப்பெயர்கள் வழங்குவதற்கான காரணங்களை இனிக் காண்போம்.

## புன்னை வனம்

சங்கர நயினார் கோயில் என்ற திருத்தலம் உருவாவதற்கு முன்னால் அப்பகுதி வெறும் புன்னை வனக் காடாகக் கிடந்தது. ஆகவே, இதற்குப் 'புன்னை வனம்' என்ற பெயர் இருந்தது. கோயிலின் திருத்தல மரமும் புன்னையே.

புன்னை வனத்தை நாகவனம் என்றும் கூறுவர். நாகம் - புன்னை.

புன்னை வனத்தைப் புன்னை வனப்பேரி என்றும் குறித்தனர். மற்றும், புன்னைத் தலம், புன்னையூர், புன்னைக்கா என்றெல்லாம் இத்தலத்தை அழைப்பதுண்டு. எனவே புன்னைமரக் காடாக விளங்கியமையால் புன்னைவனம் என்ற பெயர் இத்திருத்தலத்திற்கு அமைந்தது என்பதும், இத்தலத்தின் தலமரமாகப் புன்னைமரம் விளங்குவதும் இக்காரணம் பற்றியே என்பதும் புலனாகின்றன.

## பாம்புக்கோயில் : கூழை நகர்

சங்கரன் கோயிலுக்குப் பாம்புக் கோயில் என்ற மற்றொரு பழைய பெயரும் இருந்தது.

> **''நெல்லை நாட்டுக் கோயில்களுள் ஒன்று சங்கர நயினார் கோயில். ஆதியில் அது புற்றுக் கோயிலாக இருந்திருக்க வேண்டும் என்று தோன்றுகிறது. இன்றும் பாமர மக்கள் அதனைப் பாம்புக் கோயில் என்றும் வழங்குவர்.''**[45]

என்பது இதற்குச் சான்று.

பாம்புக் கோயில் என்பது உலக வழக்கு; 'கூழை நகர்' என்பது இலக்கிய வழக்காம்.

### கூழை நகர்

கூழை எனில் பாம்பு எனவும் நகர் எனில் கோயில் எனவும் பொருள்படும். பாம்புக் கோயில். இறைவன் பாம்பு வடிவத்தில் மறைந்து உறைகின்ற கோயில் 'கூழை நகர்' என்ற பெயரைப் பெறுகின்றது.

### ராசை

சங்கரன் கோயிலுக்கு ராசபுரம், ராசை, சீராசைபுரம், சீராசை, வரராசை புரம், வரராசை என்ற பெயர்களும் வழங்குகின்றன. சங்கரன் கோயிலைச் சார்ந்த பல இலக்கியங்களில் இப்பெயர்கள் பயில்கின்றன.[46]

'ராசபுரம்' என்பது 'ராசை' என்று மருவியது. 'ராசன்' உருவாக்கிய ஊர் ராசபுரம் அல்லது 'ராசை'.

ஸ்ரீ ராசை என்ற வடமொழிப் பெயர் தமிழில் 'சீராசை' என்று வழங்குகின்றது. எல்லாரும் விரும்புகின்ற, திருமகள் உறைகின்ற, தெய்வத்தன்மையுடைய ராசைக்குச் 'சீராசை' என்பது ஒரு பெயராயிற்று. இறைவன் அருளிய வரத்தால் உருவான 'ராசை' வரராசை என்று ஆயிற்று.

மேற்கண்ட பெயர்கள் அனைத்தும் 'ராசபுரம்' என்ற பெயருடன் தொடர்புடையன. தல வரலாற்றின்படி உக்கிர பாண்டியன் உருவாக்கிய ஊர் 'ராசபுரம்', இதன் வேற்று வடிவங்களான ராசை முதலிய பெயர்கள் உக்கிர பாண்டியனையும் அவனது பெருமைகளையும் குறிப்பாகச் சுட்டுகின்றன.

### சங்கரன் கோயில்

புன்னை வனக் காட்டுப் பாம்புக் கோயிலை நாளடைவில் சங்கர நயினார் கோயில் என்றும், சங்கர நாராயணர் கோயில் என்றும் வழங்கினர். 'சங்கர நயினார் கோயில்' என்பது சங்கரன் கோயில் என்று சுருங்கியது. இப்போது பெருவழக்கிலுள்ள திருத்தலப் பெயரும் இதுவேயாம்.

மேலும், மக்கள் இதனைத் ''தவசு கோயில்'' என்றும், ''ஆவுடையார் கோயில்'' என்றும் கூறுகின்றனர்.

தமிழகத்தில் அம்பர்ப்பெருந்திருக்கோயில், ஆண்டார் கோயில் (வடுகூர்), ஆலக்கோயில், ஆரூர்ப் பூங்கோயில், கச்சூர் ஆலக்கோயில், கண்ணன் கோயில், கரக்கோயில், காளையார்கோயில் முதலிய பல திருத்தலப் பெயர்கள் 'கோயில்' என்று முடிகின்றன. இந்த வரிசையில் சங்கரன் கோயிலும் சேர்கின்றது.

'வைத்தீசுவரன் கோயில்' என்ற பெயர் கோயிலுக்கும், ஊருக்கும் ஒரே பெயராக அமைந்திருப்பதைப் போலச் 'சங்கரன் கோயில்' என்ற பெயரும் கோயிலையும் ஊரையும் ஒருங்கே குறிப்பிடுகின்றது. இத்தகைய பெயர்கள் தனிச்சிறப்புடையன.

> ''சோழ நாட்டின் வைத்தீஸ்வரன் கோயிலுக்கு எவ்வளவு சிறப்பு உண்டோ அவ்வளவு சிறப்பு சங்கரநயினார் கோயிலுக்கும் உண்டு.

என்று அந்த இரண்டு திருத்தலங்களை இணைத்து மதிப்பிடுகின்றார் டாக்டர் உ.வே.சாமிநாதையர் அவர்கள்.[47]

சங்கரன் கோயிலின் மீது மிக்க ஈடுபாட்டைக் கொண்ட மக்கள் தாம் வாழும் வேறு சில ஊர்களிலும் 'சங்கரன் கோயில்'களை உருவாக்கிக் கொண்டனர். காட்டாக, தென்காசியிலும் அம்பாசமுத்திரத்திலும் 'சங்கரன் கோயில்கள்' உண்டு. சங்கரன் கோயிலில் நடைபெறுகின்ற ஆடித்தவசு விழா இங்கும் நடைபெறுகின்றது.

திருத்தலங்களுக்குரிய மேற்கண்ட பெயர்களை நான்காக வகைப்படுத்தலாம்.

| | | | |
|---|---|---|---|
| 1. | சங்கரன் கோயில் | - | இறைவனுக்கு ஏற்றம் |
| 2. | ராசை | - | மன்னனுக்கு ஏற்றம் |
| 3. | புன்னை வனம் | - | தலமரத்திற்கு ஏற்றம் |
| 4. | கூழை நகர் | - | பாம்புக்கு ஏற்றம் |

மற்றும், இத்திருத்தலத்தைப் ‘பூகைலாசம்’ என்றும் பக்தர்கள் சிறப்பித்துக் கூறுகின்றனர். பூலோக கைலாசம் என்பது பூகைலாசம் எனச் சுருக்க வடிவம் பெற்றது போலும்.

## இறைவனது திருப்பெயர்கள்

### வன்மீகநாதன்

திருவாரூரும், திருவொற்றியூரும் மிகவும் பழமை வாய்ந்த திருத்தலங்கள் ஆகும். ஆகவே, இவைகளுக்கு ‘ஆதிபுரி’ என்ற பெயரும் இருக்கின்றது. இவை இரண்டிலும் எழுந்தருளியுள்ள இறைவனின் பெயர் வன்மீக நாதன் என்பதாகும். புற்று எனும் தமிழ்ச் சொல்லுக்கு நேரான வடசொல் வன்மீகம். புற்றில் வாழும் இறைவனாதலால் இங்குள்ள இறைவன் வன்மீகநாதன் என அழைக்கப் பெறுகின்றான்.

சங்கரன் கோயில் இறைவனும் புற்று வடிவினன். எனவே, இவனும் வன்மீகநாதனாவன். கருவறையின் வடமேற்கில் புற்று உள்ளது; இதனைப் பக்தர்கள் பக்திப் பரவசத்துடன் பணிந்து வழிபடுகின்றனர். வன்மீக நாதனுக்குப் புற்றும் ஒரு சிறு கோயிலே. புற்றில் கூழைப்பாம்பு வடிவத்தில் அவன் உறைகின்றான் என்று மக்கள் நம்புகின்றனர். எனவே புற்றை வழிபடுகின்றனர்.

***ராசை நாதன் :*** இராசபுரத்தின் தலைவன்.

***சீராசை நாதன் :*** சீராசையின் தலைவன்.

***வரராசைநாதன் :*** வரராசையின் தலைவன்.

***புன்னைவன நாதன் :*** புன்னை வனத்தின் தலைவன்.

***கூழைநாதன் :*** கூழை நகரின் தலைவன்.

***கூழையாண்டி :*** கூழையை ஆளுகின்றவன்

***வைத்தியநாதன் :*** (புற்று மண்ணை மருந்தாக அருளுகின்ற) மருத்துவத் தலைவன்.

***ஆவுடையப்பன் :*** ஆவுடையம்மையைத் தன் சக்தியாகக் கொண்டவன். பசுக்களை - உயிர்களைத் தன் உடைமையாகக் கொண்டவன்.

***உமா மகேசுவரன் :*** உமையுடன் வீற்றிருக்கின்ற மகேசன். இவர் உற்சவர்.

***சங்கரன், சங்கரமூர்த்தி :*** இவர் மூலவர்.

இவ்வாறு இறைவனது திருப்பெயர்கள் உலக வழக்கு, இலக்கிய வழக்கு ஆகிய இரு வழக்கிலும் பலவாறு வழங்கப்பெறுகின்றன. மேலும் (அ) சங்கரன், (ஆ) சங்கர நயினார், (இ) சங்கர நாராயணர் ஆகிய முப்பெரும் பெயர்களும் பெரு வழக்குடையன.

## முப்பெரும் பெயர்கள்

### சங்கரன்

சங்கரன் எனில் சுகத்தைச் செய்கின்றவன், நன்மை புரிகின்றவன் என்பது பொருள். அவ்வாறே நன்மை செய்பவள் சங்கரி எனப்பெற்றாள். சங்கரன், சங்கரி ஆகிய இரண்டு பெயர்களும் நன்மை புரிபவர் எனும் பொருளைத் தருவன.

**''சங்கரன் ஈசன் சுயம்பு சதுமுகன்''** [49]

எனச் சிலப்பதிகாரத் தொடரில் சங்கரன் எனும் சொல் முதன்முதலாக ஆளப்பெற்றுள்ளது.

இங்கே சங்கரன் என்ற சிவனது பெயரால் அருகனைக் குறிப்பிடுகின்றார் அடிகளார்.

**''சங்கரி அந்தரி நீலி''**[50]

என்ற தொடர் சங்கரியைக் குறிப்பிடுகிறது. எனவே சங்கரன், சங்கரி ஆகிய இரண்டு பெயர்களும் மிகப் பழமையானவை என்பது புலனாகும்.

சிவனுக்கு ஆயிரம் திருப்பெயர்கள் இருந்தாலும், 'சங்கரன்' என்ற பெயரே உச்சநிலைச் சிறப்புடையது எனக் கருதி,

**''நாமார்க்கும் குடியல்லோம் நமனை அஞ்சோம்**
**நரகத்தில் இடர்ப்படோம் நடலை யில்லோம்**
**ஏமாப்போம் பிணியறிவோம் பணிவோ மல்லோம்**
**இன்பமே எந்நாளும் துன்ப மில்லை**
**தாமார்க்கும் குடியல்லாத் தன்மையான**
**சங்கரன்நற் சங்கவெண் குழையோர் காதிற்**
**கோமாற்கே நாமென்றும் மீளா ஆளாய்க்**
**கொய்ம்மலர்ச்சே வடியினையே குறுகினோமே''**[51]

என்று திருநாவுக்கரசரும்,

**''தந்ததுன் தன்னை கொண்டதென் தன்னைச்**
**சங்கராஆர்கொலோ சதுரர்''**[52]

என்று மாணிக்க வாசகரும் 'சங்கரன்' என்ற திருப்பெயரைப் பொருத்தமான இடத்தில் பயன்படுத்தினர்.

திவாகர நிகண்டு சிவனுக்குரிய அறுபத்து மூன்று பெயர்களைத்தொகுத்துக் கூறியுள்ளது. இவற்றுள் 'சங்கரன்' என்ற பெயரே நூற்பாவின் முதற்பெயராகத் திகழ்கின்றது.

**''சங்கரன் இறையோன் காம தகனன்**
**கங்கா தரனே கறைமிடற் றண்ணல்''**[53]

**...................................**

சிவனுக்குரிய திருப்பெயர்களில் தலைமைச் சிறப்புடைய ''சங்கரன்'' என்ற திருப்பெயர் சங்கரநயினார் கோயிலின் மூலவர் பெயராக அமைந்திருப்பது மிகப் பொருத்தமும், தனிச்சிறப்பும் ஆகும். கருவறையில் இருக்கின்ற லிங்க வடிவச் சங்கரனுக்குச் சங்கரலிங்கம் என்பது பெயராம்.

**லிங்கம்**

லிம் - ஒடுக்கம்

கம் - தோற்றம்

உயிர்கள் அனைத்தும் ஒடுங்கி, மீண்டும் தோன்றுவதற்குரிய மேன்மையான இடம் லிங்கம்.

''சாவும் போது சங்கரான்னு சாவனும்'' என்று உலக வழக்கில் ஒரு பழமொழி இப்போதும் வழங்குகின்றது. ஒருவன் இறுதி மூச்சில் ஒலிக்க வேண்டிய ஆண்டவனது திருப்பெயர் 'சங்கரன்' என்ற பெயராம். இவ்வாறு ஒரு முறை கூறினாலே போதும் இதனால் கிடைக்கின்ற பலன்கள் பல என்பது பாமர மக்களின் நம்பிக்கை. 'சங்கரன்' என்ற பெயரின் சிறப்பை இப்பழமொழியும் எடுத்துக் காட்டுகிறது.

இளஞ்சிவப்பு நிறமுடைய அழகான ஒரு வகை மீனுக்குச் ''சங்கரா'' என்ற பொருத்தமான பெயரை முன்னோர் சூட்டினர். ஆண்டவனது திருப்பெயரைப் புனைந்த அந்தச் சுவையான சங்கரா மீனைப் பாமர மக்கள் பலர் சாப்பிடவே மாட்டார்கள். அப்படிச் சாப்பிடுவது சிவத்துரோகமாகக் கருதப்படுகிறது. எனவே, சங்கரன் என்ற பெயர் மதிப்புக்குரியது; மரியாதைக்குரியது; பயபக்திக்குரியது. திருப்பெயர்களில் மேலானது.

***சங்கர நயினார்***

'நாயனார்' என்ற சொல் நாயகன், தலைவன் எனப் பொருள்படும். நயினார் என்பது நாயனார் என்ற சொல்லின் திரிபே. 'நயினார்' என்ற சொல்லைச் சமணமும், சைவமும், இஸ்லாமும் பொதுவாக வழங்குகின்றன.

**சமணம்**

நாயனார், நயினார் என்ற பெயர்கள், சமணத் தீர்த்தங்கரர்களுக்கும் முனிவர்களுக்கும் பட்டப் பெயர்களாகப் பழங்காலம் முதல் வழங்கின.

> **''நாயனார் என்ற இச்சொல் முதன் முதல் ஜைன சமயத்தவர் போற்றும் தீர்த்தங்கரர்களுக்கும் ஜைன முனிவர்களுக்கும் பட்டப் பெயராகத் தொன்று தொட்டு வழங்கி வந்துள்ளது''**[54]

'அறிவன்' என்ற சொல்லுக்கு உரை வரைகின்ற அரும்பதவுரையாசிரியர்

> **''அறிவனென்றது உறையூர் ஸ்ரீ கோயில் நாயனாரை''**[55]

என்று நாயனார் என்ற சொல்லைக் குறிக்கின்றார். இச்சொல் நாளடைவில் 'நயினார்' என்று மருவியது.

சமண சமயச் சான்றோர் பலரது பெயர்களில் 'நயினார்' என்ற பட்டப் பெயர் இணைந்திருப்பதைக் காணலாம். குறிப்பாக, விழுப்புரம் மாவட்டம் கோலியனூர் ஜைனக்குகையொன்றில் ''ஸ்வஸ்திஸ்ரீ நயினார் தேவர் பெருமானார் ஸ்ரீ கோவில்'' என்றும், ''கோலியபுர நல்லூர் நயினார் அருமொழி நாயகர் கோவில்'' என்றும் காணப்படுகின்றன.[56]

திருவள்ளுவரைச் சமண சமயத்தவராகக் கருதுகின்றனர். இவருக்கு மயிலாப்பூரில் ஒரு கோயில் உள்ளது. ஐம்பதாண்டுகளுக்கு முன்புவரை இவரைத் 'திருவள்ளுவ நயினார்' என்றும், இவர் எழுந்தருளிய கோயிலை 'நயினார் கோயில்' என்றும் வழங்கினர்.

சின்னச்சாமி நயினார், மேல் மின்னல் சக்கரவர்த்தி நயினார் என்று நயினார் என்னும் பெயருடைய சமண சமயத்தவர் பலராவர்.

சமண சமயத்தைச் சார்ந்த வேளாளரின் ஒரு பிரிவினருக்கு 'நயினார்' என்ற ஒரு பட்டப் பெயர் உண்டு. 'நாயனார்' எனும் சொல் சைவத்தில் வழங்கி சமணத்தில்

சென்று நயினார் என மருவி பின் சைவத்திலும், நயினார் என்று வழங்கும் வழக்கும் ஏற்பட்டது எனக் கருதலாம்.

**சைவம்**

செயற்கரிய செய்த சிவனடியார்களுக்கு 'நாயனார்' என்ற பெயர் மேலான சிறப்புப் பெயராக அமைந்தது. காட்டுகள் : 1. ஆனாய நாயனார், 2. சேரமான் பெருமாள் நாயனார், 3. மெய்ப்பொருள் நாயனார் முதலியன.

அடியார்களுக்கு வழங்கிய நயினார் எனும் திருப்பெயர் பின்னர்த் தெய்வங்களுக்கும் வழங்கும் மரபு ஏற்பட்டது. அப்போது 'சங்கரன்' - 'சங்கர நயினார்' ஆயினார். 'சங்கர நயினார்' என்று வழங்குவது தவறு என்று ஜகத்குரு ஸ்ரீ காஞ்சிப் பெரியவர் சங்கராச்சாரிய சுவாமிகள் அருளுகின்றார்.

> **''சிவ விஷ்ணு அபேதத்தைக் காட்டும் ஸ்தலங்கள் பல உள்ளன. திருநெல்வேலிச் சீமையில் உள்ள சங்கர நாராயணன் கோயிலும் அத்தகையதொரு ஸ்தலமே (சங்கர நயினார் கோயில் என்று தப்பாகச் சொல்கிறார்கள்'')**[57]

'சங்கர நயினார்' 'சங்கர நாராயணன்' என்ற பெயர்கள் நூற்றாண்டுகளாக வழங்குகின்றன. இப்பெயர்கள் கல்வெட்டுகளிலும் பயில்கின்றன.

பரமக்குடி வட்டத்தில், மருதூரில், நாகநாதர் கோயில் உள்ளது. பீஜப்பூர் சுல்தானின் தளபதியான முல்லா சாகிப்பின் மகன் ஊமையாக இருந்தான். இவன் நாகநாதரை வழிபட்டுப் பேசும் திறத்தைப் பெற்றான். ''அல்லா நயினார்'' என்ற சொற்களை இவன் முதன்முதல் கூறினான். அன்று முதல் மருதூர் நாகநாதர் கோயிலுக்கு ''நயினார் கோயில்'' என்ற பெயர் தோன்றி நிலைத்தது.[58]

நெல்லையப்பர் கோயிலிலும், சங்கர நயினார் கோயிலிலும் எழுந்தருளியுள்ள ஆறுமுக சுவாமியை 'ஆறுமுக நயினார்' என்றும் பக்தர் அழைக்கின்றனர். நயினார் எனில் தலைமைப் பெருமையுடைய தெய்வம் என்று பொருள்.

**இஸ்லாம்**

நயினார் என்ற பெயரை இஸ்லாம் சமயத்தவரும் பரவலாகப் பயன்படுத்துகின்றனர்.

இஸ்லாம் சமயத்தில் ''நயினார் முகம்மது'' என்ற பெயர் பெருவழக்குடையது. 'அல்லா நயினார்' என்ற தொடர் முன்பகுதியில் எடுத்துக் காட்டப்பட்டது.

> **''தமிழ்நாட்டு மக்களுடன் முஸ்லீம்கள் நல்ல தொடர்பு வைத்திருந்தார்கள். அரசனுக்கு உதவியாக இருந்தவர்களுக்கு 'நயினார் தலைவன்' என்ற பட்டத்தை மன்னன் வழங்கினான்.**[59]

இதுகாறும் கூறியவற்றைத் தொகுத்து நோக்கும்போது ஈசன், சங்கரன் ஆகிய சைவ சமயம் சார்ந்த பெயர்கள் நாளடைவில் அனைத்துச் சமயங்களிலும் ஆளப்பெறும் பொதுப் பெயராக மாறியவாறே நாயனார் என்பதன் திரிபு வடிவமான நயினார் எனும் சைவப் பெயரும் பிற சமயங்களில் வழங்கப்பெற்றுள்ளது எனக் கருதலாம். அவ்வாறே இத்திருத்தலத்தைச் சங்கரன்கோயில், சங்கரநயினார் கோயில், சங்கர நாராயணர் கோயில் எனப் பலவாறு வழங்கும் வழக்கு உண்டு. சங்கரனாகிய சிவனே மூலவர். சங்கர நாராயணர் வடிவமும் சன்னிதியும் பிற்காலத்தில் அமைக்கப்பட்டவை. மத ஒற்றுமையாளர் சங்கர நாராயணர் கோயில் என வழங்கினாலும் இக்கோயில் சிவன் கோயில் ஆதலால் சங்கரன்கோயில் அல்லது சங்கரநயினார் கோயில் என வழங்குவதே பொருந்தும். மேலும் இந்நகரில் வாழும் மக்கள் அனைவரும் இக்கோயிலை சங்கரன்கோயில் என்றே வழங்குவதும் இங்குக் குறிப்பிடத்தக்கது.

### சங்கர நாராயணர்

#### நாராயணர்

வைணவ சமயத்துக்குரிய பரம்பொருளை நாராயணன் என்ற பெயரால் சுட்டுகின்றனர். ''ஓம் நாராயணாய நம'' என்பது எட்டெழுத்து மந்திரம். நாராயணன் என்ற பெயர் சங்கப் பாடல்களில் இல்லை. இச்சொல் சிலப்பதிகாரத்தில் முதன் முதல் இடம் பெறுகிறது.

> **''நாராயணா வென்னா நாவென்னா நாவே''[60]**

நாரா + அயணன் - தண்ணீரை இருப்பிடமாகக் கொண்டவன் நாராயணன் என்பது ஒரு பொருள். இதன் மற்றொரு பொருள் நுட்பமானது. நாரம் + அயனம் உலக உயிர்கள் அனைத்தும் உறைகின்ற இடம் அவனே; மற்றும் உலக உயிர்கள் அனைத்திலும் அவனே உறைகின்றான்.

> **''அறிகிலேன் தன்னுள் அனைத்துல கும் நிற்க**
> **நெறியிலான் தானும் அவற்றுள்நிற் கும்பிரான்''[61]**

என்ற நம்மாழ்வாரின் அருள்வாக்கு நாராயணன் என்ற திருப்பெயரின் விளக்கமாக அமைந்துள்ளது.

சிவனும், திருமாலும் முறையே வலமிடமாக இருப்பது சங்கர நாராயண வடிவம். இடவலமாக மாறி இருப்பது 'ஹரிஹரன்' வடிவம். ஆனால், இந்த இரண்டு வடிவங்களையும் இந்த இரண்டு பெயர்களாலும் பொதுவாக வழங்குவது வழக்கமாக உள்ளது.

அரி (ஹரி) - அடியார்களின் பாவங்களைப் போக்குகின்றவன்.

அரன் (ஹரன்) எல்லாவற்றையும் அழிக்கின்றவன்.

திவாகர நிகண்டு நாராயணனை ‘நாரணன்’ என்று குறிப்பிடுகின்றது.[62] ஹரன் - நாரணன் என்ற இரண்டு பெயர்களை இணைத்துப் பொய்கையாழ்வார் சங்கர நாராயணர் வடிவத்தைச் சுட்டிக் காட்டுகின்றார்.

**‘‘அரன்நாரணன் நாமம்’’**[63]

இவ்வாறு ‘அரன் நாராணன்’, ஹரிஹரன், அரியர்த்தர், கேசவார்த்தர் என்று இந்த வடிவத்திற்குப் பல பெயர்கள் இருந்தாலும் ‘‘சங்கர நாராயணர்’’ என்ற திருப்பெயரே உலக வழக்கிலும் இலக்கிய வழக்கிலும் பெரு வழக்காக நிலைபெற்றது.

## இறைவியின் திருப்பெயர்கள்

### கோமதி

கோமதி என்பது சங்கர நயினார் கோயிலில் உள்ள இறைவியின் திருப்பெயர். இது வடசொல் ஆகும். ‘ஆவுடையாள்’ என்பது இதற்கு நிகரான தமிழ்ச் சொல்லாம். ஆவுடையாளை ஆவுடையம்மன், ஆவுடையம்பிகை என்றெல்லாம் வழங்குவர்.

ஆவுடையாள் என்பது ஆ + உடையாள் என்பதாகும். ஆ எனில் பசு. அதாவது உயிர்கள் என்று பொருள். உலக உயிர்கள் அனைத்தையும் தனக்கு உடைமையாக அடிமையாகக் கொண்டவள் ஆவுடையாள் என்பர்.

### *சங்கரி*

சங்கரனின் சக்தி. சங்கரன் கோயிலிலும், அதைச் சார்ந்த பல சுற்றுப்புற ஊர்களிலும் வாழ்கின்ற ஆடவர் சங்கரன், சங்கரலிங்கம், சங்கர நாராயணன் முதலிய திருப்பெயர்களையும், மகளிர் கோமதி, ஆவுடையாள் முதலிய திருப்பெயர்களையும் சூடிக் கொள்கின்றனர். இவ்வாறு தெய்வப் பெயர்களைத் தமக்குச் சூட்டிக் கொள்வது ஒரு தமிழ்ப் பண்பாடு ஆகும். எனவே,

குழந்தைகளுக்குத் தெய்வங்களின் பெயர்களேயல்லாமல் வேறு பெயர்களைச் சூட்டக் கூடாது என்று பெரியாழ்வாரும் விதித்தார்.[48]

## தல வரலாறு

### சங்கரன் கோயிலின் தோற்றம்

பராசக்தியின் சாபத்தால் மணிக்கிரீவன் என்ற தேவன் ஒரு காவற்பறையனாகப் பிறந்து புன்னை வனத்தைக் காவல் புரிந்தான். எனவே காப்பறையன் என்பதும் அவனுக்கு ஒரு பெயராயிற்று. கரிவலம் வந்தநல்லூரில் எழுந்தருளியுள்ள பால்வண்ண நாதருக்குரிய ஒரு பூந்தோட்டம் புன்னை வனத்தில் இருந்தது. இதைக் காக்கின்ற பொறுப்பும் காப்பறையனுக்கு உரியதாக இருந்ததாம்.

பூந்தோட்டத்தில் ஒரு புற்று உயர்ந்தது வளர்ந்தது. ஒரு நாள் காப்பறையன் அந்தப் புற்றை வெட்டிப் பிளந்தான். அப்போது அதிலிருந்த ஒரு பாம்பின் வால் துண்டிக்கப்பட்டது. வாலை இழந்த பாம்பு கூழைப்பாம்பாகக் குட்டைப் பாம்பாகக் காட்சி தந்தது. அப்புற்றின் சிதைந்த ஒரு பக்கத்தில் சிவலிங்கம் ஒன்று தரிசனம் தருவதை நோக்கினான்; வியந்தான்; பயந்தான். பக்கத்து வனத்தில் அப்போதிருந்த உக்கிர பாண்டியனிடம் இச்செய்திகளைத் தெரிவிக்க விரைந்து ஓடலானான்.

### உக்கிர பாண்டியன் கோயில் கட்டுதல்

உக்கிர பாண்டியன் திருநெல்வேலிக்கு மேற்கே பொருநையாற்றின் கரையில் இருந்த மணலூரில் தங்கி அரசாண்டான். அவன் அன்னை மீனாட்சியை தரிசிக்க மதுரை செல்லும் வழியில் புன்னைவனத்திற்கு அண்மையில் தங்கியிருந்த போது அவனது பட்டத்து யானை, தன் கோடுகளால் மண்ணைக்குத்தி, உழுது, விழுந்து புரண்டது. காப்பறையன் சிவலிங்கத்தையும், குட்டைப் பாம்பையும் தரிசித்த நாளன்று இந்நிகழ்ச்சி நிகழ்ந்தது. காப்பறையன் நிகழ்ந்தனவற்றை மன்னனிடம் தெரிவித்தான்.

உக்கிரபாண்டியன் புன்னை வனத்திற்கு உடனே வந்து புற்றையும், சிவலிங்கத்தையும், குட்டைவால் பாம்பையும் கண்டு வியந்தான். பின்னர்ப் புன்னை வனத்தைச் சீர்திருத்திக் கோயிலைக் கட்டினான்; ஊரை உருவாக்கினான். இவையே ''சங்கரன் கோயில்'' என்று புகழ்பெற்றன. இவ்வரலாறு ஓவியச் சாலையில் ஓவியங்களாகத் தீட்டப்பட்டன.[64] கோயிலில் ஓவியச் சாலை முன்னர் இருந்தது. பின்னர் அழிந்து விட்டது.

**பழைய வரலாற்றின் பதிவுகள்**

மேற்கண்ட பழைய வரலாற்றின் பதிவுகள் பல, இப்போதும் காணப்படுகின்றன.

***புற்று :*** கோயிலின் வடமேற்கில் பழைய புற்று ஒன்று உள்ளது.

***காப்பறையன் :*** கோயிலின் தோற்றத்திற்கு இவனே அடிப்படைக் காரணம் ஆவன். கோபுரத்தைக் கடந்தவுடன் இவனது திருவுருவத்தைக் காணலாம்.

மேலும், ஊரின் தெற்கில், காப்பறையனுக்கு ஒரு தனிக்கோயிலும் உள்ளது. அக்கோயில் இருக்கின்ற தெருவுக்குக் காப்பறையன் கோயில் தெரு என்பது பெயர். பக்தர்கள் இவரைத் தினமும் வழிபடுகின்றனர். கோயிலில் சித்திரை விழா தொடங்குவதற்கு முன்பு இவருக்குச் சிறப்பு வழிபாடுகள் நடைபெறுகின்றன. பின்னர்க் கோயிலில் கொடியேற்றப்படும்.

**பெருங்கோட்டூர் :** யானை தன் பெரிய கோடுகளால் குத்திக் கிழித்த இடத்தைச் சார்ந்து உருவான ஊருக்குப் 'பெருங்கோட்டூர்' என்ற பெயர் ஏற்பட்டது.

***பிடிமண் :*** உக்கிரபாண்டியன் பெருங்கோட்டூருக்குச் சென்று பிடிமண்ணை அள்ளி வந்து பெருந்திருவிழாவைக் கொண்டாடினான். இப்போதும் திருவிழாவின் தொடக்கத்திற்காகப் பிடிமண் எடுக்கின்ற சடங்கு பெருங்கோட்டூரில் நடைபெறுகின்றது. இந்த ஐதீகம் பழைய வரலாற்றைப் பின்னணியாகக் கொண்டது.

***உக்கிரபாண்டியன் சிலை :*** சங்கரநயினார் கோயிலின் உள்ளே வலப் பக்கத் தூணில் உக்கிர பாண்டியனின் திருவுருவத்தைக் காணலாம்.

மேற்கண்ட பதிவுகளும், பிறவும் கோயில் தோன்றிய வரலாற்றை வரையத்தக்க சான்றுகளாகவும் திகழ்கின்றன.

**சங்கரநாராயணர் வடிவம்**

சங்கர நாராயணர் வடிவம் தோன்றிய வரலாறு வாமன புராணத்தில் காணப்படுகின்றது. திருமால், ஒரு முனிவரிடம், தானும் சிவபெருமானும் ஒருவரே என்றும், தன் ஒரு பாகத்திலேயே சிவபெருமான் பொலிகின்றார் என்றும் கூறி, ஹரிஹரனாக அம்முனிவருக்குத் திருக்காட்சி தந்தருளினார்.

சங்கரநயினார் கோயில் தலபுராணப்படி, பராசக்தி (கோமதி)க்காகவும், சங்கன், பதுமன் என்ற இரு நாகர்களுக்காகவும், சங்கரலிங்கர் சங்கரநாராயணராகத் திருக்காட்சி தருகின்றார். இத்தல புராண வரலாறு வருமாறு:

சங்கன், பதுமன் என்ற இரு நாகர்கள் பக்தி மிக்கவர்கள். சங்கன் சிவபக்தன், பதுமன் நாராயண பக்தன். சிவன் பெரியவனா, நாராயணன் பெரியவனா என்று இருவரும் முரண்பட்டுத் தமக்குள் வாதிடுவது வழக்கம். இந்த முரண்பாட்டைப் பராசக்தியிடம் கூறி ‘‘இருவருள் எவர் பெரியவர்?’’ என வினவினர்.

இரு நாகரின் வாதங்களைக் கேட்ட அன்னைக்கு ‘யார் பெரியவர்’ என்ற ஐயம் மிகுதியாயிற்று. அன்னையும் இறைவனிடம் வினவ, இறைவன் அவளை நிலவுலகிலுள்ள, புன்னை வனத்திற்குச் சென்று தவமிருக்கும்படி ஆணையிட்டார். அன்னை, கோமதியம்மையாக வடிவெடுத்துத் தவமிருந்தாள். ஆடிப் பௌர்ணமியன்று சங்கர லிங்கர், பராசக்தி மற்றும் நாகர்களாகிய சங்கன் பதுமன் ஆகிய இம்மூவருக்கும் சங்கர நாராயணராகத் திருக்காட்சி தந்து, சிவனும் நாராயணனும் ஒருவரே என்பதை எல்லாருக்கும் தெளிவாக்கினார். அம்மை பணிந்து வேண்ட, சங்கர நாராயணர் சங்கர லிங்கராக மீண்டும் உருமாறித் திருக்காட்சியளித்தார். இந்த ஐதீக வரலாற்றைப் பின்னணியாகக் கொண்டு

‘ஆடித்தவசு’ என்ற பெருவிழா நடைபெறுகிறது என்பது பின்னரும் எடுத்துக் காட்டப் பெறுகிறது. கோமதியம்மை, சங்கர லிங்கரின் சன்னிதிகளுக்கு நடுவில் உள்ள சங்கர நாராயணர் சன்னிதி முதன் முதல் தோன்றியது. இந்தத் தனிப்பெரு மாட்சி வேறு எந்தத் திருத்தலத்திற்கும் இல்லை.

சங்கர நாராயணர் சன்னிதி எழுவதற்குச் சங்கன், பதுமன் என்ற இரு நாகரே அடிப்படைக் காரணமாவர் என நம்பப்படுவதால், புற்றும், நாகமும் இத்திருத்தலத்துடன் நெருங்கிய தொடர்பு கொண்டுள்ளன. சில தொடர்புகளை கீழ்க்காணலாம்.

1. கோயிலுக்குரிய பல பெயர்களில் ‘பாம்புக் கோயில்’ என்பது பழைய பெயர்.

2. திருத்தலத்தின் பெயர் கூழை நகர்; இறைவனின் பெயர்களுள் கூழை நாதர், ‘‘கூழைவால் சங்கர லிங்கம்’’ என்ற பெயர்களும் வழங்கப்பெறுகின்றன.

3. இறைவன் புற்றில் அவதரித்த வன்மீகநாதர்.

4. கோயில் வளாகத்தில் புற்று உள்ளது.

5. கோயிலில் புற்றுமண் பிரசாதமாக வழங்கப்படுகின்றது.

6. கோயிலின் தீர்த்தம் ‘‘நாகசுனை’’ இது இரு நாகர்களும் தோண்டிய குளம் என நம்பப்படுகிறது.

7. தலமரம் - புன்னை; இதற்கு நாகம் என்ற வேறு பெயரும் உள்ளது.

6. சங்கர நாராயணர் திருமேனியில், சங்கரனுக்குச் சங்கனும், நாராயணனுக்குப் பதுமனும் நாகாபரணக் குடைகளாக விளங்குகின்றனர்.

## பாண்டியர் வரலாற்றுப் பின்னணி

சங்கரன் கோயில் பாண்டியநாட்டுச் சிற்றூர். அங்கே 11ஆம் நூற்றாண்டில் சங்கர நயினார் கோயில் உருவான பிறகு அந்தப் பாண்டிய நாட்டுச் சிவத்தலம் ஒரு புகழ் பெற்றத் திருத்தலம் ஆயிற்று. இதற்குப் பாண்டியர் பல திருப்பணிகளைச் செய்தனர்.

## *சங்கர நயினார் கோயில் தோன்றிய ஆண்டு கி.பி.1022*

தச்சநல்லூர் சாமி வேத மூர்த்தி மடாலயத்தில் ஒரு கல்வெட்டு உள்ளது. இதில் திருநெல்வேலி மாவட்டத்தில் சில கோயில்களில் நடைபெற்ற திருப்பணிகளையும், மன்னர் சிலர் அரசாண்ட காலக் குறிப்புகளையும் காணலாம். இதன்படி சங்கர நயினார் கோயில் தோன்றிய ஆண்டு வருமாறு :

| | | | |
|---|---|---|---|
| 1. | சாலி வாகன சகாப்தம் | - | 645 |
| 2. | கொல்லம் | - | 199 |
| 3. | கிருத்துவ சகாப்தம் | - | 1022 (கி.பி) |

அப்போது அரசாண்ட

1. சோழப் பேரரசன்
   முதல் இராசேந்திரன் கி.பி.1012-1044

2. பாண்டிய சேர நாடுகளை ஆண்ட சோழ பாண்டியன் - சுந்தர சோழ பாண்டியன் கி.பி.1018 - 1041

3. பாண்டியக் குறுநில மன்னன் - உக்கிர பாண்டியன்

## நெடுஞ்சடையன் பராந்தகன்

திருநெல்வேலி தாலுகாவில் 'உக்கிரன் கோட்டை' என்ற பகுதி இப்போது சீரழிந்த நிலையில் உள்ளது. இதற்குக் கரவந்தபுரம், களக்குடி, மணலூர், கரகிரி என்பன பழைய பெயர்களாம்.

நெடுஞ்சடையன் பராந்தகன் (கி.பி.765 - 790) என்ற பாண்டியன், தனக்குத் தொல்லைகளைத் தந்த குறுநில மன்னர்களை ஒடுக்கவும், கண்காணிக்கவும் கரவந்தபுரத்தில் ஒரு கோட்டையைக் கட்டி, அங்கே ஒரு நிலைப்படையையும் நிறுவினான்.

கரவந்தபுரத்தில் 'உக்கிரன்' என்ற தலைவன் இருந்தான். அவன் பராந்தகனுடன் முரணியதால், பராந்தகன் அவனையும், அவனது களிற்றினங்களையும் கைப்பற்றி ஒடுக்கினான். உக்கிரன் பணிந்து வேண்டவும், கரவந்தபுரத்தை அந்த உக்கிரனே மீண்டும் ஆண்டு வருமாறு பணித்தான் பராந்தகன். எனவே, கரவந்தபுரம் என்ற பழைய பெயர் மாறி உக்கிரன் ஆண்டதால் ''உக்கிரன் கோட்டை'' என்ற புதுப்பெயரே நிலைத்தது.[71] அந்தப் பகுதியும் காலப் போக்கில் பாழ்பட்டது.

## உக்கிர பாண்டியன்

சுந்தர சோழ பாண்டியன் (கி.பி.1018 - 1041) மதுரையிலிருந்து அரசாண்டு வந்தான். அப்போது அவனது ஆட்சி பாண்டியநாடு முழுவதும் பரவவில்லை. குறுநில மன்னர் சிலர் இவனுக்கு அடங்கியும் சிலர் அடங்காமலும் அரசாண்டனர்.

உக்கிரபாண்டியன் என்பவன் உக்கிரன் கோட்டையிலிருந்தோ, கரிவலம்வந்த நல்லூரிலிருந்தோ தனித்து அரசாண்டான். கி.பி.1022ஆம் ஆண்டு சங்கரநயினார் கோயில் திருப்பணியைத் தொடங்கினான். விரைவில் கட்டி முடித்தான். ஆண்டுதோறும் சித்திரை விழாவும் சிறப்பாக நடைபெற்றது. அப்போது உக்கிரன் மதுரைக்கும் செல்லாமல், சித்திரைத் திருவிழாவில் தவறாமல் பங்கேற்றான்.[72]

### *சீவல மாற பாண்டியன் (கி.பி.1172)*

இவனைப் பற்றிய சில குறிப்புகள், முன்னர்க் குறித்த தச்சநல்லூர் சாமி வேதமூர்த்தி மடாலயத்திலுள்ள கல்வெட்டில் காணப்படுகின்றன.

| | | | |
|---|---|---|---|
| அ. | சாலிவாகன சகாப்தம் | - | *1095* |
| ஆ. | கொல்லம் | - | *349* |
| இ. | கிருத்துவ சகாப்தம் | - | *1172 (கி.பி)* |

கி.பி.1172ஆம் ஆண்டு சீவலமாற பாண்டியனார் வள்ளியூருக்கு வந்து தெய்வத்தைத் தரிசித்து அங்கே சில திருப்பணிகளைச் செய்தார். அடுத்து, சங்கரன் கோயிலில் தங்கிச் சில திருப்பணிகளை நிறைவேற்றினார். பின்னர் மானூரில் ஒரு குளமும் வெட்டினார். அக்கல்வெட்டால் இச்செய்திகள் புலனாகின்றன. சீவலமாற பாண்டியன் சங்கரன் கோயிலைப் பற்றிய தலபுராணத்தையும் இயற்றினார். ஊரின் தென்மேற்கேயுள்ள ‘சீவலப்பேரி’ என்ற குளமும், கிழக்கேயுள்ள ‘சீவலராயன் ஏந்தல்’ என்ற ஊரும் இவரது பெயரைச் சார்ந்து வழங்குகின்றன. சங்கரநயினார் கோயிலில் உக்கிரபாண்டியனுக்குப் பிறகு இவரே பல திருப்பணிகளைச் செய்து முடித்தார்.

### *பாண்டியப் பேரரசர் காலம் (கி.பி.1190- 1310)*

#### பாண்டியரது இரண்டாம் பேரரசு

கி.பி.12ஆம் நூற்றாண்டின் இறுதியில் பாண்டியர் மீண்டும் எழுச்சியுற்றனர். எனவே, கி.பி.1190 முதல் 1310 வரை அரசாண்ட பாண்டியர்களின் அரசைப் ‘‘பாண்டியரது இரண்டாம் பேரரசு’’ என்று வரலாற்றாசிரியர்கள் வழங்குவது வழக்கம். இக்கால எல்லையில் ஆண்ட பாண்டியர்களது கல்வெட்டுகள் பல இடங்களில் காணப்படுகின்றன.

### *முதல் சடையவர்மன் குலசேகரன் (கி.பி.1190-1217)*

இவன் விக்கிரம பாண்டியனுக்குப் பிறகு அரசேற்றான். இவனது கல்வெட்டுகள் மதுரை, திருநெல்வேலி, இராமநாதபுரம் முதலிய இடங்களில் கிடைப்பதால் இவனது ஆட்சி பாண்டியநாடு முழுவதும் பரவியிருக்க வேண்டும்.

### *முதல் மாறவர்மன் சுந்தர பாண்டியன் (கி.பி.1216 - 1239)*

இவன் சடைய வர்மன் குலசேகரனின் தம்பி. சோழரிடமிருந்து பாண்டிய நாட்டை மீட்ட மன்னர்களில் இவன் மாமன்னன் பாண்டியர் சோழருக்கு அடிபணிந்து திறை தந்த நிலையை முழுவதும் மாற்றிச் சோழர் பாண்டியருக்குத் திறை தருமாறு பணித்தான். பின்னர்ச் சேரநாட்டைக் கைப்பற்றினான். அதை மிகவும் பாழ்படுத்தினான். 'சேரநாடு கொண்டருளிய தேவர்' என்ற சிறப்புப் பட்டத்தையும் பெற்றான். இவனிடம் தோற்ற சோழன் மூன்றாம் குலோத்துங்கன் என்று சிலரும் மூன்றாம் இராசராசன் என்று சிலரும் வரையறுக்கின்றனர்.

### *இரண்டாம் சடையவர்மன் குலசேகரன் (கி.பி.1237 -1266)*

மூன்றாம் இராசேந்திர சோழன் பாண்டிய நாட்டைக் கைப்பற்றிய போது வீரசோமேஸ்வரன் என்ற போசள மன்னன் பாண்டியனுக்குத் துணையாக வந்தான். இவனைத் தன் மாமன் என்று குறிப்பிடுகின்றான் பாண்டியன். எனவே, இப்பாண்டியன் காலத்தில் போசளர் பாண்டியர்களுடன் உறவு முறையில் தொடர்பு கொண்டிருந்தனர் என்பது தெரிகிறது. இவனது கல்வெட்டு ஒன்று மதுரையில் உள்ளது. இவனது அந்தரங்க அமைச்சனின் பெயர் ஐயன் மழுவராயன் என்பதாம்.

### *முதல் சடையவர்மன் சுந்தர பாண்டியன் (கி.பி.1251-1271)*

முதல் மாறவர்மன் சுந்தரபாண்டியனுக்குப் பின்னர் மிக்க புகழ்பெற்ற மாமன்னன் இவனே. இவன் காலத்தில் பாண்டியப் பேரரசு உயர்நிலையைக் கடந்து, உச்ச நிலையை அடைந்தது. இவனது ஆட்சி வடக்கே நெல்லூர், கடப்பை முதல்

தெற்கே குமரி முனை வரையில் பரவியிருந்தது. கல்வெட்டுகள் நீள் நிலப்பரப்பின் பல இடங்களில் கிடைக்கின்றன.

பாண்டியன் சேர நாட்டு வீர ரவி உதய மார்த்தாண்டன் என்ற சேரனை வென்று 'ரவி வென்றான்' என்ற சிறப்புப் பட்டத்தையும், காஞ்சிபுரத்தை வெற்றி கொண்டு 'காஞ்சிபுரம் கொண்டான்' என்ற சிறப்புப் பட்டத்தையும் பெற்றான். மேலும், ''சடையவர்மன் சுந்தர பாண்டியன்'' என்ற பெயர் பெற்ற பாண்டியர்களில் இவன் ஒருவனே ''எம்மண்டலமும் கொண்டருளிய'' என்ற சிறப்புப் பெயருக்குரிய பாண்டியன் ஆவன்.

பாண்டியன் சைவத்தையும் வைணவத்தையும் நிகராகப் போற்றி வளர்த்த பெருமையுடையவன். தில்லைக்கும், திருவரங்கத்திற்கும் இவன் செய்த திருப்பணிகள் மிகப் பலவாகும்.

## *முதல் சடையவர்மன் வீரபாண்டியன் (கி.பி.1253 – 1268)*

இவன், முதல் சடையவர்மன் சுந்தர பாண்டியன் காலத்தில், அவனின் அரசப் பிரதிநிதியாக இருந்து சோழநாடு, நடுநாடு, தொண்டை நாட்டுப் பகுதிகளை அரசாண்டவன்.

வீரபாண்டியன் தில்லையிலுள்ள சிவகாம கோட்டத்திற்குத் தென்புறமுள்ள நூற்றுக்கால் மண்டபத்தில் கி.பி.1267ஆம் ஆண்டு வீர அபிடேகம் செய்து கொண்டான். எனவே அந்த மண்டபத்திற்கு, 'வீரபாண்டியன் திருமண்டபம்' என்ற பெயர் தோன்றியது.

கல்லிடைக்குறிச்சியில் இவனது 28ஆம் ஆட்சியாண்டுக் கல்வெட்டு இருப்பதால் இவன் கி.பி.1281ஆம் ஆண்டு வரை உயிர்வாழ்ந்தான் என்று கருதலாம்.

### முதல் மாற வர்மன் குலசேகர பாண்டியன் (கி.பி.1268 - 1311)

இப்பாண்டியனது காலத்தில் வெனிசு நகரத்தைச் சார்ந்த மார்க்கோ போலோவும், முகமதிய யாத்திரிகர் வாசப்பும் பாண்டிய நாட்டிற்கு வந்தனர். அப்போதிருந்த பாண்டிய நாட்டு நிலைமைகளை இவர்கள் இருவரும் குறித்தனர்.

குலசேகரன் சேர, சோழ, போசளர் முதலிய மன்னர்களை வென்று, பெரும் பொருளைத் தொகுத்து வந்து நெல்லையப்பர் கோயிலில் பல திருப்பணிகளைச் செய்தான் என்று அங்குள்ள ஒரு கல்வெட்டு தெரிவிக்கின்றது.

### மாறவர்மன் விக்கிரம பாண்டியன் (கி.பி.1268 - 1281)

குலசேகர பாண்டியனின் அரசப் பிரதிநிதியாக இருந்த சிலருள் இவனும் ஒருவன் ஆவன்.

### பிற்காலப் பாண்டியர்கள்

### கி.பி.1310 முதல் அரசாண்ட பாண்டியர்

14ஆம் நூற்றாண்டின் முற்பகுதியில் பாண்டிய அரசு மிக நலிந்து வீழ்ச்சியுறத் தொடங்கியது. மாறவர்மன் குலசேகர பாண்டியனின் இரு மகன்கள் தமக்குள் முரண்பட்டுப் போரிட்டுக் கொண்டனர். இதனால் பாண்டிய நாட்டில் அங்கங்கே குழப்பங்கள் மலிந்தன. அலாவுதீன் கில்ஜியின் படைத்தளபதி மாலிக்காபூர் என்பவன் இந்த அரிய வாய்ப்பைப் பயன்படுத்திக் கொண்டு பாண்டிய நாட்டைக் கொள்ளையடித்தான்.

### சடையவர்மன் வீரபாண்டியன் (கி.பி.1296 - 1348)

இவன் மாறவர்மன் குலசேகர பாண்டியனின் மகன். இவனது ஆட்சிக் காலத்தில் டில்லி சுல்தான் முகமது பின் துக்ளக்கின் படைத்தளபதியான ஜலாலுதீன் அஸன்ஷா என்பவன் மதுரையைக் கைப்பற்றினான். கி.பி.1330 முதல் 1378 வரை பாண்டிய நாட்டில் முகமதியர் ஆட்சி நடைபெற்றது.

### சடையவர்மன் பராக்கிரம பாண்டியன் (கி.பி.1411 - 1463)

இவன் கி.பி.14ஆம் நூற்றாண்டு வரையில் பாண்டிய நாட்டை ஆண்ட பாண்டியர்களில் மிக்க சிறப்புடையவன். திருநெல்வேலி, திருக்குற்றாலம், திருப்புடைமருதூர் முதலிய பல கோயில்களில் பல திருப்பணிகளைச் செய்தான். மிகு சிறப்பான தென்காசிக் கோயிலை இவனே கட்டினான். கி.பி.1456இல் இவன் தொடங்கிய கோபுரத் திருப்பணியை இவன் தம்பி குலசேகரத் தேவன் கி.பி.1505ஆம் ஆண்டு நிறைவேற்றினான். ஆனால் இக்கோபுரம், இடிந்து, சரிந்து 'மொட்டைக் கோபுரமாக' நின்றது. 20ஆம் நூற்றாண்டில் இக்கோபுரம் மீண்டும் கட்டி முடிக்கப்பட்டது.

### பாண்டியர் நால்வர்

16ஆம் நூற்றாண்டில் வாழ்ந்த பாண்டியர்கள் செல்வாக்கிழந்த குறுநில மன்னர்களாக இருந்தார்கள். இவர்களில் சிலர் தமது தனிப்பட்ட திறமைகளை நிறுவியதும் உண்டு.

கி.பி.1543 முதல் 1604 வரை அரசாண்ட பாண்டியர் நால்வரது கல்வெட்டுகள் சங்கரநயினார் கோயிலில் காணப்படுகின்றன.

## 16ஆம் நூற்றாண்டு

### சடாவர்மன் பராக்கிரம குலசேகர பாண்டியன் (கி.பி.1543 - 1553)

இவன் அபிராம பராமக்கிரம பாண்டியனின் முதல் மகன். இவனது கல்வெட்டுகள் கி.பி.1543 முதல் 1553 வரையில் கிடைக்கின்றன. இவனைப் பற்றி யாதும் தெரியவில்லை.[73] சங்கரநயினார் கோயிலில் இவன் பொறித்த ஐந்து கல்வெட்டுகள் உள்ளன.

## நெல்வேலி மாறன் : (கி.பி.1553 – 1564)

இவன் அபிராம பராக்கிரம பாண்டியனின் இரண்டாம் மகன். இவனுக்கு வீரபாண்டியன், குலசேகர பாண்டியன், பொன்னின் பாண்டியன், அழகன் பெருமான் முதலிய பல பெயர்கள் உள்ளன. இவன் புலவர்கள் புனைந்த வீர வெண்பா மாலையை அணிந்தவன் என்பது,

ஏறிய சகாத்த மாயிரத்து நானூற்றெழுபதின்
னாலில் வரிழ்சம் பரிதாபி தனில் மாதம்
தேறிய சித்திரை யிருபத் தொன்பதாந்தேதி
யிரண்டாம் பகந் திங் களு ரோகிணி நாள்
வீறுயர்ந்த மிதுனத்து நெல்வேலி மாறன்
வீரவேள் குலசேகரச் செழியனென்றுசுர
ராறுபுனை யகிலேசர் காசியிலே விளங்கவணி
மவுலி தரித்தனர் பரராசர் பணிந்தனரே.
ஓடியல் மாலையணிந் தாலும் வாடு மெனப் புலவோர்
பாடிய வீரவெண்பா மாலையைப் பொன்னின் பாண்டியன் போர்
தேடிய வேர்செழியன் குலசேகரத் தென்னனைப் போற்றி
சூடிய வேந்தருண் டோ வொரு வேந்தரைச் சொல்லுலகிலே நன்றாக''

(கல்வெட்டு எண். T.A.S. Vol.I, No.VII)

என்ற தென்காசிக் கல்வெட்டொன்றால் தெரிகின்றது.

நெல்வேலி மாறன் பொறித்த நான்கு கல்வெட்டுகள் இருக்கின்றன. இவற்றில் ஒன்று சிதைந்தது.

## விக்கிரம தேவ பாண்டியன்

இவனது ஆறாம் ஆட்சியாண்டில் சங்கரநயினார் கோயிலில் இரு கல்வெட்டுகளைப் பொறித்தான். இவற்றில் ஒன்று சிதைந்தது.

### *சடையவர்மன் அதி வீரராம பாண்டியன் (கி.பி.1564 – 1604)*

இவன் நெல்வேலி மாறனின் முதல் மகன். தன் தந்தையின் நினைவாகத் தென்காசியில் குலசேகரமுடையார் ஆலயம் ஒன்றைக் கட்டினான். மேலும், சீவல விண்ணகரப் பெருமானுக்கு ஒரு கோயிலையும், இலஞ்சி முருகன் கோயிலையும், ஸ்ரீவில்லிபுத்தூரில் கிருஷ்ணனுக்கு ஒரு கோயிலையும் அமைத்தான்.

தஞ்சை மாவட்டத்திலுள்ள ''அதி வீரராமன் பட்டினம்'' என்ற கடற்கரைப் பட்டினத்தை உருவாக்கியவன் இவனே. அப்பட்டினத்தை இப்போது *'அதிராமபட்டினம்'* என்று வழங்குகின்றனர்.

அதி வீரராம பாண்டியன் செந்தமிழ்ப் புலமையுடையவன். தமிழில் தவறு செய்கின்றவர்களின் தலைகளின் மீது குழந்தைத் தனமாகக் குட்டும் இயல்பினன். ஆகவே, இவனைப் ''பிள்ளைப் பாண்டியன்'' என்பர். இன்றும் தமிழில் தவறு இருப்பதைக் கண்டால் ''குட்டுவதற்கோ பிள்ளைப் பாண்டியன் இங்கு இல்லை'' என்ற பழமொழியினை கூறி வருத்தமடைவதை திருநெல்வேலி மாவட்ட மக்களிடையே காணலாம். வடநாட்டுப் பெருவேந்தன் ஹர்ஷன் இயற்றிய ''நைஷதம்'' என்னும் நூலினைத் தமிழில் மொழிபெயர்த்துள்ளார். நைடதம் புலவர்களுக்கு ஔடதம் என்பது பழமொழி. இம்மொழி பெயர்ப்பு நூலேயன்றி பைந்தமிழ் குரிசலான இவ்வேந்தன் கூர்ம புராணம், காசிக் காண்டம், லிங்க புராணம், நறுந்தொகை, கருவைப் பதிற்றுப் பத்தந்தாதி முதலிய நூல்களை இயற்றியுள்ளான்.

### கல்வெட்டு

இப்பாண்டியனின் கல்வெட்டுகள் பல இடங்களில் உள்ளன. சங்கரன் கோயிலில் காணப்படுகின்ற ஒரு கல்வெட்டில் இவன் 'வல்லபதேவன்' என்று குறிக்கப்படுகின்றான். கி.பி.1590ஆம் ஆண்டான இவனது 26ஆம் ஆட்சியாண்டில் இக்கல்வெட்டு பொறிக்கப்பட்டது; இப்போது இதன் ஒரு பகுதி சிதைந்துவிட்டது.

அதிவீரராம பாண்டியனுக்குப் பிறகு பாண்டிய மன்னர் எவரும் சங்கரன் கோயிலில் கல்வெட்டைப் பொறிக்கவில்லை.

**வரதுங்கராம பாண்டியன் (கி.பி.1588 – 1612)**

இவன் பராக்கிரம குலசேகர பாண்டியனின் இரண்டாம் மகனாவன். இவன் அதி வீரராமன் காலத்தில், கரிவலம்வந்த நல்லூரிலிருந்து தென்பாண்டி நாட்டின் சில பகுதிகளை அரசாண்டான். இவனும் சிறந்த தமிழ்ப்புலமையுடையவன். பிரமோத்தர காண்டம், கருவை வெண்பா, திருக்கருவை பதிற்றுப்பத்து அந்தாதி முதலிய நூல்களை இவன் இயற்றினான்.

அடுத்து வரகுணராம குலசேகர பாண்டியன் என்பவன் வேள்விகள் பல செய்து வேதநெறிப்படி அரசாண்டான்.

**மரபு மறைந்தது**

காலப்போக்கில் வீறு கொண்ட பாண்டியர் வீழ்ச்சியடைந்தனர். விசய நகர மன்னர்களுக்குக் கப்பம் செலுத்துகின்ற குறுநில மன்னர்களாக வாழ்ந்தார்கள். பின்னர்ச் சில சிற்றூர்களின் ஜமீன்தார்களாக இருந்தார்கள். இவர்களோடு பாண்டியர் மரபும் மறைந்தது.

**சங்கரநயினார் கோயிலும், பாண்டியர்களும்**

சங்கரநயினார் கோயிலுடன் நெருங்கிய தொடர்புடைய பாண்டிய மன்னர் மொத்தம் ஆறு பேரேயாவர்.

1. கோயிலைக் கட்டியவன் ஒருவன். அ. உக்கிரபாண்டியன்

2. கோயிலுக்குத் திருப்பணிகளைச் செய்து தலவரலாற்றையும் இயற்றியவன்

   ஆ. சீவலமாற பாண்டியன்.

3. கோயிலில் கல்வெட்டுகளைப் பொறித்த பாண்டியர் நால்வர்

   இ. பராக்கிரம பாண்டியன்

ஈ. குலசேகர பாண்டியன்

உ. விக்கிரம தேவ பாண்டியன்

ஊ. அதி வீரராம பாண்டியன்

**கால எல்லை**

மேற்குறித்தவர்கள் சங்கரநயினார் கோயிலுடன் தொடர்பு கொண்ட கால எல்லை கி.பி. 1022 முதல் 1604 வரையிலாகும்.

**கோயில் வளர்ச்சித் திருப்பணிகள்**

பாண்டியர்களைத் தொடர்ந்து, 17ஆம் நூற்றாண்டில் வடமலையப்பப் பிள்ளையனும், 18ஆம் நூற்றாண்டில் மாவீரன் பூலித்தேவனும், 20ஆம் நூற்றாண்டில் அறங்காவலர்களும் பாராட்டத்தக்க வளர்ச்சித் திருப்பணிகள் பலவற்றைச் செய்தார்கள். அப்பணிகளும் அதை செய்வித்தோரின் வரலாறும் கீழ்வருமாறு:

***காவை வடமலையப்பப் பிள்ளையன் (17ஆம் நூற்றாண்டு)***

இவர் சோழநாட்டுச் சீரங்கத்தையடுத்த ஒரு சிற்றூரைச் சார்ந்தவர். வேளாள குலத்தினர் என்பர். இவரது ஐந்தாம் வயதில் தாய் தந்தையர் இறக்கவே, சிறிய தந்தையார் இவரை வளர்த்தார். இவருக்கும் சிறிய தந்தைக்குமிடையில் மனவேறுபாடு உருவாகவே, சிறிய தந்தையைப் பிரிந்த இவர் நெடுந்தூரம் நடந்தார். வழியில் தாதாசாரியார் இவரைக் கண்டு, தம் மாணவர் மன்னன் சொக்கநாத நாயக்கரிடம் ஒப்படைத்தார். மன்னன் இவரை உயர் பதவியில் அமர்த்தி, ‘ஐயன்’ என்ற சிறப்புப்பட்டத்தையும் அளித்தான். இவர் மன்னனின் பிரதிநிதியாகத் திருநெல்வேலியை ஆட்சிபுரிந்தார்.[74] வடமலையப்பப்பிள்ளையன் என்பது இவரது முழுப்பெயர்.

பிள்ளையன் - பிள்ளை + ஐயன். ஐயன் - மேன்மை மிகு பட்டப் பெயராம். இவர் பரம்பரையினரும், 'பிள்ளையன்' என்ற பெயரைத் தம் பெயர்களுடன் இணைத்துக் கொண்டனர்.

> **''செஞ்சிக்கும் கூடலுக்குந்**
> **தஞ்சைக்கும் ஆணை செல்லும்**
> **செங்கோல் வடமலேந்த்ரன்**
> **எங்கள் ஊரே''** [75]

என்று முக்கூடற்பள்ளுவின் இளையபள்ளி செம்மாந்து கூறுகின்றாள். செஞ்சிக்கும், கூடலுக்கும், தஞ்சைக்கும் இவரது ஆணையே சென்றதாம். எங்கள் ஊர் மருதூர் என்று அவர் குறிப்பிடுவதால்; அது இவர் வாழ்ந்த ஊராக இருக்கலாம்.

17ஆம் நூற்றாண்டில் கீழ்க் கடற்கரையில் டச்சுக்காரர்களுக்கும், போர்த்துக்கீசியருக்கும் பல போர்கள் நிகழ்ந்தன. டச்சுக்காரர் சிலர் கி.பி.1648ஆம் ஆண்டு திருச்செந்தூரில் தங்கிக் கோயில்களுக்குள் புகுந்து கொள்ளையடித்து, முருகன் சிலையைக் கடலில் வீசியெறிந்தனர். முருகன், வடமலையப்பப் பிள்ளையன் கனவில் தோன்றிச் சிலை மூழ்கியிருந்த இடத்தைச் சுட்டிக்காட்டினான். அவர் அங்கு அச்சிலையைத் தேடச் செய்து, கண்டுபிடித்து மீண்டும் கோயிலில் எழுந்தருளச் செய்தார். இந்நிகழ்ச்சியைக் கீர்த்தனையில் பாடிய வென்றிமாலைக் கவிராசர், இது கொல்லம் 829ஆம் ஆண்டில் (கி.பி.1654ஆம் ஆண்டில்) நிகழ்ந்தது என்று குறிப்பிட்டார். இந்நிகழ்ச்சியை நினைவுகூரும் முறையில் 'வடமலையப்பர் மண்டபம்' என்று ஒரு மண்டபம் அமைக்கப்பெற்றது. முருகன், விழாக்காலங்களில் அந்த மண்டபத்தில் எழுந்தருளுகின்றான்.

திருநெல்வேலியில் வாழ்ந்த புலவர் பலர் இவரது சிறப்புகளைப் புனைந்து பாடினர். இவர் சிவன், திருமால் கோயில்கள் பலவற்றிற்குச் செய்த திருப்பணிகளைச் சங்கரலிங்க உலா, தென்திருப்பேரை மகர நெடுஞ்குழைக்காதர் திருப்பணி மாலை, திருக்கோளூர் வைத்தமாநிதி திருப்பணிமாலை முதலிய நூல்கள் விரிவாகக் கூறுகின்றன.

பாகை அழகப்பன் பாடிய திருக்குறள் விளக்க நூலான வடமலை வெண்பாவுக்கும் இவர் பாட்டுடைத் தலைவர். இவர் கி.பி.1663ஆம் ஆண்டு காலஞ்சென்றார். இவருக்குப்பிறகு இவர் மகன் காவை திருமலைக் கொழுந்துப் பிள்ளையன் திருநெல்வேலியை அரசப் பிரதிநிதியாக அரசாண்டார் (கி.பி.1663-1683).

கி.பி.1682 முதல் இவர் மகன் இரசை வடமலையப்பர் அரசாளத் தொடங்கினார். இவர் மச்ச புராணத்தை இயற்றிய பெரும்புலவராவர்.

திருநெல்வேலியில் 'பிள்ளையன்' பரம்பரையினர் இப்போதும் வாழ்கின்றனர்.[76]

## வடமலையப்பப்பிள்ளையன் செய்த திருப்பணிகள்

இவர் சங்கரநயினார் கோயிலுக்குச் செய்த திருப்பணிகள் பலவாகும். கோயில் இப்போதைய அடிப்படைக் கட்டமைப்பு நிலையை அடைவதற்கு இவரே முக்கிய காரணமாவர். சங்கர லிங்க உலா இவர்செய்த திருப்பணிகளைத் தொகுத்துரைக்கிறது.[77] அவை வருமாறு :

1. அம்மன் கொடி மரமண்டபம்
2. நாட்டிய அம்பலம்
3. கோபுரம்
4. களஞ்சியம்
5. மடைப்பள்ளி
6. சுற்றுமதில்
7. தேர்
8. தேர் மண்டபம்
9. நிருதித்திக்கு மண்டபம்
10. மேலை வீதித்திருமடம்
11. பூங்காவனங்கள்
12. தெப்பக்குளம்; நடுமண்டபம்
13. மறையவர் வாழ வீடுகள்

14. வெள்ளி வாகனங்கள்

அ) கைலாய வாகனம்

ஆ) காளை வாகனம்

இ) சிங்க வாகனம்

ஈ) பூத வாகனம்

15. அம்மைக்கு மாலை, இரத்தின அங்கி

16. அறுபத்து மூவர் திருமேனிகள்

கேமதி அம்மன் கோயில் கொடிமர மண்டபத்தூண் ஒன்றில் இவரது திருவுருவம் காணப்படுகின்றது.

### மா வீரன் பூலித்தேவன் ( 18ஆம் நூற்றாண்டு)

மாவீரன் பூலித்தேவன் 18ஆம் நூற்றாண்டில் வாழ்ந்தவன். இவன் சங்கரநயினார் கோயிலுக்கருகிலுள்ள நெல்கட்டுச் செவலைச் சார்ந்தவன். இவன் தனது குல தெய்வமான உள்ளமுடையாரைத் தினமும் மனமுருகி வழிபடும் வழக்கு உடையவன்.

**''சங்கர கோமதி ஆவுடை நாயகி**
**தானே எழுந்து பவனிவரப்**
**பொங்கமுடனே பல்லாக்குக் கொடுத்துப்**
**புதுமையான அறைகள் கட்டி**
**நாகசுனை ஒன்று வெட்டி வைத்தார்**
**நடுபல் மண்டபங்களும் கட்டி வைத்தார்''**[78]

என்ற நாடோடிப் பாடலின் மூலம் சங்கரநயினார் கோயிலுக்கு மாவீரன் சில திருப்பணிகளைச் செய்தான் என்பதை அறிய முடிகின்றது. மறையவர்களுக்கு நன்செய் நிலங்களைத் தானமாக அளித்தான். கரிவலம் வந்த நல்லூர் பால் வண்ண நாதர் கோயிலுக்குப் பனையூர் நன்செய் நிலங்களைத் தானமளித்தான்.[79] தேர் செய்து கொடுத்தான். மடைப்பள்ளிக்கு முன் ஒரு மண்டபம் கட்டினான். மதுரை மீனாட்சியம்மன் கோயிலுக்கும் இவன் நிறைவேற்றிய திருப்பணிகள் பலவாம். பல

கோயில்களுக்கு மாவீரன் செய்த திருப்பணிகளைப் போற்றிப் பாடிய கும்மிப்பாட்டு வருமாறு:

> ''ஆலய சேவையைக் கூறுங்கடி - நம்ம
> அர்த்த நாதேசுவரர் பாருங்கடி
> பூவில் உயர் பூலித்தேவர் - செய்த
> பொற்கோயில் என்றே கூறுங்கடி''[80]

**குகை**

ஒரு முறை ஆங்கிலேயர் மாவீரனைக் கைது செய்தனர். பலத்தகாவலுடன் அழைத்துச் சென்றபோது வழியில் சங்கர நயினாரை வழிபட வேண்டும் என்று அவர்களிடம் மாவீரன் கேட்டான். அவர்களும் ஒப்புக் கொண்டனர். கோயிலுக்குள் நுழைந்தவுடன் கை விலங்கைத் தகர்த்தெறிந்து, சிலரைத்தாக்கி ஒரு குகைக்குள் ஓடி ஒளிந்து கொண்டான். அப்போது அந்தகக் குகை இருள் செறிந்த புதர்கள் பின்னிய குகையாக இருந்தது. குகையில் பின்தொடர்ந்து சென்ற ஆங்கிலேயரால் அவனைத் கண்டுபிடிக்க முடியவில்லை. ஆகவே, பகைவரிடமிருந்து மாவீரன் தப்பிச் செல்வதற்குச் சங்கரநயினார் கோயிலின் குகை ஒரு முறை துணை செய்துள்ளது என்பது தெளிவாகின்றது.

## பூலித்தேவன் அறை

குகை அழகிய மர வேலைப்பாடு நிறைந்த ஓர் அழகிய அறையாக இப்போது மாற்றப்பட்டுள்ளது. இதனைப் 'பூலித்தேவன் அறை' என்றும் 'பூலித் தேவன் செர்ச்சை' என்றும் மக்கள் வழங்குகின்றனர். அறையில் பூலித்தேவனின் ஓவியம் தீட்டப்பட்டுள்ளது. அவனைப் பற்றிய வரலாற்றுக் குறிப்புகளும் அங்கே எழுதப்பட்டுள்ளன. இந்த அறை சங்கர லிங்கர் சன்னிதிக்கும், சங்கர நாராயணர் சன்னிதிக்கும் நடுவில் உள்ளது. அறையில் மர வேலைப்பாடுகள் மிக நேர்த்தியாக இருப்பது குறிப்பிடத்தக்கது. மாவீரன் இந்த அறையில் வந்து அமர்ந்து இறைவனைத் தியானித்து வழிபடுவான் என்றும் மக்கள் கூறுகின்றனர். இதனால் இந்த அறையை மாவீரனே அமைத்தான் என்றும் சிலர் கூறுகின்றனர். அவன் புதுமையான அறைகளைக் கட்டியதாக நாடோடிப் பாடலும் கூறுகின்றது. எனவே, சங்கரன்

கோயிலின் வளர்ச்சிக்கு மாவீரனின் பங்கும் குறிப்பிடத் தகுந்த அளவிற்கு உள்ளது என்பது தெரிகின்றது.

**என்.ஏ.வி.சோமசுந்தரம் பிள்ளை பி.ஏ.பி.எல்., அறங்காவலர்**

***(20ஆம் நூற்றாண்டு)***

இவர் சங்கரன் கோயிலின் அறங்காவலராக இருந்தபோது கோயிலில் சிறந்த திருப்பணிகளைச் செய்து முடித்தார்.[81] இவரால் கோயிலின் பகுதிகள் விரிவடைந்தன; கூடுதல் பொலிவுடன் கோயிலும் திகழ்ந்தது; அடிப்படைக் கட்டமைப்புகள் சில மாற்றப்பட்டன. இவர் செய்ததாக அறியப்படும் திருப்பணிகள் வருமாறு:

1. சங்கர நாராயணர் திருமுன் காணப்படுகின்ற பெரிய மண்டபத்தைக் கட்டினார்.
2. நடன அம்பலத்தை உருவாக்கினார்.
3. நடராசப்பெருமானின் சன்னிதியை அமைத்தார்.
4. ஆறுமுக நயினார் சன்னிதியின் விமானத்தை எழுப்பினார்
5. நாகசுனையின் முன் மண்டபத்தை உருவாக்கினார்.
6. அங்கூர் விநாயகர் சன்னிதியின் விமானத்தை அமைத்தார்.
7. மேலை வாயில் முன் மண்டபத்தைக் கட்டினார்.
8. உட்சுற்றுத்தவிர மற்ற இடங்களிலெல்லாம் தள வரிசைக் கற்களைப் பதித்தார்.
9. கோயில் அலுவலகத்திற்காகத் தனி அறையைக் கட்டினார்.
10. கிணற்றை அகழ்ந்து பசுத் தொழுவத்தையும் கட்டினார்.
11. கோயிலின் சுற்றுப்புறச் சுவர்கள் நான்கினையும் பழுதுபார்த்து, அவற்றின் நான்கு மூலைகளிலும் காவல் தெய்வ உருவங்களைப் பொருத்தினார்.
12. சங்கர லிங்கர், கோமதியம்மன், சங்கரநாராயணர் சன்னிதிகளிலும், அவற்றின் முன் மண்டபங்களிலும் பல வண்ணங்களைப்பூசி, ஓவியங்களை வரைந்தார்.
13. மேலும், கோயிலின் தலை வாயிலுக்கருகில் இருந்த மண்டபத்தைப் பிரித்துச் சங்கரநாராயணர் சன்னிதியின் முன் ஒரு புது மண்டபத்தைக் கட்டினார். இச்சன்னிதியை மறைத்த அம்பலத்தையும், மண்டபத்தையும் பிரித்து, வடபுறத்தில் சற்றுத்தள்ளி அமைத்தார்.

14. முன்னர்க் கோயிலில் தினமும் ஒரு வேளையே பூசை நடைபெற்றது. இவர் நான்கு வேளைகள் பூசை நடைபெறுமாறு வசதிகளைப் பெருக்கினார்.

மேற்கண்ட திருப்பணிகள் அனைத்தும் கி.பி.1915 முதல் 1931 வரை நடைபெற்றன. கோயிலும் இப்போதைய எழில்மிகு, ஏற்றமிகு தோற்றத்தை எய்தியது.

கி.பி.1932;அப்போதைய அறங்காவலர் திருவாளர், இலஞ்சி இராம சுவாமிப் பிள்ளையவர்கள், நந்தவனக் கிணற்றிலிருந்து குழாய்களின் மூலம், பல இடங்களுக்குத் தண்ணீர் பாய்ந்து செல்லக்கூடிய வசதிகள் இவரால் செய்யப்ப பட்டன.

கி.பி.1934; திருவாளர் சேற்றூர் இராம சுந்தர மகா லிங்கம் பிள்ளையவர்கள். அறங்காவலராக இருந்தார். கோயிலுக்கு சேத்தூர் ஜமீன்தா ரால் மின் இணைப்புத் தரப்பட்டது. எங்கும் ஒளி வெள்ளம் கடலாய்ப் பரந்தது. வண்ணம் தீட்டப்பட்டது.

## வரலாற்றுக் குறிப்புகள் சில

டாக்டர் உ.வே.சாமிநாதையர் அவர்கள் சங்கரன் கோயிலில் நடைபெற்றனவாக வரலாற்றுக் குறிப்புகள் இரண்டினை வரைகின்றார்.[82]

1. சங்கரநாராயணர் சிலை களவு போய் மீட்கப்பட்ட வரலாறு.

2. சங்கர நாராயணர் கோயில் ஒன்று தஞ்சையில் தோன்றிய வரலாறு.

இவற்றுள் சங்கர நாராயணர் சிலை களவு செய்து மீட்கப்பெற்ற வரலாறு சங்கரநயினார் கோயில் அமைப்பு எனும் இயலில் கூறப்பெற்றுள்ளது.

## தஞ்சையில் சங்கர நாராயணர் கோயில் தோன்றிய வரலாறு

தஞ்சையில் மகாராட்டிர மன்னர் அரசாண்டனர்.ஒரு குறிப்பிட்ட மன்னனின் பெருந்தேவியார் சங்கரநயினார் கோயிலின் பெருமைகளை அறிந்தார். அங்கே

சென்று சுவாமியை வழிபட்டால் தீராப் பிணிகள் தீர்கின்றன; மகப்பேறு கிடைக்கின்றது என்ற பெருமைகளைக் கேட்டறிந்த பெருந்தேவியார் தாமும் அக்கோயிலுக்குச் சென்று சுவாமியைத் தரிசிக்க விரும்பினார்.

உடனே மன்னன் தேர்ந்த சிற்பிகளை அனுப்பி, திருமேனியின் அமைப்பு முதலியவற்றை அறிந்து வருமாறு ஆணையிட்டான். ஒரு கோயிலைக் கட்டி அத்திருமேனியைப் போலவே ஒரு திருமேனியை எழுந்தருளச் செய்தான். சங்கரநயினார் கோயிலில் நடைபெறுவதைப் போலவே இங்கும் நாள் வழிபாடுகள் முதலியன நடபெறத் தக்க வசதிகளை உருவாக்கினான். இக்கோயில் இப்போதும் தஞ்சை மேலை வீதியில் உள்ளது. சங்கரநாராயணர் வழிபாடும் நாளும் நடைபெறுகின்றது.

## நிர்வாகமும் வரவு செலவும்

### கோயில் நிர்வாகம்

இந்து அற நிலையப் பாதுகாப்புக் கழகத்தின் எண் 3189அ நாள் 5.8.1944 என்ற ஆணைப்படி அரசு அதிகாரி ஒருவர் கோயிலின் செயற்பாடுகளை மேற்பார்வை செய்கின்றனர்.

### அறங்காவலர் குழு

அறங்காவலர் குழுவில் ஐவர் உள்ளனர். இவர்களில் ஒருவர் தலைவராகச் செயல்படுகின்றார். கோயிலின் வரவு செலவுகளுக்கும், வளர்ச்சித் திருப்பணிகளுக்கும் இவரே முழுப் பொறுப்பாவர்.

### பணியாளர்கள்

இப்போது அர்ச்சகர் 10 பேரும், மற்றப் பணியாளர்கள் 69 பேரும் கோயிலில் பணி செய்கின்றனர்.

திருவிழாக்காலங்களில் தேவைக்குத் தகுந்தபடி தற்காலிகப் பணியாளர் நியமிக்கப்படுகின்றனர்.

## வரவு செலவு சொத்து விவரங்கள்

### சொத்துக்கள்

1. சங்கரன் கோயில் தாலுகாவில், வாசுதேவ நல்லூர், நாரணாபுரம் என்ற ஊர்களில் ஆண்டு தோறும் 350 கோட்டை நெல்லும், 15,000/- ரூபாயும் வரக்கூடிய நன்செய் நிலங்கள் உள்ளன.

2. அம்பாசமுத்திரம் தாலுகாவில் பிரான்சேரி, கோபால சமுத்திரம், சொக்கலிங்கபுரம் என்ற ஊர்களில் ஆண்டுதோறும் 515 கோட்டை நெல் வருமானமுள்ள நிலங்கள் இருக்கின்றன.

3. பல கட்டங்களிலிருந்து வாடகை வருமானமும் உண்டு.

4. பட்டர்களுக்கும் பணியாளர்களுக்கும், மேளக்காரர்களுக்கும் மானியங்களாக வழங்கப்பட்ட நிலங்களும் தனியாக உள்ளன.

### நகைகள்

மூர்த்தங்களுக்குச் சார்த்தக்கூடிய தங்க நகைகள் பல உள்ளன. இவை சில இலட்ச மதிப்புடையவை. இவற்றில் குறிக்கத்தக்கவை கீழ்வருமாறு.

### தங்கம்

அம்மையின் தங்கப் பாவாடை, திருமார்பு அங்கி, திருக்கைகள், திருப்பாதங்கள் முதலியன.

### வெள்ளி

ஆறுமுகர், சங்கர நாராயணர் பிரபைகள்.

### வாகனங்கள்

1. காளை, 2. மயில், 3. யானை, 4. சிங்கம், 5. காமதேனு, 6. பூதம், 7. மிருகம், 8.கிளி, 9. அன்னம் முதலியன. மேலும், பல்லக்குகளும், சப்பரங்களும் உள்ளன.

### உண்டியல்

இதில் பணமும், தங்க நகைகளும், வெள்ளிப் பொருள்களும் சேர்கின்றன.

### காணிக்கைகள்

தங்கம், வெள்ளி, பித்தளை, வெண்கலச் சாமான்கள், ஆடைகள், ஆடு, மாடு, கோழி, உப்பு, மிளகாய், மிளகு, காய்கறிகள், தானிய வகைகள் முதலியன காணிக்கைப் பொருள்களாகக் குவிகின்றன. இவற்றுள் பெரும்பாலானவை ஏலம் போடப்பட்டுப்பணமாக மாற்றப்படும்.

### மற்ற வரவினம்

மேலும், பழைய கொடை, அர்ச்சனைகள், பன்னீர்கடை ஏலம், முடியிறக்குதல் ஏலம் ஆகியவற்றின் மூலமாகவும் வரவுகள் வருகின்றன.

### தேர்கள்

கோயிலில் தங்கத்தேர் ஒன்றும், மரத்தேர்கள் இரண்டும் இருக்கின்றன. மரத்தேர்களில் மிகப் பெரியது சுவாமிக்கு உரியது; சிறியது அம்மனுக்கு உரியது.

**நூல்நிலையம்**

கோயிலுக்குச் சொந்தமான ''சரஸ்வதி மஹால்'' என்ற பெயருடைய நூல் நிலையம் ஒன்று 27.7.1941 முதல் செயல்படுகிறது. இதில் ஏறக்குறைய 1500 நூல்கள் இருக்கின்றன.

**செலவினங்கள்**

சங்கரநயினார் கோயிலில் நாள் வழிபாட்டிற்காகச் சிறு தொகையும், திருவிழாக்கள் நடைபெறுகின்றபோது மிகப் பெருந் தொகையும் செலவாவது இயல்பே.

திருவிழா நடைபெறுகின்றபோது நாட்செலவுகள் சிலவற்றைக் கோயில் நிர்வாகம் ஏற்றுக் கொள்கிறது.

திருவிழா நாள்களின் ஒவ்வொரு நாட்செலவுகளைத் தனியாரோ, சமுதாயத்தின் தனிக்குழுவினரோ ஏற்றுக் கொள்கின்றனர். இதனால் இரண்டு பயன்கள் ஏற்படுகின்றன. ஒன்று, திருவிழாவின் போது கோயிலின் சார்பில் ஏற்படக் கூடிய செலவுகள் மிகக் குறைகின்றன. இரண்டு, கோயிலுக்கும் பக்தர்களுக்கு இடையில் நெருங்கிய இணைப்பு ஏற்படுகிறது. மற்றும், கோயில் திருப்பணிகளில் பக்தர்களும் ஈடுபடுகின்றனர்.

சங்கரநயினார் கோயில் வளப்பமான வருவாயையும், வரம்புக்கு உட்பட்ட செலவினங்களையும் கொண்டிருப்பதால், அது செல்வத்துடனும், செல்வாக்குடனும், செழிப்புடனும் திகழ்கின்றது என்பது முழு உண்மை.

**கல்வெட்டுகள்**

கோயில்களில் கல்வெட்டுகள் உள்ளன. இவை கோயில்களுக்குப் பெருமை சேர்க்கின்ற வரலாற்று மூலங்களாம். கல்வெட்டுகளின் துணை இல்லாமல் தமிழக வரலாற்றை எழுதவே முடியாது. மன்னனது பெருமைகளையும், அவன்

கோயில்களின் மீது கொண்ட ஈடுபாட்டையும், கோயில்களில் அவன் பதித்த கல்வெட்டுகள் நன்குணர்த்துகின்றன.

*1915*ஆம் ஆண்டுக்கு முன் பல கோயில்களில் தொகுக்கப்பட்ட கல்வெட்டுகளில் *14* கல்வெட்டுகள் சங்கரநயினார் கோயிலில் உள்ளன. திரு. அரங்காச்சாரியார் இக்கல்வெட்டுகளுக்குரிய குறிப்புகள் முதலியவற்றை ஆங்கிலத்தில் எழுதி வெளியிட்டார்.[83] இக்கோயிலிலுள்ள கல்வெட்டுகளை வெட்டுவித்தோர் கால வரிசைப்படி வகைப்படுத்தி ஆராயலாம்.

**வரலாற்றுக் கல்வெட்டுகள்**

***பராக்கிர பாண்டியன் கல்வெட்டுகள் - 5***

I *1.* எண்: **304**B, Ins. S. Dts. P.280, No.70

2. இடம் : அர்த்த மண்டபத்தின் தென் பக்கம்

3. ஆட்சியாண்டு - 2 (கி.பி.*1490*)

4. விவரக்குறிப்பு - கைலாசநாதபட்டிருக்குக் கோட்டூர் நாட்டு, ராச உத்தம நல்லூர், கீழை ஆய்க்குடியில் நாடோறும் செலவுக்காக இரண்டு மா அளவுள்ள நிலமும், வீடும் இறையிலித்தானமாக மன்னனால் வழங்கப்பட்டன.

II *1.*எண் 304D; Ins. S. Dts. P.280, No.72

2. இடம் : வடக்குச்சுவர்

3. ஆட்சியாண்டு *2;* சகம் *1413* (கி.பி.*1490*)

4. விவரக்குறிப்பு : சதாசிவப்பட்டருக்கு ஒரு நிலம் தானமாக வழங்கப்பட்டது.

III *1.* எண் **304**A; Ins. S. Dts., P.280, No.64

2. இடம் : சங்கரநயினார் கோயில் தெற்குப்பக்கம்

3. ஆட்சியாண்டு;சகம் *1428 (கி.பி.1505)*

4. விவரக்குறிப்பு: ஒருவருக்கு நிலம் தானமாக வழங்கப்பட்ட விவரம் உள்ளது.

IV 1. எண் 304g; Ins. S. Dts., P.280, No.77

2. இடம் : அம்மன் கோயிலின் வடபக்கம்

3. ஆட்சியாண்டு:*16* சகம் *1429 (கி.பி.1506)*

4. விவரக்குறிப்பு;ஒருவரக்கு ஓர் ஊர் தானமாகத்தரப்பட்ட விவரம் உள்ளது.

V 1. எண் 304C; Ins. S. Dts., P.280, No.71

2. இடம் : சுற்றுப்புறச்சுவர்

3. ஆட்சியாண்டு;பிலவங்க ஆண்டு

4. விவரக்குறிப்பு: ஒருவரக்கு நிலம் தானமாக வழங்கப்பட்ட விவரம் உள்ளது.

**நெல்வேலி மாறன் (குலசேகர பாண்டியன்) கல்வெட்டுகள் – 3**

I 1. எண்: *302 . 281/1908*

2. இடம் : அம்மன் கோயிலின் வடக்குச் சுவர்

3. ஆட்சியாண்டு:3.சகம் *1475 (கி.பி.1552)*

4. விவரக்குறிப்பு : இதுவும் நிலக்கொடை பற்றிய கல்வெட்டு. இதில் ஆரிய நாட்டைப்பற்றிய குறிப்பு காணப்படுகிறது.

II 1. எண் 304F; Ins. S. Dts. P.280, No.74

2. இடம் : அம்மன் கோயிலின் வடக்குச் சுவர்

3. ஆட்சியாண்டு:3. சகம் *1475 (கி.பி.1552)*

4. விவரக்குறிப்பு : சதாசிவப்பட்டருக்கு ஒரு நிலம் தானமாக வழங்கப்பட்டது.

III 1. எண் 304k; Ins. S. Dts., P.284, No.79.

2. இடம் : தெற்கு வாயில்

3. ஆட்சியாண்டு : குறிப்பு இல்லை

4. விவரக்குறிப்பு அம்மனுக்கும், அப்பனுக்கும் சில நிலப்பகுதிகள் தேவதானமாக வழங்கப்பட்டன.

**விக்கிரம தேவ பாண்டியனின் கல்வெட்டு - 1**

I 1. எண் 304J; Ins. S. Dts., P.280, No.78

2. இடம் : தெற்கு வாயில்

3. ஆட்சியாண்டு : 6

4. விவரக்குறிப்பு : கோயில் தானீகர்களுக்கு நிலக் கொடையளித்த விவரம் உள்ளது.

**மற்றக் கல்வெட்டுகள் –2**

I 1. எண் 304; 432/1914

2. இடம் : பெரிய கோபுரத்துள் நுழையும்போது வலப்பக்கமுள்ள கல்வெட்டு.

3. ஆண்டு : விசுவாசு, வைகாசி 24, திங்கட் கிழமை

4. மன்னன் : பெயர் குறிப்பிடப்படவில்லை.

5. விவரக்குறிப்பு : திருவிழா, இறப்புக் காலங்களில் நான்கு கீழ் வகுப்பு மக்களின் சிறப்புரிமைகள் குறிக்கப்பட்டுள்ளன.

I 1. எண் : 303 282/1908

1. இடம் : கோயிலின் முன்னுள்ள ஒரு கல்.

2. காலம் : கலி 4962; சகம் 1783, கொல்லம் 1036; துர்மதி.

3. விவரக்குறிப்பு : ஒரு தாசில்தார் அளித்த தானம் (கி.பி. 18609) குறிக்கப்பட்டுள்ளது.

**சிதைந்த கல்வெட்டுகள் - 3**

I 1. எண் : 304G; Ins. S. Dts. P.280 No.75

2. இடம் : அம்மன் கோயிலின் வடபக்கம்

3. மன்னன் : குலசேகர பாண்டியன்

4. ஆட்சியாண்டு : 13; சகம் 1484 (கி.பி.1561)

II

1. எண்: 304E; Ins. S. Dts. P.280 No.73
2. இடம் : கோபுரத்தின் தெற்குச் சுவர்
3. மன்னன் : வல்லப்பதேவன்
4. ஆட்சியாண்டு : 26 சகம் 1510 (கி.பி. 1581) இந்தக் கல்வெட்டைப் பதித்த மன்னன் அதிவீரராம பாண்டியன்.

III

1. எண் : 304H Ins S. Dts. P.280 No.76
2. இடம் : அம்மன் கோயிலின் வட பக்கம்
3. மன்னன் : விக்கிரம தேவன்
4. ஆட்சியாண்டு - 6.

### தன்னூத்தானேந்தல் தூண் கல்வெட்டு (அண்மைக்காலக் கண்டுபிடிப்பு)

முனைவர் செந்தில் செல்வக்குமரனும், திரு.சந்திரவாணனும் சங்கரன் கோயிலைச் சார்ந்த, ஒரு தூண் கல்வெட்டைத் தன்னூத்தானேந்தல் என்ற இடத்தில் அண்மையில் கண்டுபிடித்தனர்.

தன்னூத்தானேந்தல் என்ற குளம் சங்கரன் கோயிலிலிருந்து நான்கு கிலோ மீட்டர் தூரத்தில் இருக்கிறது. இக்குளத்தின் தலைமடைப் பகுதியில் ஒரு சதுரத் தூணின் நான்கு பக்கங்களிலும் 26 வரிகளைக் கொண்ட கல்வெட்டு பொறிக்கப்பட்டுள்ளது. கல்வெட்டின் மேற்பகுதியில் இரட்டை நாகத்தின் கீழ் ஒரு லிங்கம் இருப்பதைப்போல் ஒரு சிற்ப வடிவம் காணப்படுகின்றது. இக்கல்வெட்டுப் பற்றி அறியலாகும் செய்திகள் வருமாறு:

1. மன்னன் : திருநெல்வேலிப் பெருமான், தென்காசிப் பாண்டின் குலசேகர தேவன்.

2. ஆட்சியாண்டு : சகாப்தம் 1478 (கி.பி. 1556)

3. விவரக்குறிப்பு : தண்ணியூரானேந்தல் நீர் பாயும் நிலப்பகுதி சங்கரன் கோயிலுக்குத் தேவதானமாக வழங்கப்பட்ட செய்தியைக் கல்வெட்டு தெரிவிக்கிறது.

மேற்குறித்த நிலத்தில் கிடைக்கின்ற வருவாயைக் கொண்டு சங்கரநயினார் கோயிலில் தினமும் அர்த்த யாமப் பூசையை நிகழ்த்த வேண்டும்; மற்றும் வரகுண ராமன் என்ற மன்னன் பிறந்த மூல நட்சத்திரத்தன்று மாதந்தோறும் சிறப்பு வழிபாடுகளை நடத்த வேண்டும் என்பன கல்வெட்டில் விதிக்கப்பட்டுள்ளன. அந்நிலத்திற்கு வரி செலுத்த வேண்டியதில்லை என்பது அக்கல்வெட்டால் அறியப் பெறுகிறது.

## கல்வெட்டுகளில் இலக்கியங்கள்

தேவாரத் திருத்தலங்கள் மொத்தம் 274. திருவிடைவாய், கிளியன்னவூர் ஆகிய திருத்தலங்களின் பதிகங்கள் இரண்டு, கோயில்களின் கல்வெட்டுகளில் காணப்பட்டன. ஆகவே, திருத்தலங்களின் எண்ணிக்கை 276 ஆக உயர்ந்தது. அதாவது கல்வெட்டுகளில் பொறிக்கப்பட்ட இலக்கியங்களால் திருத்தலங்களின் எண்ணிக்கை கூடியது.

மேலும், கல்வெட்டுகளில் இலக்கியங்களைப் பொறிப்பதால் பற்பல நன்மைகள் விளைகின்றன. வீணே கிடக்கின்ற வெற்றிடங்களில் இலக்கியக் கல்வெட்டுகளைப் பதிக்கின்றனர். கல்வெட்டுகளில் பொறிக்கப்பட்ட அந்த இலக்கியங்களைப் பலர் படிக்கின்றனர்; பயில்கின்றனர்; மனனம் செய்கின்றனர்.

ஓர் இலக்கியம் நூல் வடிவில் ஆயிரக் கணக்கான படிகளில் அச்சிடப்பட்டு இருந்தாலும் அதைப் படிக்கின்றவர் சிலரே.

கோயிலில் அதே இலக்கியம் ஒரே கல்வெட்டில் பொறிக்கப்பட்டாலும் இதைப்படிக்கின்றவர் மிகப்பலராவர்.

ஆகவே, பல கோயில்களில் அவற்றுடன் தொடர்புடைய பல இலக்கியங்களைக் கல்லெழுத்துகளில் வடித்துப் பாதுகாக்கின்றனர். அவை சிறந்த பக்திப்பாடல்களின் தேர்ந்த தொகுப்பாக விளங்குகின்றன. கிடைக்காத அரிய பாடல்கள், பக்தர்களுக்குக் கல்வெட்டுகளின் மூலம் எளிதில் கிடைக்கின்றன. பெரும்பாலும் இவை அழிவதுமில்லை.

சங்கர லிங்கனார் கோயிலின் எல்லாப் பக்கங்களிலும், கல்வெட்டுகளிலும் தேர்ந்த திருமுறைப் பாடல்களைப் பொறித்துள்ளனர். வெண்சலவைப் பலகைகளில் பொறிக்கப்பட்ட திருமுறைப் பாடல்களும் சில உண்டு. இவற்றைப் பக்தர்கள் படித்துப் படித்துப் பக்திப் பரவசமடைந்து, பக்தியால் பெறக் கூடிய பயன்களைக் குறைவில்லாமல் பெறுகின்றனர். ஆகவே, கல்வெட்டுகளில் பக்தி இலக்கியங்களைப் பொறிப்பது ஒரு சிறந்த திருப்பணியாம்.

### கல்வெட்டுகள் - சில குறிப்புகள்

1. மொழி : 302 ஆம் எண்ணுடைய கல்வெட்டு மட்டும் கிரந்தத்திலும் தமிழிலும் எழுதப்பட்டது. மற்றவை அனைத்தும் தமிழக்கல்வெட்டுகளே.

2. காலம் : காலத்தால் முந்தியது பராக்கிரம பாண்டியனது கல்வெட்டு; (கி.பி.1490) (எண்.304பி) பிந்தியது ஒரு தாசில்தார் பதித்த கல்வெட்டு, (கி.பி.1861) (எண் 303) இலக்கியக் கல்வெட்டுகள், அனைத்தும் இருபதாம் நூற்றாண்டைச் சார்ந்தவை.

3. பெரும்பாலான கல்வெட்டுகள் கோயிலுக்கும், கோயிற் பணியாளர்களுக்கும், நிலம், வீடு, தானியம் முதலியவற்றை மன்னர்கள் தானமாக வழங்கிய விவரங்களைக் குறிப்பிடுகின்றன.

4. கீழ் வகுப்பு மக்களுக்கு ஆதரவுகள் இருந்தன என்பதையும், இவர்களது உரிமைகள் பாதுகாக்கப்பட்டன என்பதையும் ஒரு கல்வெட்டு (எண்304) உணர்த்துகிறது.

பாண்டிய மன்னர்கள் சங்கரன் கோயிலின் மீதும், அதன் பணியாளர்களின் மீதும், மக்களின் மீதும் கொண்ட ஈடுபாட்டை இக்கல்வெட்டுகள் தெளிவாகக் காட்டுகின்றன.

# தொகுப்புரை

1. மொகஞ்சதாரோ, ஹரப்பா அகழ்வாய்வில் கிடைத்த சிவ வடிவம் பொறித்த முத்திரைகளும், இலிங்கங்களும் ரிக் வேதமும் சிவ வழிபாட்டின் தொன்மையைத் தெரிவிக்கின்ற ஆதாரங்கள் ஆகும்.

2. சிவ வழிபாடு அடிப்படையில் மூன்று வகைப்படும். (1) சிவனை, அருவ நிலையில் வழிபடுவது அருவ வழிபாடு (2) சிவ லிங்க வழிபாடு என்பது அருவுருவ வழிபாடு (3) சிவ வடிவங்களை வழிபடுவது உருவ வழிபாடு. இவை மூன்றும் தொன்மையானவை; இப்போதும் வழக்கத்தில் இருப்பவை.

3. சிவனைப் பற்றிய குறிப்புகள் தொல்காப்பியத்தில் இல்லை.

4. ''சிவ வடிவம் இதுவே'' என்று பழங்காலத்தில் வரையறை செய்யப் பட்டிருந்தது. இது தொன்மையான தமிழ் இலக்கியங்கள் மூலம் அறியப்படுகின்றது.

5. சிவனது பல வேறுபட்ட வடிவங்களைச் சங்கப்பாடல்கள் விவரிக்கின்றன.

6. சங்கர நாராயணர் வடிவமும் சங்க காலத்தில் இருந்தது.

7. சிவன், சிவ வழிபாட்டைப் பற்றிய குறிப்புகள் சில சிலப்பதிகாரத்தில் காணப்படுகின்றன.

8. சங்கப் பாடல்கள், சிலப்பதிகாரம் முதலியன சிவனைச் 'சிவன்' என்ற பெயரால் குறிப்பிடவில்லை. அவனை முக்கண்ணன், ஆலமர் செல்வன், கறைமிடற்றண்ணல், இமையா நாட்டத்து இறைவன், பிறவா யாக்கைப் பெரியோன் என்றெல்லாம் அடைமொழிச் சிறப்புடன் குறித்தன.

9. தெய்வங்கள் பலருள் முதன்மையிடம் சிவனுக்கே இருந்தது. இவனே பரம்பொருளாக மதிக்கப்பட்டான்.

10. 'சைவம்' என்ற சொல்லை மணிமேகலை முதன் முதல் குறிப்பிடுகிறது.

11. கி.பி. இரண்டாம் நூற்றாண்டளவில் 'சைவம் சமயம்' சமுதாயத்தில் பரவியிருந்தது. சைவ வாதிகளும் இருந்தனர். சமய முரண்பாடுகளும் இருந்தன.

12. சிவனின் பழைய கற்சிலை வடிவங்களை மாமல்லபுரத்தில் காணலாம்.

13. ஆதிவராஹர் குகையிலும், தர்ம ராசா ரதத்திலும் சங்கர நாராயணரின் கற்சிலை வடிவங்கள் உள்ளன.

14. பாண்டிய நாட்டில் சைவம், வைணவம், கௌமாரம், சாக்தச் சார்புடைய திருத்தலங்கள் பல இருக்கின்றன.

15. சங்கரன் கோயில் என்பது பாண்டி நாட்டுச் சிவத்தலம். இது கி.பி. பதினோரம் நூற்றாண்டில் தோன்றியது.

16. திருத்தலத்திற்கும், இறைவனுக்கும், இறைவிக்கும் பல பெயர்கள் நூல், உலகு ஆகிய இரு வழக்குகளிலும் வழங்குகின்றன.

17. சங்கரன், சங்கர நயினார், சங்கர நாராயணர் என்ற முப்பெரும் பெயர்கள் தனிச்சிறப்புடையன.

18. சிவனது சில பெயர்களை மக்கள் சூடிக்கொண்டனர்.

19. சங்கரநயினார் கோயிலுடன் மிக நெருக்கமான தொடர்புடைய பாண்டியர் உக்கிரபாண்டியன் முதலியோர் அறுவரேயாவர்.

20. காவை வடமலையப்பப் பிள்ளையன் அறங்காவலர் திரு.என்.ஏ.வி. சோமசுந்தரம் பிள்ளை ஆகியோர் சங்கரன் கோயிலுக்குச் செய்த திருப்பணிகள் பாராட்டுக்குரியன. கோயிலின் இப்போதைய கட்டமைப்புக்கு இவர்களே காரணம்.

21. ''பூலித்தேவன் அறை'' வரலாற்றுச் சிறப்புடையது.

22. சங்கரநயினார் கோயிலில் பொறிக்கப்பட்ட கல்வெட்டுகள் பல, மன்னர் கோயிலுக்கு அளித்த தேவதானத்தையும், தனிப்பட்டவருக்கு அளித்த நிலக்கொடையையும் விவரிக்கின்றன.

# அடிக்குறிப்புகள்

1. ஞானசம்பந்தன், அ.ச., பேரா., பெரிய புராணம் ஓர் ஆய்வு, ப.36.
2. இராசமாணிக்கனார், மா. பேரா., சைவ சமய வளர்ச்சி, ப.25.
3. தொல்.பொருள். அகத்திணையியல் 5.
4. ப. பத்து 43:6-7.
5. புறம் 198: 9.
6. மலை 83.
7. மதுரை 435-5.
8. கலி 104:11,12.
9. கலி 103: 25.
10. கலி 1:1-4; 150:9.
11. முருகு 153; கலி 2:4; 104; 10; அகம் 181;16.
12. அகம், கடவுள் வாழ்த்து, 4.
13. அகம் 181; 15,16, 166:2.
14. புறம் 55:4; 56:2: 91:5.
15. கலி 142: 28.
16. கலி 2:6; 101:8; 103:25; புறம் 56:2.
17. கலி 1:4.
18. அகம், கடவுள் வாழ்த்து 14.
19. கலி 150:13; பிரி 8:2.
20. புறம் 56:1; முருகு 151-2; கலி 26:5.

21. புறம் 1:11; பரி 5:13.

22. கலி 150:20-21.

23. கலி 150:20.

24. முருகு 153; கலி 38:1-2.

25. புறம் 198:9; சிறுபாண் 97; கலி 100: 7-8; 81:9; 83:14.

26. புறம் 91:6.

27. ஐங்குறுநூறு, கடவுள் வாழ்த்து.

28. அகம் 360:6-9.

29. பரி 5:22-27; கலி 2:1-8, புறம் 55:1-4.

30. கலி 38:1-5.

31. கலி, கடவுள் வாழ்த்து 8.

32. சிலம்பு 11:128-130.

33. சிலம்பு 14:17.

34. சிலம்பு 5:169.

35. சிலம்பு வேட்டுவ வரி, உரைப்பாட்டு மடை 1:2; 12:1,2.

36. சிலம்பு 26:54-63.

37. சிலம்பு 28:67-75.

38. மேகலை 1:54-55.

39. மேகலை 27:87.

40. மேகலை 27:87-95.

41. நாகசாமி, இரா., மாமல்லை, ப.150-157.

42. சிலம்பு 14:7-10.

43. திவ்ய தேசங்கள் பதினெட்டு; 1. திருப்புல்லாணி, 2. திருக்கோட்டியூர், 3. திருமெய்யம், 4. திருமோகூர், 5. திருமாலிருஞ்சோலை, 6. திருக்கூடல் (மதுரை), 7. திருத்தண்கால், 8.திருவில்லிபுத்தூர், 9. திருவைகுண்டம், 10. திருவரகுண மங்கை, 11. திருப்புளிங்குடி, 12. திருக்குளந்தை, 13. திருத்தொலைவில்லிமங்கலம், 14. திருக்குருகூர், 15. திருக்கோளூர், 16. திருப்பேரை, 17. திருச்சிரீவரமங்கல நகர், 18. திருக்குறுங்குடி.

44. தேவாரத்திருத்தலங்கள் பதினான்கு 1. இராமேச்சுவரம், 2. கானப்பேர், 3. திருவாடனை, 4. திருப்புனவாயில், 5. திருப்புத்தூர், 6. திருக்கொடுங்குன்றம், 7. மதுரை, 8. திரு ஆப்பனூர், 9. திருப்பரங்குன்றம், 10. திருவேடகம், 11. திருப்பூவணம், 12. திருச்சுழியல், 13. திருக்குற்றாலம், 14. திருநெல்வேலி.

45. சேதுப்பிள்ளை, இரா.பி., தமிழகம் ஊரும் பேரும், ப.223.

46. பார்வை: இயல் 4.

47. சாமிநாதையர், உ.வே., டாக்டர், என் சரித்திரம், ப.459.

48. பெரியாழ்வார் திருமொழி, 4:6.

49. சிலம்பு 10:186.

50. சிலம்பு 12:21:3.

51. திருநாவுக்கரசர் தேவாரம், பொது, மறுமாற்றத் திருத்தாண்டகம், 1.

52. திருவாசகம் 395.

53. திவாகர நிகண்டு 1:1-2.

54. ஜீவபந்து ஸ்ரீபால், திருக்குறள் மூலமும் கட்டுரைகளும், கட்டுரை நயினார் கோயில், ப.121.

55. சிலம்பு 11:4 அம்பதவுரை.

56. ஜீவபந்து ஸ்ரீபால், திருக்குறள் மூலமும் கட்டுரைகளும் கட்டுரை 'நயினார் கோயில்', ப.122.

57. ஜகத்குரு ஸ்ரீ காஞ்சி காமகோடி ஸ்ரீ சந்திர சேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சாரிய சுவாமிகள், அருள் உரை, தொகுதி 13, ப.31.

58. இந்திய விவரச்சுவடி, இராமநாதபுர மாவட்டம், ப.1164-1165.

59. வேங்கடசாமி சீனி., மயிலை, சமணமும் தமிழும், ப.176.

60. சிலம்பு. 17:37:5.

61. திருவாய்மொழி 9:6:4.

62. திவாகர நிகண்டு 2:1.

63. முதல் திருவந்தாதி 5:1.

64. சங்கர லிங்க உலா கண்ணிகள் 284-8.

65. சிலம்பு. 20:33.

66. 1. பூதப்பாண்டியன் 2. நின்றசீர் நெடுமாறன் 3 நெடுஞ்செழியன்.

67. தொல்.பாயிரம், நச்சினார்க்கினியர் உரை.

68. மதுரை, 60,61.

69. புறம் 9.

70. இராமன், கே.வி., பாண்டியர் வரலாறு, ப.64.

71. சதாசிவப்பண்டாரத்தார், தி.வை., பாண்டியர் வரலாறு; ப.50:77.

72. சங்கரலிங்க உலா கண்ணி 110.

73. சதாசிவப்பண்டாரத்தார், தி.வை., பாண்டியர் வரலாறு, ப.163-164.

74. சிங்கார வேலு முதலியார், ஆ., அபிதான சிந்தாமணி, ப.1378.

75. முக்கூடற்பள்ளு 14.

76. அருணாசலம், மு., (ப.ஆ.), முக்கூடற்பள்ளு, ப.38-40.

77. சங்கரலிங்க உலா, கண்ணிகள் 289-301.

78. கருப்பாயம்மாள், நெல் கட்டான் செவல், நேரில் கூறிய பாடல் நாள் 30.10.96.

79. இராசையா, நா., மாமன்னன் பூலித்தேவன், ப.39.

80. குருவம்மாள், நெல்கட்டும் செவல், நேரில் கூறிய பாடல்.4, 30.10.96.

81. அருள்மிகு சங்கர நாராயண சுவாமி திருக்கோயில் தலவரலாறு (1995) ப.7. மற்றும் நிர்வாக அதிகாரிகளிடம் நேரில் கேட்டறிந்தவை சில.

82. சாமிநாதையர், உ.வே., டாக்டர் (பதிப்பாசிரியர்), சங்கரலிங்க உலா, முகவுரை ப.10-11.

83. 1. A Topographical List of 14 Inscriptions of the Madras Presidency Collected Till 1915, vol.3; Page 1475-76. No.302,303,304, 304A to 304K Total 14.

2. Tirunelveli Gazeteer Edited by C.A. Souter, C.S.9, 1917.

3. அருள்மிகு சங்கர நாராயண சுவாமி திருக்கோயில், தலவரலாறு (1995), ப.14-16.

# இயல் இரண்டு

## சங்கர நயினார் கோயில் அமைப்பு

சங்கரநயினார் கோயிலின் முழு அமைப்பை விளக்குவதாகவும், கோயிலில் அமைந்துள்ள அனைத்துச் சிற்பங்களையும் ஓவியங்களையும், ஆய்வுக்கு உட்படுத்துவதாகவும் இவ்வியல் அமைந்துள்ளது.

''கோயிலில்லா ஊரில் குடியிருக்க வேண்டாம்''[1] என்று உலகநீதி குறிப்பிடுகின்றது. கோயில் என்பது பக்தி உணர்வுகளின் ஊற்றுக்கண்; பழங்கால மன்னர்களின் சின்னம்; மக்கள் பக்தியோடு மகிழ்ச்சியோடு, ஒற்றுமையோடு வாழ்ந்ததற்கான சான்று; வரலாற்றின் மூலம்; கலைகளின் களஞ்சியம்; இலக்கியங்களின் பேழை; கல்வெட்டுக்களின் இருப்பிடம்; பலவகைப்பட்ட செல்வங்கள் மேன்மேலும் நிறையுமிடம். மக்களின் நோய்களைத் தீர்க்கும் மருந்தகமும், 'சரஸ்வதி பண்டாரம்' என்ற பெயருடைய நூலகமும் இயங்குமிடம்; வறுமையால் வாடுகின்ற மக்களுக்குத் துணை செய்கின்ற வங்கி, பஞ்ச காலத்தில் அனைவருக்கும் உணவு தருகின்ற களஞ்சியம்; போர்க்களக் காலத்துக் கோட்டை; போரில் வீழ்ச்சியடைந்தவர்களுக்கு அடைக்கலப் புகலிடம் ஆகும். ஆகவே சமுதாய வட்டத்திற்குக் கோயிலே மையமாகும். சமுதாயத்தில் பல இனத்தவர்கள் தலைமுறைத் தலைமுறையாக கோயிலைச் சார்ந்து வாழ்கின்றனர். இதற்கு வசதியாகக் கோயில் ஊரின் மையத்தில் அமைந்திருக்கக் காணலாம்.

பரந்த நிலப்பரப்பில் கோயில் கட்டப்பெறுகின்றது.கோயிலைக் கட்டுகின்ற பணியாளர்கள் அதனருகே குடியேறுகின்றனர். ஓர் ஊர் உருவாகின்றது.

''கோயிலொடு குடிநிறீஇ''[2]

என்ற பட்டினப்பாலைத் தொடர் இந்த உண்மையை உணர்த்துகின்றது. ''மன்னன் கோயிலைக் கட்டுகின்றான். அதனருகே மக்கள் குடியேறுகின்றனர். நான்கு மாடவீதிகள் அமைக்கின்ற போது, அந்தணர் முதலிய நான்கு வருணத்தாருக்கும்,

அந்த நான்கு வீதிகளைத் தனித்தனியே ஒதுக்கி அவர்களைக் குடியமர்த்துவது அந்த வீதிகளில் மரபு. காலம் கடக்க, கோயிலைச் சார்ந்த இடம் முதலில் சிற்றூராகவும், தொடர்ந்து பேரூராகவும் முடிவில் நகரமாகவும் படிப்படியே மலர்ந்து விரிகின்றது. இவ்வாறு, மதுரை முதலான பல நகரங்களில் நடுநாயகமாகக் கோயில் பெருமிதத் தோற்றத்துடன் உயர்ந்து நிற்பதை இன்றும் காணலாம்.

வீட்டைக் கட்டுவதற்கு "வாஸ்து சாஸ்திரம்" இருப்பதைப் போலக் கோயிலைக் கட்டுவதற்கும் ஆகம விதிகள் பல இருக்கின்றன.

1. கருவறை, 2. அர்த்த மண்டபம், 3. மகாமண்டபம் என்ற மூன்றும் கோயிலின் அடிப்படை உறுப்புக்களாகும். மூலவர் எழுந்தருளுகின்ற இடம் கருவறை; இவருக்கு வழிபாடுகளைச் செய்ய அர்ச்சகர் இயங்குமிடம் அர்த்தமண்டபம்; மூலவரைத் தரிசிக்கப் பக்தர்கள் கூடி நிற்குமிடம் மகா மண்டபம். மேலும் கோயிலின் நுழைவாயிலுக்கு அருகில் பலிபீடம், கொடிமரம், வாகனம் ஆகிய மூன்றும் அமைந்திருக்க வேண்டும். இந்த அடிப்படை உறுப்புக்கள் ஆறும் எல்லாக் கோயில்களிலும் உண்டு.

### ஐம்பூதத் தலங்கள்

சங்கர நயினார் கோயில் பாண்டிய நாட்டில் ஐம்பெரும் பூதத் தலங்களில் தலைமையான தலம் என்று திரு. எச்.ஆர்.பேட் அவர்கள் "சென்னை மாவட்ட கெசட்டியார்" என்ற நூலில் குறிப்பிடுகின்றார்.[3] இதே செய்தி கரிவலம்வந்தநல்லூர், திருக்கருவைத் தலபுராணத்திலும் குறிக்கப்பட்டுள்ளது.[4]

### பாண்டிய நாட்டில் ஐம்பூதத் தலங்கள்

பாண்டிய நாட்டிலுள்ள சிவாலயங்களுள் ஐம்பூதத் தலங்களாக வழங்கப் பெறுபவை கீழ்வருமாறு:

| | | | |
|---|---|---|---|
| 1. | சங்கர நயினார்கோயில் | - | மண் தலம் |
| 2. | தாருகாபுரம் | - | நீர்த் தலம் |
| 3. | தென்மலை | - | காற்றுத் தலம் |

| | | | |
|---|---|---|---|
| 4. | **கரிவலம் வந்த நல்லூர்** | - | **தீத்தலம்** |
| 5. | **தேவதானம்** | - | **ஆகாயத் தலம்** |

பஞ்ச பூதங்களின் கூட்டுறவே இவ்வுலகம். தொல்காப்பியரும், 'கலந்த மயக்கம் உலகம்' என்பார். எனவே இவ்வுலகின் ஆக்கத்திற்குக் காரணமான பூதங்கள் இறைவனோடு இயைக்கப் பெற்று இறைவனை அப்பூதங்கள் வழிபட்ட திருத்தலங்கள் இவையிவை எனச் சுட்டும் வழக்கு, சைவ சமயத்தில் உண்டு. பாண்டிய நாட்டில் பஞ்சபூதத் தலங்கள் இருப்பது போன்றே சோழநாட்டிலும் உண்டு. அவை :

| | | | |
|---|---|---|---|
| 1. | **மண்** | : | **திருவாரூர்** |
| 2. | **தீ** | : | **திருவண்ணாமலை** |
| 3. | **நீர்** | : | **திருவானைக்கா** |
| 4. | **காற்று** | : | **திருக்காளத்தி** |
| 5. | **ஆகாயம்** | : | **சிதம்பரம்** |

என்பனவாகும்.

சோழ மண்டலத்தில் உள்ள திருவாரூர் தியாகராசர் திருக்கோயிலும் மண்தலம் என்றே போற்றப்படுகின்றது. இக்கோயிலின் மூலவர் பெயரும் வன்மீகநாதர் என்பது. எனவே புற்றிடங்கொண்ட பெருமானை வன்மீகநாதர் என அழைப்பதும், அப்பெருமான் எழுந்தருளியுள்ள தலங்களைப் பஞ்சபூதத் தலங்களில் மண்தலமாகக் கருதுவதும் சைவ மரபு என்பது புலனாகிறது.

பாண்டிய நாட்டில் பல திருத்தலங்கள் இருக்கவும் சங்கர நயினார் கோயில் மட்டும் "மண் தலம்" என்ற பெருமையைப் பெற்றுள்ளது என்று கூறலாம்.

## இருப்பிடம்

பழங்காலத்தில் பாண்டிய நாட்டில் ஒரு பகுதியாக இருந்த சங்கர நயினார் கோயில் இக்காலத்தில் திருநெல்வேலி மாவட்டத்தில் ஒரு வட்டமாக அமைந்துள்ளது.

திருக்குற்றாலத்திலிருந்து கிழக்கே 30 கி.மீ தூரத்திலும், இராசபாளையத் திலிருந்து தெற்கே 30 கி.மீ தூரத்திலும், கழுகுமலையிலிருந்து மேற்கே 18 கி.மீ தூரத்திலும் திருநெல்வேலியிலிருந்து வடமேற்கே 51 கி.மீ தூரத்திலும் இக்கோயில் அமைந்துள்ளது.

விருதுநகர் - தென்காசி இரயில் வழியில் சங்கர நயினார் கோயில் அமைந்துள்ளது. கோயிலின் பெயரே ஊரின் பெயராக அமைந்திருப்பது சிறப்புத் தன்மையாகும். மக்கள் சங்கரன்கோவில் என்றும் அழைக்கின்றனர்.

**மக்கள்தொகை**

2001 ஆம் ஆண்டின் மக்கள் தொகைக் கணக்கெடுப்பின்படி சங்கரன் கோயில் ஊரின் மக்கள்தொகை பற்றிய விவரம்:

| | | | |
|---|---|---|---|
| 1) | ஆண்கள் | - | 26,271 |
| 2) | பெண்கள் | - | 27,342 |
| 3) | மொத்த மக்கள்தொகை | - | 53,643 |
| 4) | மொத்தக் குடும்பங்கள் | - | 11,650 |

**சங்கரன் கோயில் நகராட்சி**

| | | | |
|---|---|---|---|
| 1. | வார்டுகளின் எண்ணிக்கை | - | 30 |
| 2. | அரிசனப் பெண்களுக்காக ஒதுக்கப்பட்ட வார்டுகள் | - | 02 |
| 3. | மற்ற பெண்களுக்காக ஒதுக்கப்பட்ட வார்டுகள் | - | 08 |
| 4. | பெண்களுக்காக ஒதுக்கப்பட்ட மொத்த வார்டுகள் | - | 10 |
| 5. | பொதுவானவை | - | 20 |

சங்கரன் கோயில் ஒரு பேரூராக - சிறு நகரமாக அமைந்திருக்கின்றது.

**கோயில் அமைந்துள்ள இடம்**

வேறு பல திருத்தலங்களில் காணப்படுவதைப் போல இத்திருத்தலத்திலும் ஊரின் மையப் பகுதியில் சங்கர நயினார் கோயில் அமைந்துள்ளது.

**நில அளவுகள்**

கோயில் அமைந்த நிலத்தின் பரப்பளவு 4 ஏக்கர் 50 செண்ட். கிழக்கு மேற்காக நீளம் 592 அடி. வடக்கு தெற்காக அகலம் 306 அடி. பரந்த நிலப் பரப்பில் இக்கோயில் அமைந்துள்ளது.

**மாட வீதிகள் நான்கு**

சங்கர நயினார் கோயிலின் கிழக்கு முதலான நான்கு திசைகளிலும் மாட வீதிகள், தேரோடும் வீதிகள் அமைந்துள்ளன.

கோயிலின் நான்கு பக்கங்களிலும் நான்கு வாயில்கள் காணப்படுகின்றன. இவற்றுள் கிழக்குப் பக்கவாயில் தலைவாயில் ஆகும். தலைவாயில் தொடங்கி மாட வீதிகளில் வலம் வந்தால், வலம் வருபவரின் வலப்பக்கம் முழுவதும் சங்கர நயினார் கோயிலும், இடப்பக்கம் முழுவதும் பிள்ளையார், சுப்பிரமணியர் முதலான பரிவார தெய்வங்களுக்கு உரிய கோயில்களும், இறை அன்பர்கள் தங்குவதற்கான மண்டபங்கள், அந்தணர் வீடுகள், விடுதிகள், அலுவலகக் கட்டடங்கள் ஆகியனவும் இருக்கின்றன.

**கோபுரம்**

சங்கரநயினார் கோயிலின் இராசகோபுரம் கிழக்கு வாயிலின் மீது அமைந்தது. 125 அடி உயரமானது; கம்பீரமானது; சிற்ப வேலைப்பாடுகள் நிறைந்தது; ஒன்பது நிலைகளைக் கொண்டு, தெய்வீகமாக விளங்குகின்றது.

கோபுரத்தின் உச்சி, தெற்கு வடக்காக 56 அடி நீளமும், கிழக்கு மேற்காக 15 அடி அகலமும் உடையது.

**கலசங்கள்**

கோபுரத்தின் உச்சியிலுள்ள கலசங்களின் எண்ணிக்கை ஒன்பது; ஒரு கலசத்தின் உயரம் ஏழடி நான்கு அங்குலம் ஆகும்.

தமிழகத்தில் திருவரங்கத் திருக்கோயிலின் இராசகோபுரம் மிக உயரமானது. இதன் உயரம் 236 அடி. சிதம்பரம், மதுரை, திருவண்ணாமலை முதலிய திருத்தலக் கோபுரங்களும் மிக உயரமானவை. உயரமான இந்தக் கோபுரங்களின் வரிசையில் சங்கர நயினார் கோயில் கோபுரமும் இடம்பெற்றுள்ளது எனலாம்.

**மணியும் கடிகாரமும்**

கோபுரத்தின் ஒன்பதாம் நிலையின் கீழ்ப் பகுதியில் ஒரு பெரிய மணி தொங்குகின்றது. இந்த மணிக்கு அருகில் இருந்த கடிகாரம் இரண்டு நாழிகைக்கு ஒரு முறை மணியடிப்பது வழக்கம். ஆகவே இதனை "நாழிகைக் கடிகாரம்" என்று மக்கள் அழைத்தனர். ஐம்பதாண்டுகளுக்கு முன் இது செயலிழந்தது. இக்கோபுரத்திலுள்ள மணி, கடிகார அமைப்புகளைப் பிற கோயில்களில் காண முடியாது. இந்துமதக் கோயில்களில் வானுயர்ந்த கோபுரங்கள் அமைக்கப் படுகின்றன. கோபுரம் அமைப்பதில் ஒரு தத்துவக் கோட்பாடு உண்டு. கோபுர அமைப்பிற்கான உட்பொருள் : கோபுரம் - கோ + புரம். கோ - பசு - உயிர். உயிரினங்களின் உயிர்கள் உறைகின்ற இடம் கோபுரம். இதனை உணர்த்தவே பற்பல உயிரினச் சிற்பங்களைக் கோபுரத்தில் வடிக்கின்றனர். இவைகளுக்குப் பேரருள் சுரப்பவன் இறைவன். கோயிலில் ஐந்து வகைப்பட்ட லிங்கங்கள் இருப்பதாக எண்ணுவது சைவ மரபு. அவை வருமாறு:

1. கோபுரம் - தூலலிங்கம்
2. கருவறை - சூட்சம லிங்கம்
3. பலிபீடம் - அதிசூட்சம லிங்கம்

4. கொடி மரம் - காரணலிங்கம்

5. மூல லிங்கம் - மகா காரணலிங்கம்

கோபுரத்தைப் = பதி என்பர். சிற்பங்கள் பசுக்கள் என்பர். அதாவது உயிர்கள். கோபுரம் தூலலிங்கமாக - பதியாக இருப்பதால் இதைத் தூரத்திலிருந்தும், காலையிலும் மாலையிலும் தரிசிப்பது மிக்க பயன்களைத் தருகின்றது. இதனால் ''கோபுர தரிசனம் கோடி புண்ணியம்'' என்ற பழமொழியும் தோன்றிப் பெரு வழக்காக வழங்கி வருகிறது.

**விமானங்கள்**

மிக முக்கியமான தெய்வங்கள் எழுந்தருளியுள்ள சன்னதிகளின் மேற்புறத்தில் விமானங்கள் கட்டப்படுகின்றன. இவை கோபுரத்தை விடத் தாழ்ந்தவை; கொடி மரத்தை விட உயர்ந்தவை.

சங்கர நயினார் கோயிலில் சங்கரலிங்க சுவாமிகள், சங்கர நாராயணர், கோமதியம்பிகை, சண்முகர் ஆகியோர் நால்வரது சன்னதிகளின் மேற்புறத்தில் நான்கு விமானங்கள் உள்ளன. இவற்றிலும் சுதைச் சிற்பங்கள் பல காணப்படுகின்றன. இந்த நான்கு விமானங்களையும் தூலலிங்கங்களாகப் போற்றி வழிபடுவது மரபாக உள்ளது.

**நுழைவு மண்டபம்**

தலை வாயிலைக் கடந்தவுடன் இருப்பது நுழைவு மண்டபமாகும். இங்கிருந்து நேராக நோக்கினால், மூலவர் கருவறையில் அமைந்திருப்பதைக் காணலாம். மண்டபத்தின் இருமருங்கிலும் சிறு, சிறு மண்டபங்களும், அறைகளும், கடைகளும் இருக்கின்றன. இங்கே கருணை இல்லம் ஒன்றும் இருக்கின்றது.

## திசைப் பிரகாரங்கள் நான்கு

### கிழக்குப் பிரகாரம்

நுழைவாயில் மண்டபத்தின் முடிவில் இருப்பது கிழக்குப் பிரகாரம். சங்கரலிங்க சுவாமிகள், சங்கர நாராயண சுவாமி, கோமதியம்பிகை ஆகிய தெய்வங்களுக்குரிய கோயில்களின் வாயில்கள் வரிசையாகக் கிழக்குப் பிரகாரத்தில் இருக்கின்றன. மூலவர் சன்னதியின் தென்கிழக்கில் கோயில் அலுவலக அறையும், மடைப்பள்ளியும், களஞ்சிய அறையும் இருக்கின்றன. வடகிழக்கில் இருப்பது நடராசர் சன்னதி. இதன் பின்னே யானைத் தொழுவம் உள்ளது.

### பெரிய மண்டபம்

கிழக்குப் பிரகாரத்தில் பெரிய மண்டபம் உள்ளது. இம்மண்டபம் இலக்கிய, சமயச் சொற்பொழிவுகள் நடைபெறுகின்ற கூடமாகவும், இசையரங்கமாகவும் பயன்படுகின்றது. பெருந்திரளான மக்கள் கூடினாலும், போதிய இடவசதி இந்த மண்டபத்தில் உண்டு.

### தெற்குப் பிரகாரம்

தெற்குப் பிரகாரத்தின் வடக்குப் பக்கத்தில் மூலவர் சன்னதியின் சுவரும், தெற்குப் பக்கத்தில் வாகனக் கிடங்குகளும் உள்ளன.

### மேற்குப் பிரகாரம்

இது திறந்தவெளியாகக் காணப்படுகின்றது. இதன் தென்மேற்கு மூலையில் இக்கோயிலின் தல மரமான புன்னைமரம் இருந்த இடத்தில் விநாயகர் சிலையும், புன்னை மரமும் உள்ளன.

### வடக்குப் பிரகாரம்

இதன் வடகிழக்கு மூலையில் சண்முகர் சன்னதியும், நாகசுனையும் உள்ளன. வடமேற்கு மூலையில் பாலசுப்பிரமணியர் சன்னதியும் உள்ளது. மாதத் திருக்கார்த்திகை அன்று இங்கு பூசை நடைபெறுகின்றது. சங்கர நயினார் கோயிலில்,

1) மூலவர் சங்கர லிங்க சுவாமி சன்னதி
2) சங்கர நாராயணர் சன்னதி
3) கோமதியம்பிகை சன்னதி
4) நடராஜர் சன்னதி
5) சண்முகர் சன்னதி

ஆகிய ஐந்து சன்னதிகள் மிகவும் முக்கியமானவை. மேலும் நவக்கிரகங்கள் சங்கரலிங்க சுவாமி சன்னதிக் கொடிமரத்திற்கு வடகிழக்கில் அமைந்துள்ளன. நவக்கிரகங்களுக்குத் தனிச் சன்னதி கிடையாது.

### மூன்று கோயில்கள்

கோயிலின் தெற்குப் பக்கத்தில் மூலவர் சங்கரலிங்க சுவாமியின் சன்னதியும், வடக்குப் பக்கத்தில் கோமதியம்பிகையின் சன்னதியும், இவை இரண்டுக்கும் இடையில் சங்கரநாராயணர் சன்னதியும் வரிசையாக அமைந்துள்ளன. இவை மூன்றும் சன்னதிகளேயானாலும் இவற்றின் அமைப்பையும், சிறப்பையும், பெருமையையும் கருதி, இவற்றைக் கோயில்கள் என்று மேம்படுத்திக் கூறுகின்றனர்.

சங்கரநாராயணரது திருமேனியின் வலப் பக்கத்தில் சங்கரனும், இடப் பக்கத்தில் நாராயணரும் உள்ளதால் மூலவரான சங்கரனுக்கு இடப்பக்கத்தில் சங்கரநாராயண சுவாமி மற்றும் கோமதி அம்பிகை ஆகியயோரின் தனிக் கோயில்கள் அமைந்திருப்பது அழகாகவும், மிகப் பொருத்தமானதாகவும் விளங்குகின்றன. இது சக்தியின் வடிவம் நாராயணன் என்பதை வலியுறுத்துகிறது.

மூன்று கோயில்களில் சங்கரலிங்க சுவாமி மற்றும் கோமதி அம்மாள் முன்னால் இரண்டு கொடிமரங்களும், வாகனங்களும் முறைப்படி தனித்தனி வரிசைகளில் இருக்கின்றன. சங்கர நாராயண சுவாமிக்குப் பலிபீடம் இல்லை.

### சங்கரலிங்க சுவாமியின் கோயில்

கோயிலின் கொடிமரம் ஐம்பது அடி உயரமானது; தங்கக் கலசத்துடன் பொலிவது. கொடி மரத்தையும், பலிபீடத்தையும் கடந்தவுடன் அதிகார நந்தியும், சுயஜா தேவியும் வீற்றிருக்கின்றனர்.

கருவறையில் சுவாமிகள் லிங்க வடிவில் எழுந்தருளிப் பேரருள் புரிகின்றார். கூடவே மனோன்மணி தேவியும் அழகுடன் தோற்றமளிக்கின்றாள். சங்கரலிங்கம் புகழுடன் விளங்குவதை,

> **''சங்கர லிங்கமோ தனுஷ்கோடி ராமலிங்கம்**
> **பூரியத்து லிங்கத்துக்குப்**
> **பூசை செய்யப் பிறந்த கண்ணே''[5]**

என்ற தாலாட்டுப் பாட்டிலும் குறிக்கப்படுகின்றது.

### வன்மீகநாதர்

கருவறையை ஒட்டி, வட மேற்கு மூலையில் ஒரு பழைய புற்று இருக்கின்றது. இதனையும் பக்தர்கள் போற்றி வழிபடுகின்றனர். புற்று மூலவராக வீற்றிருக்கின்றவர் ''வன்மீகநாதர்'' ஆவார்.

### சங்கர நாராயணர் கோயில்

சங்கர நாராயணர் கோயிலில் கருவறை, அர்த்த மண்டபம், மகா மண்டபம், சுற்று மண்டபம் என்பன உள்ளன. கருவறையில் சங்கர நாராயணர் வீற்றிருக்கின்றார். இரு பெருந் தெய்வங்களின் ஈருருவங்கள் ஓருருவமாக இணைந்து

இரட்டைப் பெருமிதத்துடன் தோன்றுகின்ற தோற்றப் பொலிவுகள் மிக்க அழகுடையன. இந்த வடிவத்தில் வலப் பக்கத்தில் சங்கரன் திருக்காட்சி தருவதால் அதில் சிவனின் அம்சங்களும், இடப்பக்கத்தில் நாராயணன் சேவை சாதிப்பதால் அதில் நாராயணனின் அம்சங்களும் நிறைந்து திகழ வேண்டும் என்பது ஆகம விதியாகும்.

## வியப்பான வடிவம்

சங்கர நாராயணர் சிலை ஒரே கல்லில் அமைந்தது. இது சங்கரனுக்குரிய வலப்பக்கத்தில் வெள்ளையாகவும், நாராயணனுக்குரிய இடப்பக்கதில் நீலமாகவும் இயல்பாகவே தோன்றுவது மிக்க வியப்புக்குரியது. ஒரே சிலையில் இரு வண்ணங்கள் பொலிகின்றன எனலாம்.

## குடை

சங்கன் என்ற நாக அரசன் சங்கரனுக்கும், பதுமன் என்ற அரசன் நாராயணனுக்கும் நாகக் குடைகளாக விளங்குகின்றனர்.

## திருமுடி

சங்கரனது சடைமுடியில் பிறை நிலா, கங்கை, அக்னி வடிவங்கள் விளங்க, நாராயணன் நீள் முடியை அணிந்துள்ளான்.

## முகத்தோற்றம்

சங்கரன் முகத்தில் கோப ஆவேசமும், நாராயணனின் முகத்தில் அமைதியும் தவழ்கின்றன.

## நெற்றி

நெற்றியில் சங்கரன் புனைந்திருப்பது திருநீறு; நாராயணன் தரித்திருப்பது திருமண்.

## ஆயுதம்

சங்கரனின் ஒரு வலக்கையில் இருப்பது மழு; நாராயணனின் ஓர் இடக்கையில் இருப்பது சங்கு.

## காதணி

சங்கரன் வலக் காதில் சங்கக்குழையும், நாராயணன் இடக்காதில் மகர குண்டலத்தையும் அணிந்துள்ளனர்.

## மாலைகள்

சங்கரன் சூடியிருப்பது உருத்தராக்க மாலை; துளசி மாலையை நாராயணன் சூடிக் கொண்டிருக்கின்றான். இவனது இடது மார்பில் இலக்குமி உறைகின்றாள்.

## முத்திரைகள்

சங்கரனின் மற்றொரு வலக் கையில் இருப்பது அபய முத்திரை; நாராயணனின் மற்றோர் இடக்கையில் இருப்பது சிம்ம கர்ண முத்திரை.

## ஆடைகள்

புலித் தோலாடையைச் சங்கரனும், பட்டாடையை நாராயணனும் உடுத்தியுள்ளனர்.

இவ்வாறு சங்கர நாராயணரின் திருக்கோலம், அதைக் காண்பவரது மனத்தைக் கோயிலாக்கி அதில் உடனே எழுந்தருளுகின்ற பேராற்றலுடையது என்று கூறலாம்.

**சிவனின் சக்தி வடிவம் நாராயணன்**

சிவனின் சக்தி வடிவம் நாராயணன் ஆவான். எனவே சிவனைக் குறிக்கப் 'பெருமான்' என்ற பெயரையும், நாராயணரைக் குறிக்கப் 'பெருமாள்' என்ற பெயரையும் பயன்படுத்துகின்றனர்.

சிவத்தைப் பரப்பிரம்மமாகவும், விஷ்ணுவைப் பராசக்தியாகவும் வைத்துக் கொள்ளலாம். அம்பிகையும் விஷ்ணுவும் உடன் பிறந்தோர் என்று சொன்னாலும் அவர்கள் ஒன்றேதான் என்பது பரம ஞானிகளின் அனுபவம்.

**''அரியலால் தேவி இல்லை**
**ஐயன் ஐயாறனார்க்கே''[6]**

என்று அப்பர் சுவாமிகள் பாடியிருக்கின்றார். சங்கர நாராயணர் வடிவத்தையும், அர்த்தநாரிசுவரர் வடிவத்தையும் பார்த்தால் இந்த உண்மை தெரியும். இரண்டிலுமே வலப்பக்கம் பரமேசுவரனுடையது.

**''ஒன்றிலே இடப்பக்கம் விஷ்ணு**
**இன்னொன்றிலே அதே இடதுபுறம்**
**அம்பாளுடையது''[7]**

என்பது ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சாரிய சுவாமிகளின் அருளுரையாகும். மற்றொரு மேற்கோள் வருமாறு :

''குமார சம்பவத்தில் மகாகவி காளிதாசர் கூறும் ஒரு கருத்து இங்குச் சிந்திக்க வேண்டியதொன்று. சக்தி ஒன்று, பரமேசுவரனுடைய அருளாடல் பயனுக்கேற்ப அது நால் வகையில் பரிணமிக்கிறது. போக சக்தியாக மிளிரும் போது பவானியாகவும், புருஷ சக்தியாகவும் வெளிப்படும்போது விஷ்ணுவாகவும், குரோத சக்தியாகவும் விளங்கும்போது காளியாகவும், போர் (சமரசம்) சக்தியாகத் திகழும் போது துர்க்கையாகவும் செயலாற்றுகின்றன என்று காளிதாசர் மிகத் தெளிவாகக் காட்டுகின்றார்.''[8]

ஆகவே, அரனின் ஒரு சக்தியே அரி என்பது ஒருதலையாம். இக்கருத்தைத் தழுவித் திருநாவுக்கரசர் திருவையாற்றுப் பதிகத்திலும், திருப்பயற்றூர்ப் பதிகத்திலும் அரியைத் ''தேவி'' என்று குறித்தார் என்பது முன்னர்க் கூறப்பட்டது.[9]

திருமழிசை யாழ்வாரும்,

''மாதாய மாலவனை மாதவனை''[10]

என்றும் ''மாதாய மாலவன்'' என்றும் அரனின் தேவியான அரியைக் குறித்தார். எனவே சிவனின் சக்தி வடிவம் நாராயணன் என்ற அரிய கருத்தை இருசமயச் சான்றோரும் ஒருங்கே ஏற்கின்றனர் என்பது புலனாகின்றது.

## ஸ்படிக லிங்கம்

''சிவன் அபிடேகப் பிரியன்; விஷ்ணு அலங்காரப் பிரியன்.'' இவர்கள் இருவரும் இணைந்த சங்கர நாராயணர் திருமேனிக்கு அலங்காரமுண்டு; அபிடேகமில்லை. ஆனால் சிவாம்சம் அபிடேகம் இல்லாமல் இருக்கக் கூடாது என்ற காரணத்தின் அடிப்படையில் சிருங்கேரி மடத்தின் மூன்றாவது பெரியவரான ஸ்ரீ நரசிம்ம பாரதி சுவாமிகள் சங்கர நயினார் கோயிலுக்குத் தரிசனம் செய்ய வந்த சமயத்தில் அவர் வெள்ளிப் பேழையுடன் கூடிய ஸ்படிக லிங்கத்தைக் கொடுத்தார். நாள் வழிபாடுகளின்போது காலை 9.30 மணிக்கு இந்த ஸ்படிக லிங்கத்திற்கு அபிடேகம் நடைபெறும். பன்னிரெண்டு ஆண்டுக்கு ஒருமுறை நடைபெறும் குடமுழுக்குத் திருவிழாவின் போது சங்கர நாராயணருக்கு அபிடேகம் நடைபெறும் என்று கோவில் நிர்வாக அதிகாரி அவர்கள் கூறியிருப்பது குறிப்பிடத்தக்கதாகும்.

## கோமதியம்பிகை கோயில்

கோமதியம்பிகையின் திருக்கோலம் தவக்கோலம், அழகானது; அமைதியானது. அனைவருக்கும் அருள் பொழிகின்ற முறையில் அமைந்திருக்கின்றது. அம்பிகையின் உயரம் 4 அடி; அகலம் 11/2 அடி. சுவாமியை விட அம்பிகை மிக்க பேரருளைச் சுரக்கின்றவள் என்பது பக்தர்களின் நம்பிக்கையாகும். குங்கும அர்ச்சனை கோமதியம்பிகைக்கு மிகவும் உகந்ததாகும்.

**ஸ்ரீசக்கரம்**

அம்பிகையின் திருமுன் மந்திரம், பேராற்றல் நிறைந்த ஒரு ஸ்ரீசக்கரம் உள்ளது. இதனைத் திருவாவடுதுறை ஆதினப் பத்தாம் குரு மகா சன்னிதானம் அருள்மிகு வேலப்ப தேசிகர் அவர்கள் நிறுவினார்.

பித்தேறியவர்கள், மனம் மிகக் குழம்பியவர்கள், நோய்களால் நலிந்தவர்கள், பேய்களால் கோட்பட்டதாகக் கருதப்படுபவர்கள், பயந்தவர்கள், பில்லி, சூனியங்களால் தாக்கப்பட்டதாகக் கருதப்படுகிறவர்கள் அந்த ஸ்ரீசக்கரத்தின் மேல் அம்பிகையை நோக்கி அமர்ந்து தியானித்து, பிரார்த்தனை செய்து வேண்டினால் அக்குறைகள் அனைத்தும் அகலுகின்றன எனலாம்.

அம்பிகையிடம் வேண்டி மகப்பேறடைந்த மகளிர் பலராவர். ஆகவே சங்கர நயினார் கோயில் சிறந்த பிரார்த்தனைத் தலமாகத் திகழ்கின்றது.

**''பேய் வாயிற் பட்டாரும் பித்து மிகப் பெற்றாரும்**
**நோய்கள் சால உற்றாரும் நுழைந்து னருட் சன்னதியில்**
**தாய்நீயே சரணமென்று தவங் கிடந்து சுகமுறுவார்**
**வாய்மையிது முக்காலமுமா ண்பு நிறை கோமதியே''**[11]

என்று கோமதி சதரத்னமாலை அவளது அருள் திறத்தைப் புலப்படுத்துகின்றது.

**புற்றுமண்**

நாகர்கோயில் முதலிய பல திருத்தலங்களில் புற்று மண்ணைப் பிரசாதமாக வழங்குகின்றனர். சங்கர நயினார் கோயிலிலும் புற்று மண் பிரசாதம் புகழ் பெற்றதாகும்.

கோயிலின் வடமேற்கு மூலையில் ஐந்தடி உயரமான ஒரு பெரிய புற்று உள்ளது. இதன் மீது நாகங்களின் படங்கள் சில வரையப்பட்டுள்ளன. புற்று மண்ணை அள்ளிச் சிறு சிறு உருண்டைகளாக்கிப் பிரசாதமாகத் தருகின்றனர். இதில் மருத்துவ குணங்கள் இருப்பதால் இது பல பிணிகளை நீக்குகின்ற ஆற்றலுடையது.

''புற்று மருந்தாலே பிணீ தீர்ப்பாளே

ஆவுடையாள்''[12]

என்று அம்பிகையின் அருளையும், புற்று மண்ணின் மருத்துவ ஆற்றலையும் நாட்டுப்புறப் பாடலொன்று பாராட்டுகிறது.

டாக்டர் உ.வே.சாமிநாதையர் அவர்களும், 'என் சரித்திரம்' என்ற நூலில்,

''அவ்வாலயத்திலுள்ள புற்று மண்ணை மருந்தாக

உண்டு நோய்கள் தீர்ந்த பலரைப் பார்த்தேன்''[13]

என்று புற்று மண்ணின் பெருமையைப் போற்றுவது இங்குக் குறிக்கத்தக்கது.

**நடராசர் சன்னதி**

கோயில்களில் நடராசர் வடிவமும், தட்சிணாமூர்த்தி வடிவமும் எப்போதும் தெற்கு நோக்கியே இருக்க வேண்டும் என்பது விதி. இந்த விதியின்படி சங்கர நயினார் கோயிலிலும் அந்த வடிவங்கள் இரண்டும் தெற்கு நோக்கிக் காணப்படுகின்றன.

சன்னதி அம்பலத்தில் நடராசரும், சிவகாமி அம்மையாரும், காரைக்காலம்மையாரும் கற்சிலை வடிவங்களில் கவின்மிகு தோற்றத்துடன் திகழ்கின்றனர். மற்றும் பதஞ்சலியும், வியாக்கிர பாதரும் நடராசரின் ஞான நடனத்தை இடையறாமல் தரிசிக்கின்றனர்.

நடராசரின் அம்பலத்தில் மாணிக்கவாசகரும் எழுந்தருளியிருப்பது மரபு. ஆனால், இக்கோயிலில் மாணிக்கவாசகருக்குப் பதிலாகக் காரைக்காலம்மையாரின் திருமேனி காணப்படுகின்றது. காரைக்கால் அம்மையார் இறவாத இன்ப அன்பினை வேண்டிப் பாடுவதாக அமைந்த திருப்பாடல்,

''பிறவாமை வேண்டும் மீண்டும்
        பிறப்புண்டேல் உள்ளன என்றும்
மறவாமை வேண்டும் இன்னும்
        வேண்டுநான் மகிழ்ந்து பாடி

**அறவா நீ ஆடும் போதுன்**

**அடிக்கீழ் இருக்க என்றார்''[14]**

என்பதாம். காரைக்காலம்மையார் பாடும் போது கூத்தும், பாட்டும் இணைகின்றன.

**''தென்கிழக்கு ஆசிய நாடுகளில் கி.பி. பதினைந்தாம் நூற்றாண்டு வரை காரைக்காலம்மையார் வழிபாடு ஊழிக் கூத்தாடும் நடராசருடன் இணைந்து இருந்தது''[15]**

என்று க.த.திருநாவுக்கரசு அவர்கள் கூறிய கருத்து இங்குக் கருதத்தக்கது. எனவே இம்மரபின் எச்சமிச்சமாக இத்திருத்தலத்தில் காணப்பெறும் நடராசர் - காரைக்காலம்மையார் வழிபாடு சங்கர நயினார் கோயிலின் தனிச் சிறப்பு எனலாம்.

**சண்முகர் சன்னதி**

தெற்கு நோக்கிய சன்னதியில் இருதேவியருடன் சண்முகர் வீற்றிருக்கின்றார்.

**நவ கிரகங்கள்**

கோயில் வழிபாடு நவ கிரக நாயகர் வழிபாட்டுடன் நிறைவு பெறுகின்றது. எனவே கோயிலின் வாயிலுக்கருகே வடகிழக்கு மூலையில் நவகிரகங்களை நிறுவுவது மரபாகும். இம்மரபின்படி இக்கோயிலிலும் வடகிழக்கு மூலையில் நவ கிரகங்கள் உள்ளன.

திருஞானசம்பந்தர் நவ கிரக வழிபாட்டினைக் கோளறு பதிகத்தின் மூலம் உணர்த்துகிறார்.

**வேயுறு தோளிபங்கன் விடமுண்ட கண்டன்**

**மிக நல்ல வீணை தடவி**

**மாசறு திங்கள் கங்கை முடிமேல் அணிந்தென்**

**உளமே புகுந்த அதனால்**

**ஞாயிறு திங்கள் செவ்வாய் புதன் வியாழன் வெள்ளி**

**சனி பாம்பிரண்டு முடனே**

ஆசறு நல்ல நல்ல அவை நல்ல நல்ல

அடியார் அவர்க்கு மிகவே[16]

எனும் திருஞானசம்பந்தரின் கோளறு பதிகத்தின் மூலம் அக்காலத்திலேயே நவக்கிரக வழிபாடு மக்களிடையே பெருஞ் செல்வாக்குப் பெற்றிருந்தமை புலனாகிறது.

சங்கரலிங்க சுவாமியின் அருளாணைகளைச் செயல்படுத்துகின்ற இந்த நவக்கிரக நாயகர்கள் "தொண்டர் தெய்வங்கள்" ஆவர். இவர்களில் 1. சூரியன் 2. சந்திரன் 3. சனி பகவான் ஆகிய மூவரது கற்சிலைகள் மண்டபப் பிரகாரங்களில் இருக்கின்றன. இவர்கள் தனிச் சிறப்புடையவர்களாகப் போற்றப்படுகின்றனர்.

இனி, சங்கர நயினார் கோயிலின்

1. தலமரம்
2. தீர்த்தங்கள்
3. யானைத் தொழுவம்
4. கற்சிலைகள்
5. ஓவியங்கள்

என்பனவற்றை ஆராயலாம்.

**தலமரம்**

பழங்காலத்தில் அரசு, ஆல், வேம்பு, வில்வம் முதலிய பல மரங்களைப் புனித மரங்களாகக் கருதி வழிபட்டனர். அடுத்து அவற்றின் அடியில் சுதைத் திருமேனிகளை எழுந்தருளச் செய்து இரண்டையும் வழிபடத் தொடங்கினர். காலப்போக்கில் கோயில்கள் பற்பல உறுப்புகளுடன் பெரு வளர்ச்சி பெற்றபோது புனித மரம் ஒன்றும் அவற்றின் ஓர் உறுப்பாக அமைந்தது. இதனைத் 'தலமரம்' என்பர்.

ஒரு காலத்தில் சங்கர நயினார் கோயில் இருந்த இடம் புன்னைவனக் காடாக இருந்தது. எனவே அக்கோயிலின் தலமரம் புன்னைமரம் ஆகும். புன்னைமரம் பல கோயில்களில் தலமரமாக விளங்குகின்ற சிறப்புடையது. காட்டாக,

திருப்புனவாயில், திருப்புகலூர், திருமயிலாப்பூர், திருவெண்ணெய்நல்லூர், திருவேட்டக்குடி முதலிய சிவன் கோயில்களிலும் திருக்குடந்தை, திருக்கோவிலூர், திருப்பாடகம், திருப்புலியூர், திருப்புள்ளம், பூதக்குடி முதலிய பெருமாள் கோயில்களிலும் புன்னை மரம் தலமரமாகும்.

திருஞானசம்பந்தர்,

''புன்னை நன் மாமலர் பொன்னு
தீர்க்கும் புன வாயிலே''[17]

என்று புன்னை மரத்தின் எழிலை வருணித்தார்.

பொதுவாகத் தலமரங்கள் மருத்துவக் குணமுடையனவாக இருக்கும். தோலில் தோன்றுகின்ற நோய்களைக் குணப்படுத்தும் மருந்தாக இக்கோயிலின் தலமரமான புன்னைமரம் பயன்படுகிறது.

சங்கர நயினார் கோயிலின் தலமரமான புன்னை, கோயிலின் தென்மேற்கு மூலையில் இருந்தது. எனவே அந்த இடத்தில் விநாயகர் திருமேனியொன்றை எழுந்தருளச் செய்தனர். இவரைப் பக்தர்கள் வலம் வந்து வணங்குகின்றனர். பழைய தலமரம் அழிந்துவிட்டது. எனவே புதிய புன்னைமரக் கன்று ஒன்றை நான்கு ஆண்டுகளுக்கு முன்பு வைத்து வளர்த்து வருகின்றனர். இத்தலமரமே தற்பொழுது வழிபாட்டுக்குரியதாக விளங்குகிறது.

**தீர்த்தங்கள்**

''மூர்த்தி தலம் தீர்த்தம்
முறையால் தொடங்கினார்க் கோர்
வார்த்தை சொலச் சற்குருவும்
வாய்க்கும் பராபரமே''[18]

### நாகசுனை

சங்கர நயினார் கோயிலின் தீர்த்தமான நாகசுனை, கோயிலுக்குள் நுழையுமிடத்தில், கோமதியம்பிகையின் அருள் நோக்கம் எப்போதும் பதிகின்ற அவளது நேர் திருமுன், ஓர் அழகான நடுமண்டபத்துடனும், பக்க மண்டபங்களுடனும் விளங்குகின்றது. சங்கன், பதுமன் என்ற பாம்பரசர்கள் மூழ்கிய தீர்த்தமும், ஆழமாகத் தோண்டிய தீர்த்தமும் இதுவே. 'நாகசுனை' என்ற பெயருக்குத் தகுந்தபடி, நாகத்திற்கு அஞ்சுகின்ற மீன், தவளை முதலிய நீர்வாழ்உயிரினங்கள் இதில் வாழ்வதில்லை.

தோலில் ஏற்படுகின்ற நோய்களால் துன்பப்படுகின்றவர்கள் நாகசுனையில் உப்பையும், மிளகையும் விரவித் தூவினால் அந்நோய்கள் விரைவில் விலகுகின்றன என்று மக்கள் நம்புகின்றனர்.

''நாகசுனையில் உள்ள நச்சுத்தன்மை மிளகாலும் உப்பாலும் மருந்தாகிறது என்று டாக்டர் சிராவணன் கூறுகிறார்.''[20] மக்களின் நம்பிக்கை விஞ்ஞான அடிப்படையில்தான் உள்ளது என்பதை இக்கருத்து வலியுறுத்துகிறது.

### ஆவுடையம்மன் பொய்கை

இத்தீர்த்தம் ஊரின் தென் பகுதியில் உள்ளது. ஆண்டுதோறும் தை மாதக் கடைசி வெள்ளிக்கிழமையன்று இங்கே தெப்பத் திருவிழா நடைபெறுகின்றது.

### சங்கர தீர்த்தம்

சங்கர நயினார் கோயிலில் உள்ள மற்றொரு தீர்த்தம் சங்கர தீர்த்தம். இதனை இந்திர தீர்த்தம் என்றும் வழங்குவர். இது சங்கரலிங்க சுவாமியின் சன்னதிக்குத் தென்மேற்கே இருக்கின்றது. மற்றும் (1) அக்னி தீர்த்தம் (2) அகத்தியர் தீர்த்தம் (3) சூரிய தீர்த்தம் (4) வைரவ தீர்த்தம் (5) கௌரி தீர்த்தம் என்று ஐந்து தீர்த்தங்களும் உள்ளன. அம்பிகையின் சன்னதிக்கு வடக்கே ஒரு தண்டத்தை ஊன்றித் தோற்றுவிக்கப்பட்ட தண்டத் தீர்த்தமும், தெற்கே பசுக்களைக் காப்பாற்ற

உருவாக்கிய தேனு தீர்த்தமும் இருக்கின்றன. இத்தீர்த்தங்களுக்கு இதே பெயர்கள் வழங்குதற்கான காரணம் இன்று அறிய இயலவில்லை. எனினும் இக்கோயிலுக்கு வரும் பக்தர்கள் இத்தீர்த்தங்களை மிகவும் புனிதமானவையாகக் கருதி அதில் நீராடி மகிழ்கின்றனர்.

**யானைத் தொழுவம்**

ஸ்ரீ காளத்தி, திருவானைக்கா, கரிவலம் வந்த நல்லூர் போன்ற பல திருத்தலங்கள் யானையுடன் தொடர்புடையவை. சங்கர நயினார் கோயில் தோற்றத்திற்கும் யானை ஒரு காரணமாம். எனவே, கோயில் நிர்வாகத்தினர் ஒரு யானையைப் பாதுகாத்து வளர்க்கின்றனர். இந்த யானையின் பெயர் ''கோமதி''. நடராசர் சன்னதிக்கும் பின்னால் யானைத் தொழுவம் ஒன்று கட்டப்பட்டுள்ளது.

**சங்கரலிங்க சுவாமி கோயில் சிற்பங்கள்**

சங்கரலிங்க சுவாமி கோயில் சிற்பக்கூடமாகத் திகழ்கின்றது. இக்கோயிலின் தூண்களிலும், கோட்டங்களிலும், பிரகார மேடைகளின் மீதும் நூற்றைம்பதுக்கும் மேற்பட்ட சிலைகளைத் தரிசிக்கலாம்.

**கிழக்குப் பிரகாரம்**

கிழக்குப் பிரகாரத்தில் கருவறைக்கு முன்னுள்ள வலப்பக்கத் தூணில் இக்கோயிலைக் கட்டிய உக்கிர பாண்டியனாரும், இடப்பக்கத்தில் மன்னனின் அமைச்சர் உமாபதி சிவாச்சாரியரும் இறைவனை நின்று வணங்குகின்ற கோலத்தில் விளங்குகின்றனர். இச்சிற்பங்கள் இரண்டும் வரலாற்றுத் தொடர்புடையனவாகும்.[21]

கோவிலுக்குத் திருப்பணி செய்த வடமலையப்பப்பிள்ளையன் சிலையும் உள்ளது. புன்னை மரக் காவற் பறையனான மணிக்கிரீவன் சிலையும் சங்கர நயினார் கோயிலின் முன் வணங்கும் கோலத்தில் உள்ளது.[22]

சூரியனும், சந்திரனும் கிழக்குப் பிரகாரத்தில் உள்ளனர். காலை வழிபாட்டைச் சூரிய வழிபாட்டுடனும், மாலை வழிபாட்டைச் சந்திர வழிபாட்டுடனும் தொடங்குவது மரபு.

### தெற்குப் பிரகாரம்

#### *சமயக் குரவர் நால்வர்*

தெற்குப் பிரகாரத்தில் 1. திருஞானசம்பந்தர், 2. திருநாவுக்கரசர், 3. சுந்தரமூர்த்தி சுவாமிகள், 4. மாணிக்கவாசகர் என்ற சமயக் குரவர் நால்வருக்கும் முறையே சிலைகள் அமைக்கப்பட்டுள்ளன.

நால்வருக்கு அடுத்து இருக்கின்றவர் சேக்கிழார். அருகில் மகாவிஷ்ணுவும் காட்சியளிக்கின்றார்.

#### நாயன்மார்கள்

மேலும் அறுபத்து மூன்று நாயன்மார்களின் சிலைகள் வரிசையாக வைக்கப்பட்டுள்ளன. இவர்களது வடிவச் சிலைகள் சிவன் கோயில்களில் இருப்பது வழக்கம்; இருக்கவும் வேண்டும். சுரதேவரது திருமேனியையும் இங்கே காணலாம்.

#### சக்திகள்

அடுத்து சக்தி வடிவங்கள் இருக்கின்றன. 1. காந்தாரி 2. பிரம்மசக்தி 3. ஈச சக்தி 4. குமார சக்தி 5. விஷ்ணு சக்தி 6. வராக சக்தி 7. இந்திர சக்தி 8. சாமுண்டி சக்தி ஆகிய சக்திகள் எழுந்தருளியுள்ளனர். இரு தேவியருடன் முருகரும் காட்சி தருகின்றார்.

### மேற்குப் பிரகாரம்

மேற்கு பிரகாரத்தில் கன்னி விநாயகர், உற்சவர், பிச்சாடனர் ஆகிய தெய்வங்களின் திருவுருவங்கள் அமைக்கப் பெற்றுள்ளன. கன்னி விநாயகர் என இவ்விநாயகரை அழைப்பதின் காரணம் புலப்படவில்லை. கன்னி மூலை என்பது

வடகிழக்குத் திசையைக் குறிக்கும். இத்திசையை ஈசானிய திசை எனவும் வழங்குவர். இத்திசை மிகவும் புனிதமானது என்பது இந்துமத நம்பிக்கையாளர் துணிபு. இத்திசையில் எழுந்தருளி இருக்கும் விநாயகர் கன்னிமூல விநாயகர் என அழைக்கப்படுவார். இவ்விநாயகர் சிலையும் முன்பு கன்னிமூலையில் இருந்து தற்போது மேற்கு பிரகாரத்தில் வைக்கப்பட்டுள்ளது போலும். எனவேதான் இவரை கன்னி விநாயகர் என அழைக்கின்றனர் எனலாம். என்றாலும் இப்பெயருக்கான சரியான காரணம் தெரியவில்லை.

**உற்சவர்**

கோயிலின் உற்சவமூர்த்தி உமா மகேசுவரர் ஆவர். தேவியுடன் விளங்குகின்ற இவரது திருமேனி உள்ள இடம் மேற்குப் பிரகாரம்.

***பிட்சாடனர்***

கோயிலின் நிர்வாணக் கோலத்துடன் திகழ்கின்ற திருவடிவங்கள் இரண்டு. *1* .பிச்சாடனர் , **2** .பைரவர். இவை இரண்டுமே மகேசுவர வடிவங்கள் ஆகும்.

## இருபெரும் இறைவிகள்

இங்கு சரஸ்வதியும், இலக்குமியும் இடம்பெற்றுள்ளனர். பல கோயில்களில் இலக்குமியின் வடிவத்தைக் கண்டாலும் சரஸ்வதியின் வடிவத்தைக் காண்பது அரிது. ஆனால் இக்கோயிலில் இவர்கள் இருவரது வடிவங்களும் இருப்பது கூடுதல் தனிச் சிறப்பாகும்.

**வடக்குப் பிரகாரம்**

**தென்பக்கம்**

**வன்மீகநாதர்**

பிரகாரத்தின் வடமேற்கு மூலையில் இருப்பவர் வான்மீகநாதர். இவர் புற்று வடிவினர். இது மூலஸ்தானப் புற்றாகும்.

**சண்டேசுவரர்**

கோமுகி மடத்திற்கருகில் சண்டேசுவரர் தெற்கு நோக்கித் தியானத்தில் ஆழ்ந்திருக்கின்றார்.

**வடக்குப் பக்கம்**

வடக்குப் பிரகாரத்தின் வடக்குப் பக்கத்தில் 1. சனிபகவான் 2. காசிவிசுவநாதர் 3. பைரவர் 4. துர்க்கை ஆகியோரது வடிவங்களைக் காணலாம்.

**சனி பகவான்**

கிரகங்களால் ஏற்படுகின்ற துன்பங்களைத் தணிக்கக் கிரக நாயகர்களை நாடோறும் வழிபட வேண்டும் என்பது நம்பிக்கை. சனிபகவானைச் சிறப்பாக வழிபடுவது மிகவும் நல்லது என்று நம்புகின்றனர்.

**காசி விசுவநாதர்**

வேறு திருத்தலங்களில் எழுந்தருளியுள்ள தெய்வங்களை மற்றொரு கோயிலில் எழுந்தருளச் செய்வதை ஒரு தேவையாகப் பக்தர்கள் மதிக்கின்றனர். ஆகவே சங்கர நயினார் கோயிலில் காசிவிசுவநாதரை எழுந்தருளச் செய்தனர். இங்கே இவரை வழிபட்டால் காசிக்குச் சென்று இவரை வழிபட்ட பயன்கள் கிடைப்பது உறுதியாகும் என்று மக்கள் நம்புகின்றனர்.

**பைரவர்**

இவர் சிவனின் ஒரு மகன் என்பர். நாய் வாகனத்தினர். இவர் கோயிலின் காவல் தெய்வம் ஆவர். இரவில் கோயில் சன்னதிகளைப் பூட்டிச் சாவிகளை இவரது காலடியில் வைத்து அர்ச்சகர் வழிபட்டனர். இனி, கோயிலைப் பாதுகாக்கின்ற பொறுப்பு இவருடையது. காலையில் இவரை வழிபட்டுச் சாவிகளை எடுத்துச் சன்னதிகளைத் திறந்தனர். பாதுகாப்புக் கருதி இப்பழைய மரபை இக்காலத்தவர் நெகிழ விட்டுவிட்டனர்.

**கோட்டத் தெய்வங்கள்**

சிவன் கோயில்களில், கருவறை மற்றும் அர்த்தமண்டபங்களின் வெளிப்புறச் சுவர்களில் அமைக்கப்படும் ஐந்து மாடங்களில் எழுந்தருளும் ஐந்து தெய்வங்களுக்குக் கோட்டத் தெய்வங்கள் என்பது பெயர். அவர்கள் வருமாறு:

1. அர்த்த மண்டபம் - தெற்கு - விநாயகர்
2. கருவறை - தெற்கு - தட்சிணாமூர்த்தி
3. கருவறை - மேற்கு - லிங்கோத்பவர் அல்லது மகாவிஷ்ணு
4. கருவறை - வடக்கு - பிரம்மா
5. அர்த்தமண்டபம் - வடக்கு - துர்க்கை

சங்கர நயினார் கோயிலில் கோட்டத் தெய்வங்கள் மூவரே. அவர்கள் வருமாறு:

1. கருவறை - தெற்கு - தட்சிணாமூர்த்தி
2. கருவறை - மேற்கு - யோக நரசிம்மர்
3. கருவறை - வடக்கு - பிரம்மா

என மூன்று கோட்டங்கள் உள்ளன. 1. அர்த்தமண்டபத்தில் அமைய வேண்டிய கோட்டங்கள் இரண்டும் இல்லை. 2. அந்தக் கோட்டங்களில் இருக்க வேண்டிய விநாயகர், துர்க்கையின் வடிவங்கள் பிரகார ஓரங்களில் உள்ளன. 3. மேற்குக் கோட்டத்தில் யோக நரசிம்மர் எழுந்தருளியிருப்பது ஒரு தனிச் சிறப்பு. 4. மூன்று கோட்டங்களில் மும்மூர்த்திகள் எழுந்தருளியிருப்பது ஒரு தனி அழகு. மும்மூர்த்திகளையும் ஒரே கோயிலில் அமைப்பது என்பது பெரு வழக்கன்று. வைணவ, சைவ, மதமாச்சரியங்கள் இத்தகு ஒருமையுணர்வினை வெளிப்படுத்தத் தடையாக அமைந்துவிட்டது என்றாலும் ஒரு சில கோயில்களில் சைவ, வைணவ

பேதங்கள் புறக்கணிக்கப்பட்டு ஒரு சமயக் கோயிலில் பிற சமய தெய்வத்தையும் அமைத்துள்ளனர். சான்றாகத் தில்லை நடராசர் கோயிலில் பெருமாள் கோயில் அமைக்கப்பட்டு இருப்பதைச் சுட்டலாம். அவ்வாறே இத்திருத்தலத்திலும் சமய பேதங்களை விலக்கி முப்பெரும் தேவர்களுக்கும் தனித்தனிக் கோட்டங்கள் அமைந்துள்ளன. இது குறிப்பிடத்தக்க புதுமை ஆகும்.

சங்கரலிங்க வழிபாடு, சங்கர நயினார் வழிபாடு, மும்மூர்த்தி வழிபாடு ஆகிய மூன்று வழிபாடுகளும் சங்கர நயினார் கோயிலில் நிறைந்து பொலிகின்றன எனலாம்.

**மகாமண்டபச் சிற்பங்கள்**

சங்கரலிங்க சுவாமியின் கோயில் மண்டபத்தில் நான்கு பக்கங்களிலும் அழகும், கலைநுட்பமும் செறிந்த தெய்வச் சிலைகள் காணப்படுகின்றன. இவற்றைப் பல வகைப்படுத்தித் தரிசிக்கலாம்.

**சிவனின் வடிவங்கள்**

சிவ பராக்கிரமம் என்ற நூல் சிவனது அறுபத்துநான்கு வடிவங்களைத் தொகுத்துக் கூறுகின்றது. இவற்றுள் இருபத்தைந்து வடிவங்கைளத் தேர்ந்தெடுத்து ‘‘மகேசுவர வடிவங்கள்’’ என்று கூறுவர்.

கருவறையில் சிவனது லிங்கத் திருமேனியும், மண்டபத்தில் பன்னிரெண்டு வடிவங்களும் உள்ளன. ஆக சங்கர நயினார் கோயிலில் விளங்குகின்ற சிவ வடிவங்கள் மொத்தம் பதின்மூன்று ஆகும்.

***அ) சங்கர நாராயணர்***

இந்த வடிவம் பற்றி முன்னர் கூறப்பட்டுள்ளது.

## ஆ) வீரபத்திரர்

தக்கனை வதைக்க வேண்டும் என்பதற்காகச் சிவனது நெற்றிக்கண்ணில் தோன்றிய வடிவம் வீரபத்திரர். ஆகவே இவர் சிவனுக்கு ஒரு மகனாவார். ஆவேசமான வடிவம்; இவரைப் பிரதிட்டை செய்தால் மக்களின் தீமைகளும், துன்பங்களும் அகலுவது உறுதி எனக் கூறுகின்றனர். நோய் தீர, பகை கடிய இவரை வழிபட வேண்டும் என்பது நம்பிக்கை.

## இ) நடராசர்

ஊழிக்கூத்தை - ஞானக் கூத்தை ஆடுகின்றவர் நடராசர் என்பர். கோயிலில் நடராசர் அம்பலத்திலும், மகாமண்டபத்திலும் இவரது இரண்டு வடிவங்கள் உள்ளன. இவரது தோற்றப் பொலிவு ஐந்தொழில்களை நுட்பமாக உணர்த்துகின்றது.

1. உடுக்கை - ஆக்கல்
2. அமைந்தகை - காத்தல்
3. அனல் - அழித்தல்
4. ஊன்றிய திருவடி - மறைத்தல்
5. எடுத்த திருவடி - அருளல்

நடராசர் கால் மாறி ஆடுகின்ற திருக்கோலச் சிற்பமும் மண்டபத்தில் உள்ளது.

## ஈ) இடபாருடர்

பரமசிவனும், பார்வதியும் காளை வாகனத்தில் எழுந்தருளித் திருக்காட்சி தருகின்ற வடிவம் இதுவாகும். அடியவர்களுக்கு அருள் தருவதற்காக இறைவன் இந்த வடிவத்தில் எழுந்தருளுவதாகக் கருதுகின்றனர். எனவே இது மிகச் சிறந்த வடிவமாம்.

**உ) சந்திரசேகர்**

இவர் பிறை சூடிய சிவன். தம்மிடம் அடைக்கலமாகப் புகுந்தவர்களை இவர் காப்பது உறுதி என்பதற்கு ஓர் அறிகுறி பிறை என்பர்.

**ஊ) கபாலி**

இவர் கபாலங்களைக் கோர்த்த மாலையைப் புனைந்த சிவன். உலகம் நிலையற்றது. இதில் உறைகின்றவர் நிலையான வீட்டுலகை அடைய முயல வேண்டும் என்ற கருத்தைப் புலப்படுத்துகின்ற வடிவம் இது.

**எ) கஜசம்ஹாரர்**

சிவன் தன்னை எதிர்த்த யானையை வதைத்துக் கொன்று அதன் தோலைத் தனது ஆடையாகத் தரித்தான். சிவனது எட்டு வீரச் செயல்களில் இதுவும் ஒன்று. வழுவூர் இதற்குரிய திருத்தலமாக விளங்குகின்றது. சிவன் யானையை அடக்கினான் என்பர். ஐம்புலன்கள் என்ற யானையை மக்களும் அடக்க வேண்டும் என்ற உண்மையை இந்த வடிவம் உணர்த்துகின்றது.

**ஏ) தக்க சம்ஹாரம்**

தக்கனை வதைத்த சிவனது திருக்கோலம் இது. தக்கன் ஆணவத்தின் அறிகுறி. பக்தர் வீடுபேறடைய முதலில் ஆணவ மலத்தை அடக்கி அகற்ற வேண்டும் என்பது இந்த வடிவத்தில் உட்கருத்தாம்.

**ஐ) உருத்திரமூர்த்தி**

இது 'அழித்தல்' என்ற தொழிலைச் செயற்படுத்துகின்ற சிவனது வடிவமாகும்.

## ஒ) ஊர்த்துவ தாண்டவம்

சிவன், வலக்கையை ஊன்றி, இடக்கையை இடக்காதுக்கு மேல் உயர்த்தி ஆடுகின்ற ஒருவகை நடனத்திற்கு ஊர்த்துவ தாண்டவம் என்பது பெயர். இது எழுவகைத் தாண்டவங்களில் ஒன்றாகும். திருவாலங்காட்டுத் திருத்தலத்தில், இரத்தின சபையில் சிவன் ஆடுகின்ற ஆட்டம் இந்த ஊர்த்துவ தாண்டவமே.

## ஓ) தட்சிணாமூர்த்தி

சிவன் ஞானத்தின் இருப்பிடம். எனவே உயிர்களுக்கு குருவாகத் திகழ்பவன். தட்சிணாமூர்த்தி வடிவம் குருவினை நினைவுபடுத்தும் திருவடிவம். ஆதி குருவும் இவரே. தெற்கு நோக்கிக் கோட்டத்தில் எழுந்தருளியிருப்பவர்.

திருமாலின் அவதாரங்களான 1. நரசிம்மர் 2. இராமர், திரிவிக்கிரமர் வடிவங்களான மகாவிஷ்ணு, வெங்கடாசலபதியும் உள்ளனர்.

கணபதியின் வடிவங்கள், முருகனின் வடிவங்கள், அம்மனின் வடிவங்கள், காளியின் வடிவங்கள், பிரம்மாவின் சிலைகளும் உள்ளன. துவாரபாலகர், மன்மதன், ரதிதேவி போன்ற சிலைகளும் உள்ளன.

## சிலைகளைப் பற்றிய குறிப்புகள்

1. ஆறு சமயத் தெய்வங்களுக்குரிய சிலைகள் இருக்கின்றன.
2. மகேசுவர வடிவங்கள் அதிகமாக உள்ளன.
3. இதிகாச, புராண, வரலாற்றுத் தொடர்பான சிலைகளைக் காணலாம்.
4. சங்கர நயினார் கோயிலில் காசி (காசி விசுவநாதர்) உண்டு. திருப்பதி (வெங்கடாசலபதி) உண்டு. தில்லையும் (தில்லை காளியும்) உண்டு. இத்திருத்தலத்தில் வேறு சில திருத்தலங்கள் சங்கமம் ஆவதற்குச் சிலைகளே காரணமாகும்.

5. ஒரே தெய்வத்தின் பல வடிவங்களும், பல தெய்வங்களின் பல வடிவங்களும் மண்டபத்தில் உள்ளன. பக்தர்கள் பல தெய்வங்களை ஒரே இடத்தில் பொதுவாக வழிபடலாம், அல்லது தாம் விரும்புகின்ற தெய்வ வடிவம் ஏதேனும் ஒன்றைச் சிறப்பாக வழிபடலாம்.

6. சிலைகள் ஆகம விதிகளின்படியும், பழைய மரபுகளின்படியும் அமைந்திருக்கின்றன.

7. சிலைகள் பலதிறப்பட்ட உணர்வுகளை உணர்த்தக்கூடிய ஆற்றலுடையன. அழகான சிலைகள் சில. அமைதியான சிலைகள் சில; வியப்பான சிலைகள் சில. அன்புடன் அடிபணியாதவர்களை அச்சுறுத்தி அடிபணிய வைக்கின்ற ஆவேசமான சிலைகள் சில. இவற்றைத் தரிசிக்கின்ற பக்தர்கள் மேலான பக்தி உணர்வுடன் அச்சிலைகள் உணர்த்துகின்ற பல உணர்வுகளையும் கூடுதலாக உணருகின்றனர்.

**சமயப் பிணக்கமும், இணக்கமும்**

சங்கரனை மட்டும் சிறப்பாக வழிபடுகின்ற சைவர் நாராயணனை வழிபட மாட்டார்கள். நாராயணனை மட்டும் சிறப்பாக வழிபடுகின்ற வைணவர் சங்கரனை வழிபட மாட்டார்கள்.

பல தெய்வங்களைப் பொதுவாக வழிபடுகின்றவர்களும், இருசமயப் பொதுநோக்குடையவர்களும் சங்கர நயினார் கோயிலுக்கு வழிபட வருவது வழக்கம். அதிக அளவில் நாட்டுப்புற மக்களே இக்கோயிலுக்கு வருகின்றனர்.

சமய பேதங்களைப் பாராட்டுவோர் சைவம் என்றும் வைணவம் என்றும் பலப்பல பேசி இணக்கம் ஒழித்துப் பிணக்கம் கொள்வர். எனவே பரம்பொருள் ஒன்றே என்றும் அப்பொருள் உருவமோ, நிறமோ, இல்லாதவன்என்றும் அறிந்த ஆன்றோர்கள் பேத உணர்வால் மக்களிடையே உண்டாகும் பிணக்கத்தை ஒழிக்கவும் அவர்தம்முள் இணக்கத்தை உருவாக்கவும் முயன்றனர். அம் முயற்சியின் விளைவுகளில் ஒன்றே சங்கரநாராயணர் திருவுருவம். எனினும் பேதச்

சுழியிடைப்பட்டுக் கிடக்கும் சமயவாதிகள் சிலர் தற்போதும் சமயப்பிணக்குக் கொண்டுள்ளனர். என்றாலும் சமய ஒருமைக்கு இக்கோயில் ஒரு நல்ல தொடக்கம் எனலாம். சமய ஒருமைக்குச் சான்றாகவும் வழிகாட்டியாகவும் விளங்கும் இக்கோயிலில் உள்ள சங்கர நாராயணர் சிலை களவாடப்பட்டுப் பின்னர் மீண்டும் கிடைத்துள்ளது. அச்சிலை களவாடப்பட்ட வரலாறு பின்வருமாறு:

''கி.பி.1711ல் திருநெல்வேலி மாவட்டத்திற்கு மந்திரியாக இருந்தவர் ஆறை அழகப்பமுதலியார், பொன்னம்பலம் பிள்ளை வடகரைக்கு ஸ்தானாதிபதியாக இருந்தவர். இவர்கள் இருவரும் திருநெல்வேலிக்கு தொண்டுகள் பல செய்து கொண்டிருந்த நேரத்தில், சங்கர நயினார் கோயிலிலுள்ள ''சங்கரநாராயணர் சிலையை செண்பகப் பட்டர் என்பவர் திருடிக் கொண்டு போய்த் திருவுத்தரகோசமங்கையில் அடகு வைத்து விட்டார். இராமநாதபுர மாவட்டத்தில் சேதுபதி விசய ரகுநாத தேவர் அக்கோயில் மூர்த்திகளுடன் வைத்துப் பூசை செய்ய ஆணை தந்தார். இதனையறிந்த அழகப்ப முதலியார் அத்திருவுருவை மீட்டு வரும் வல்லமையுடையவர் பொன்னம்பலம் பிள்ளை என உணர்ந்து அவரை சேதுபதி அவர்களிடம் அனுப்பி வைத்தார். பொன்னம்பலம் பிள்ளை சேதுபதியைப் பார்க்க முடியாமல் காவடியெடுப்பவர் போலச் சென்று கவிபாடினார். அவரை அருட்கவியென உணர்ந்து, சேதுபதி அவர்கள் சில நாட்கள் தன்னோடு தங்க வைத்தார். அப்போது பொன்னம்பலம் பிள்ளை சேதுபதி மன்னனிடம் கிள்ளாக்கை பெற்றுத் திருவுத்தரகோசமங்கை சென்று சங்கரநாராயணர் திருவுருவைக் கண்டு 'புன்னைவன நாதரே, நீர் எழுந்தருளியிருக்கும் சங்கரநயினார் கோயிலில் உள்ள புகழ்பெற்ற புற்று எங்கே, கோயில் வளாகத்தில் செழித்து வளர்ந்துள்ள புன்னைவனம் எங்கே, பொற்கோயில் எங்கே, படிவாரின் பாவம் தீர்க்கும் நாகசுனை எனும் தீர்த்தம் எங்கே இவையெல்லாம் சங்கரநயினார் கோயில் எனும் திருத்தலத்தில் இருக்க இவற்றிற்கெல்லாம் உரிமை உடையவரான தேவதேவனாகிய நீர் இங்குத் தனித்து இருப்பது சரியோ சொல்வாயாக' எனப் பொருள்படும்படி,

> ''புற்றெங்கே? புன்னை வனமெங்கே? பொற்கோயிற்
> சுற்றெங்கே? நாகசுனையெங்கே? - இத்தனையும்
> சேரத்தா னங்கிருக்கத் தேவர் தான் தனித்தித்

தூரத்தே வந்த தென்ன சொல்''[23]

எனும் பாடலைப் பாடினார். அதற்குச் சங்கரநயினார் ''நள்ளிரவில் ஆடு திருடும் கள்வனைப் போல என்னைச் செண்பகக் கண் நம்பி என்பவன் திருடிவந்து இங்கு வைத்தனன்'' எனக் கூறியதாக,

''விள்ளுவமே சீராசை வீடு விட்டுக் காடுதனில்
நள்ளிருளில் செண்பகக் கண் நம்பி யான் - மெள்ளவே
ஆடெடுக்கும் கள்ளரைப்போல் அஞ்சாரை தெமைக்கரிசற்
காடுதொறு மேயிழுத்தக்கால்''[24]

எனும் பாடலின் மூலம் விளக்குகிறார். இச்செய்தியறிந்த சேதுபதி மகிழ்ந்து சங்கர நாராயணரைச் சங்கரநயினார் கோயிலிற் சேர்த்து விடுவதாகக் கூறிப் பொன்னம்பலம் பிள்ளைக்கு வேண்டும் வரிசைகள் வழங்கி அத்திருவுருவத்தையும் அனுப்பினார்.

ஆகவே, இரு சமய இணக்கத்திற்கு ஒரு சான்றாக விளங்குகின்ற சங்கர நாராயணர் வடிவம், சமயப் பிணக்கால் களவாடப்பட்டு மீண்டும் இக்கோயிலுக்கு கொண்டுவரப்பட்டுள்ளது என்பது புலனாகிறது.

**ஓவியங்கள்**

பழங்காலத்தில் கோமதியம்பிகையின் கோயில் ஓவியக்கூடமாக விளங்கியதாம். அங்கே அம்பிகையின் தவநிலை, சங்கரன் அம்பிகைக்கும், சங்கனுக்கும், பதுமனுக்கும் திருக்காட்சியளித்த நிலை, இறைவன் அகத்தியருக்கு ஐந்தெழுத்து உபதேசம் அருளிய நிலை முதலிய திருத்தலத் தொடர்புடைய ஓவியங்கள் இருந்தனவாகச் சங்கரலிங்க உலா விவரிக்கின்றது.

''காலை நேசித்து வந்து கன்றுதலைஆவுடைய
பாலை பூசித்த படிபாரீர் - பாவை தனக்கு
அன்று வடிவம் இரண்டாக இறைவன னொன்னாய்
நின்ற கருணைநிலை பாரீர் சென்றுதொழ
இவ்வுலகில் சங்கற்பர் என்னும் அரவரசர்க்கு

அவ்வுருவம் தந்த அருள் பாரீர் - செவ்வேல்

ஆரவரை முனிக்கோர் அஞ்செழுத்தின் உண்மைநிலை

தேர உரைத் திறம் பாரீர் - சோரவிடைப்''[25]

என்று உலாவில் ஓவியங்கள் பற்றிய செய்திகள் காணப்படுகின்றன.

**அண்மைக்கால ஓவியங்கள்**

சங்கரலிங்க சுவாமியின் திருக்கோயிலிலும், கோமதியம்பிகையின் திருக்கோயிலின் முன்மண்டபத்திலும் சங்கர நாராயணர் கோயிலிலும், அதன் முன் மண்டபத்திலும் அண்மைக் காலத்தில் வண்ணமிகு ஓவியங்கள் தீட்டப்பட்டுள்ளன.

ஆதிசங்கரர் காலத்திற்கு முன்பு வரை இந்து சமயம் சைவம், வைணவம் எனும் இருபெரும் பிரிவுகளாகவே இருந்தது. ஆதி சங்கரர் இந்து சமயத்தை ஆறு உட்பிரிவுகளாகக் காட்டுவார். அவை சைவம், வைணவம், காணாவதியம், கௌமாரம், சௌரம், சாக்தம் என்பனவாகும். இவற்றுள் சிவபெருமானை முழுமுதற் கடவுளாகக் கொண்டது சைவம், ஸ்ரீவிஷ்ணுவை முழுமுதற் கடவுளாகக் கொண்டது வைணவம். விநாயகரை முழுமுதற் கடவுளாகக் கொண்டது காணாவதியம். கந்தனாகிய முருகனை முழுமுதற் கடவுளாகக் காட்டுவது கௌமாரம், சக்தியை முழுமுதற் கடவுளாகக் காட்டுவது சாக்தம். சௌரம், சூரியனை முழுமுதற் கடவுளாகக் கூறுவது. இச்சமயங்களுள் காணாவதியம், கௌமாரம் ஆகிய இவ்விரு சமயங்கள் விளக்கும் பல்வேறு தெய்வத் திருவுருவங்களை இத்திருத்தலத்தில் ஓவியமாகத் தீட்டி உள்ளனர்.

**காணாவதியம்**

***கணபதியின் வடிவங்கள்***

முத்கல புராணமும், தத்துவ நிதியும் கணபதிக்குரிய முப்பத்திரண்டு வகைப்பட்ட வடிவங்களை வரையறுத்தன. இவற்றுள் பதினொரு வடிவங்கள்

சங்கநயினார் கோயில் ஓவியங்களில் திருக்காட்சி தருகின்றன. அவை பற்றிய விவரம் பின்வருமாறு:

**தருண கணபதி**

சிவந்த நிறத்துடன் எட்டுக் கைகளையும், அவற்றில் பாசம் முதலியவற்றையும் ஏந்தியவர்.

**பக்தி கணபதி**

வெள்ளை நிறமும், நான்கு கைகளும் கொண்டவர். தேங்காய் முதலிய நான்கு பொருள்கள் அக்கைகளில் உள்ளன.

**வீர கணபதி**

நின்ற திருக்கோலம், சிவந்த நிறம், சினந்த முகம், பதினாறு கைகளுடன் அவற்றில் வேதாளம், வேல் முதலிய பதினாறு பொருள்களையும் ஏந்தியவர். மிக அதிகமான பதினாறு கைகளுடன் விளங்குகின்ற கணபதி இவர் ஒருவரே.

**உச்சிச்சட கணபதி**

நீலநிறம்; நான்கு கைகளில் நீலோற்பலம் முதலியவற்றைத் தரித்தவர்.

**சுப்பிர கணபதி**

நின்ற கோலம்; சிவந்த நிறமும், நான்கு கைகளும் கொண்டு இவற்றில் தந்தம் முதலிய பொருள்களைக் கொண்டவர்.

**லட்சுமி கணபதி**

வெள்ளை நிறத்தவர்; நான்கு கைகளில் அங்குசம் முதலியவற்றைத் தாங்கியவர்.

**விக்னேஸ்வர கணபதி**

இவரது மேனி பொன்னைப் போன்றது. சங்கு, கரும்பு வில் முதலிய எட்டுப் பொருள்களை எட்டுக் கைகளில் பற்றி இருக்கின்றவர்.

**ஏரம்ப கணபதி**

பசுமை கலந்த கருமை நிறமுடையவர். எட்டுக் கைகளில் பாசம் முதலியவற்றைக் கொண்டவர். ஐந்து முகங்களும், சிங்க வாகனமும் இவருக்குரியன.

**நர்த்தன கணபதி**

பொன் நிறம்; நான்கு கைகளையுடைய நடனமாடும் பிள்ளையார் இவர் ஆவர்.

**ஊர்த்துவ கணபதி**

நீலப்பூ முதலிய ஆறு பொருள்களை ஏந்தி, பொன்நிறத்துடன் விளங்கிப் பச்சை நிறத்தேவியைப் பக்கத்தில் அணைத்தவாறு காட்சி தருபவர்.

**சக்தி கணபதி**

செவ்வந்தி நிறக் கணபதியும், பச்சை நிறச் சக்தியும், தழுவியபடி அமர்ந்திருக்கின்ற வடிவம் இது.

**மகா கணபதி**

செங்கதிர் போன்ற நிறத்தவர்; எட்டுக் கைகளில் மாதுளம்பழம் முதலிய எட்டுப் பொருள்களைத் தாங்கியவர். முக்கண்ணர். பிறை சூடியவர், இவரது மடியின் மீது தேவி அமர்ந்திருக்கின்றார்.[26]

**கௌமாரம்**

**முருகனது திருவுருவங்கள்**

குமார தந்திரம் என்ற நூல் முருகனது பதினாறு திருவுருவங்களை வருணிக்கின்றது. இவற்றில் கிரௌஞ்ச பேதனர், மயில் வாகனர் ஆகிய இரண்டு வடிவங்களைத் தவிர பதினான்கு வடிவங்களும், சங்கரநயினார் கோயிலில் ஓவியங்களாகத் தீட்டப்பட்டுள்ளன.

***ஞான சக்திதார்***

ஒரு முகமும், இருகைகளும் கொண்டு வலக்கையில் வேலையும், இடக்கையில் வச்சிரத்தையும் தாங்கியவர். அசுரவதத்திற்காக எடுத்த திருக்கோலம் இது.

***தண்டாயுத பாணி : (கந்தசுவாமி)***

ஒரு முகமும், இரு கைகளும் கொண்டு, ஒரு கைகளில் தண்டை ஏந்தி, மறு கையைத் தொடை மீது வைத்து இடுப்பில் கோவணமணிந்த ஆண்டிக் கோலம் இது.

**தேவசேனாபதி**

ஆறுமுகங்களும், பன்னிரு கைகளும் கொண்டு, அக்கைகளில் வேல், வாள் முதலியவற்றை ஏந்தி, தேவசேனையைத் தழுவியபடி திகழ்கின்றவர் தேவசேனாதிபதியாம் (தேவசேனை + பதி) .

இந்திரன் மகளான தெய்வயானை மணாளன் என்பது இம்மூர்த்தத்திற்குரிய பொருளாம். இத்திருவுருவம் சங்க இலக்கியமான பரிபாடலில் காட்டப்பெற்றுள்ளது.

**‘‘மையிரு நூற்றிமையுண்கண் மான்மறிதோன் மணந்தஞான்**
**றையிருநூற்று மெய்ந்நயனத் தவன்மகன் மலருண்கண்**
**மணிமழை தலைஇயென மாவேனில் காரேற்றுத்**

**தணிமழை தலையின்று தண்பரங்குன்று**

**குறிஞ்சிக் குன்றவர் மறங்கெழு வள்ளிதமர்**

**வத்தகத் தும்பை விளைத்தலான் வெள்வேலாற்**

**கொத்தன்று தண்பரங்குன்று;**[27]

***சுப்பிரமணியர்***

சிவந்த நிறத்துடன் அழகிய அணிகள் பலவற்றைப் புனைந்தவர். ஒரு முகமும், அபயம், வரதம், வேல், சேவலைக் கொண்ட நான்கு கைகளையும் கொண்டவர்.

***கஜவாகனர்***

ஒரு முகமும், நான்கு கைகளும், அவற்றில் வேல் முதலியவற்றை ஏந்தியபடி யானை வாகனத்தில் வீற்றிருக்கின்றவர்.

***சரவணபவர்***

ஆறு முகங்களும், வேல் மணி முதலியவற்றைப் பற்றிய பன்னிரு கைகளையும் உடையவர்.

***கார்த்திகேயர்***

ஆறு முகங்களும், ஆறு கைகளும் கொண்டவர். அபய, வரதக் கைகளுடன், வேல் முதலிய நான்கு ஆயுதங்களை ஏந்தியவர்.

***குமாரர்***

ஒரு முகமும் , வேல், வாள், கொடி, கேடயம் ஏந்திய நான்கு கைகளையும் உடையவர்.

*சண்முகர்*

ஆறு முகமும், பன்னிரு கைகளும் அவற்றில் பல ஆயுதங்களும் கொண்டு தெய்வயானை உடனிருக்க மயில் மேல் அமர்ந்தவர்.

*தாரகாரி*

ஆறுமுகங்களும், பன்னிரு கைகளும், அவற்றில் பன்னிரு ஆயுதங்களும் கொண்டு தாரகனை வதைத்த வடிவம் இது. திருமுருகாற்றுப்படையில் ''தகரன்''[28] என்ற திருஉருவமும் காட்டப்படுகிறது.

தேவசேனாதிபதி

ஆறுமுகமும், பன்னிரு கைகளும், அவற்றில் ஆயுதங்களையும் கொண்டு தேவர் சேனைக்குத் தலைவனாக நின்ற கோலம் (தேவசேனை + அதிபதி).

**''திகழ் பொறிப் பீலி யணிமயில் கொடுத்தோன்**
**திருந்துகோன் ஞமன்றன் மெய்யிற்பிரிவித்**
**திருங்கன் வெள்யாட்டெழின் மறி கொடுத்தோன்**
**ஆஅங், கவரும் பிறகு மமர்ந்து படை யளித்த**
**மறியு மஞ்ஞையும் வாரணச் சேவலும்**
**பொறிவரிச் சாபமு மரனும் வாளும்**
**செறியிலை யீட்டியுங் குடாரியுங் கணிச்சியும்**
**தெறுகதிர்க் களையு மாலையு மணியும்**
**வேறுவே றுருவினிவ் வாறிரு கைக் கொண்டு**
**மறுவி றறுக்கத் தமரர் செல்வன் தன்**
**பொறி வரிக் கொட்டையொடு புகழ்வரம் பிகந்தோய்''** [29]

***பிரம்ம சாத்தர்***

ஒரு முகமும், நான்கு கைகளும் கொண்டு, அவற்றில் வரதம், கமண்டலம், அபயம், உருத்திராக்க மாலையும் ஏற்றுப் பிரமனை வென்று உபதேசித்த வடிவமாம். கமண்டலமும், உருத்திராக்கமும் தோற்ற பிரமனிடம் முருகன் பிடுங்கிக் கொண்டவை.

**வள்ளியம்மை திருமணம்**

தேவர்கள் காண திருமால் தாரை வார்த்துத் தர முருகன் வள்ளியை மணந்த திருக்கோலம்.

***பாலசுவாமி***

ஒரு முகமும், இரு தாமரைகளை இரு கைகளில் ஏந்தி அம்மையப்பருக்கிடையில் அமர்ந்த பாலமுருகனின் வடிவம் .[30]

**ஓவியங்களைப் பற்றிய சில குறிப்புகள்**

*1)* பழைய ஓவியங்கள் சிதைந்துவிட்ட நிலையில் கோயில் நிர்வாகத்தினரால் புதிய ஓவியங்கள் வரையப்பெற்றுள்ளன. அவ் ஓவியங்கள் அனைத்தும் பழைய மரபுகளும், விதிமுறைகளும் நெகிழாமல் ஏறக்குறைய நாற்பது ஆண்டுகளுக்கு முன்பு வரையப்பட்ட அண்மைக்கால ஓவியங்களாம்.

*2)* காணாபதியம், கௌமாரம் ஆகிய சமயங்கள் சார்ந்த தெய்வ வடிவ ஓவியங்கள் மிகுதியாக உள்ளன.

*3)* பெரும்பாலான ஓவியங்கள் தெய்வ வடிவ ஓவியங்களே. மேலும் அம்பிகையின் தவம், அவளது திருமுன் சங்கரநாராயணர் தரிசனம் தருதல் முதலிய தல வரலாற்றுடன் தொடர்புடைய காட்சி ஓவியங்களும் சில உள்ளன.

4) மண்டபச் சுவர்களை வெற்றிடங்களாக வீணடிக்காமல், அவற்றில் தெய்வ வடிவ ஓவியங்களை வரைந்தனர். இவற்றால் பக்தர்களின் பக்தி உணர்வுகள் தூண்டப்படுகின்றன.

5) பக்தர்கள் தெய்வங்களின் வடிவ வகைகளையும், அவற்றின் சிறப்புக்களையும், நுட்பங்களையும், உட்பொருள்களையும் தெரிந்து மகிழ்கின்றனர். பல வடிவங்களை ஒரே இடத்தில் தரிசிக்கின்ற வாய்ப்பும் அவர்களுக்கு எளிதில் கிடைக்கின்றது.

### சுற்றுப்புறக் கோயில்கள்

சங்கர நயினார் கோயிலைச் சூழ்ந்து பல கோயில்கள் இருக்கின்றன. தேர்ந்த சில கோயில்கள் வருமாறு:

### விநாயகர் கோயில்கள்

கிழக்கு மாட வீதியில் அங்கூர விநாயகர் கோயிலும், தெற்கு மாட வீதியில் ஆதி சங்கர விநாயகர் கோயிலும், அரசடிப் பிள்ளையார், ஓடக்கரையில் ஓடைப்பிள்ளையார், களாவடிப்பிள்ளையார் கோயில்களும் இருக்கின்றன. அதே தெருவில் கிழக்கோரத்தில் சங்கர சித்தி விநாயகர் கோயில் உள்ளது. மலையான் குளக்கரையில் ஆத்தியடிப் பிள்ளையார் கோயிலையும், கழுகுமலைச் சாலையின் தொடக்கத்தில் சுந்தர விநாயகர் கோயிலையும் தரிசிக்கலாம்.

### அம்மன் கோயில்கள்

திருவேங்கடம் சாலைக்கு வடக்கில் மூப்பிடாரி அம்மன் கோயிலும், இராசபாளையம் சாலைக்கு மேற்கில் உச்சினி மாகாளி அம்மன் கோயிலும், அம்மைச்சியார் கோயிலும், சோலைக் குளக்கரையில் திருமேனி, ஐயனார் கோயிலும் இருக்கின்றன.

### மற்றவை

அம்மன் கோயில் முன் இருக்கும் தெருவில் தருமர் கோயிலும், ஊர்க் குளக்கரையில் அமைந்த தலைக்கரை உடையார் கோயிலும் குறிக்கத்தக்க கோயில்களாம்.

### சார்பு கோயில்கள்

திருநெல்வேலி மாவட்டத்திலுள்ள ஆறு கோயில்கள் சங்கர நயினார் கோயிலின் நேரடிக் கண்காணிப்பின் கீழ் இயங்குகின்றன. அவை வருமாறு:

| | | | |
|---|---|---|---|
| 1. | கரிவலம் வந்த நல்லூர் | - | பால்வண்ணநாதர் திருக்கோயில் |
| 2. | முள்ளிக்குளம் | - | மாதாங்கோயில் |
| 3. | வீர சிகாமணி | - | அ. கைலாசநாதர் கோயில் |
| | | | ஆ. அகத்தியநாதசுவாமி கோயில் |
| | | | இ. இராசகோபால மன்னர் சுவாமி கோயில் |

# தொகுப்புரை

1. சங்கர நயினார்கோயில் மிக அழகான அமைப்புடையது. இந்த ஒரு கோயிலுக்குள் ''முப்பெருங் கோயில்கள்'' இருப்பது இதன் தனிச் சிறப்பு.

2. பழைய மரபின்படி ஊரின் மையத்தில் கோயில் உள்ளது.

3. சங்கர நாராயணரின் இரட்டை வண்ணச்சிலை வியப்புக்குரியது; இதைப்போன்ற சிலையை வேறு எங்கும் காண முடியாது.

4. சங்கர நாராயணரது வடிவம் பக்தி ஆர்வத்தால் தோன்றிய வடிவம்; இது சமய இணக்கத்தின் சான்றாக அமைந்தது.

5. சைவ, வைணவச் சான்றோர்கள் சங்கர நாராயணரின் வடிவத்தைப் புனைந்துரைக்கின்றனர்; புகழ்ந்துரைக்கின்றனர்.

6. சிவனின் சக்தி வடிவமே நாராயணன்; இதனை இரு சமயச் சான்றோரும் ஏற்கின்றனர்.

7. சங்கர நயினார் கோயிலின் புற்றுமண் மருத்துவப் பேராற்றலுடையது. ஸ்ரீ சக்கரம் மந்திரப் பேராற்றலுடையது எனவும் இவற்றால் பலரது நோய்கள் தணிகின்றன; அகலுகின்றன எனவும் நம்புகின்றனர். எனவே இத்தலம் சிறந்த ''பிரார்த்தனைத் திருத்தலமாக'' விளங்குகின்றது.

8. நடராசரின் அம்பலத்தில் காரைக்காலம்மையார் எழுந்தருளியிருப்பது கோயிலின் ஒரு சிறப்பம்சமாம்.

9. கோயிலில் அமைந்த பாண்டியர் மரபைத் தழுவிய பழங்காலக் கற்சிலை வடிவங்களும், அண்மைக்கால ஓவியங்களும் அழகானவை. கோயிலில் பழமையும், புதுமையும் இணைந்துள்ளன.

10. கற்சிலை வடிவங்களில் காண முடியாத தெய்வ வடிவங்களை ஓவியங்களிலும், இந்த ஓவியங்களில் காண முடியாத தெய்வ வடிவங்கைளக் கற்சிலைகளிலும் காண முடியும்.

11. ஆறு சமயங்களுக்குரிய தெய்வங்கள் இக்கோயிலில் கற்சிலைகளாய், ஓவியங்களாய்க் காட்சி தருகின்றனர்.

12. பக்தர்கள் சங்கரலிங்க சுவாமி என்ற ஒருவரையோ, சங்கரன், நாராயணன் என்ற இருவரையோ, கோட்டத் தெய்வங்களாகத் திகழ்கின்ற மும்மூர்த்திகள் என்ற மூவரையோ தாம் விரும்புகின்ற முறைகளில் வழிபடுகின்றனர்.

13. சமய இணக்கதிற்குச் சங்கர நாராயணர் வடிவம் ஒரு சிறந்த சான்று எனக் கொள்ளலாம்.

# அடிக்குறிப்புகள்

1. உலக நீதி, பாடல் 4.

2. மதுரைக்காஞ்சி , நச்சினார்க்கினியர் உரை. 522.

3. H.R.Pate, Madras District Gazzetters, Page No.418-419.

4. விசுவநாத தீட்சதர், திருக்கருவைத் தல புராணம், ப.85.

5. கருப்பாயி அம்மாள், செந்தட்டியாள்புரம் கூறிய பாடல், நேர்முக நாள் 1.10.96.

6. திருநாவுக்கரசர் தேவாரம், திருவையாற்றுப் பதிகம், பாடல் 5.

7. ஸ்ரீ சந்திர சேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சாரிய சுவாமிகள், அருள் உரை, தொகுதி-13, பக்.23, 24.

8. ராமசேஷன், ஆர். டாக்டர், கிருஷ்ணன், ரா., வலையப்பேட்டை, மகேஸ்வர வடிவங்கள், ப.137.

9. திருநாவுக்கரசர் தேவாரம், 1) திருவையாற்றுப் பதிகம், பாடல் 5. 2) திருபயற்றூர்ப் பதிகம், பாடல் 7.

10. நான்முகன் திருவந்தாதி, பாடல் 65, 2.

11. ஈசுவர மூர்த்தி பிள்ளை ஆ., கோமதி சதரத்ன மாலை, பாடல் 20.

12. குருவம்மாள், அ., குவளைக் கண்ணி கூறிய பாடல், நேர்முக நாள் 17.1.97.

13. சாமிநாதையர், உ.வே., டாக்டர், என் சரித்திரம், பக்.458-9.

14. திருத்தொண்டர் புராணம், காரைக்காலம்மையார் புராணம் பாடல் 60.

15. திருநாவுக்கரசு, க.த., டாக்டர், தென்கிழக்கு ஆசிய நாடுகளின் தமிழ்ப்பண்பாடு, பக்.200-201.

16. திருஞானசம்பந்தர் தேவாரம், கோளறு பதிகம் பாடல், 2388.

17. மேற்படி, மூன்றாம் திருமுறை, திருப்புனவாயில் பதிகம், பாடல் 1.

18. தாயுமானவர் பாடல்கள், பராபரக்கண்ணி, பாடல் 156.

19. திருவெம்பாவை, பாடல் 13

20. சிராவணன், கல்வெட்டு ஆய்வாளர், தொல்பொருள் ஆய்வுத் துறை, குற்றாலம், நேர்முக நாள் 30.4.2002.

21. சங்கர நயினார் கோயில் தல வரலாறு, கோயில் நிர்வாக வெளியீடு, ப.2.

22. மேற்படி நூல், ப.2.

23. சொக்கம்பட்டி பாளையப்பட்டு சரித்திரம், பாகம் II. பல வித்துவான்கள் இயற்றிய பதினான்கு பிரபந்தங்கள், பக்.18.

24. மேற்படி நூல்.

25. சங்கரலிங்கர் உலா, கண்ணிகள் 284, 285, 286, 288.

26. கல்யாணசுந்தரம், ந., முனைவர், தமிழ்நாட்டில் கணபதி வழிபாடு, பக்.21-25.

27. பரிபாடல், ஒன்பதாம் பாடல், வரிகள் 8-11, 69-71.

28. திருமுருகாற்றுப்படை, பாடல் வரிகள் 210.

29. பரிபாடல், ஐந்தாம் பாடல், செவ்வேள், வரிகள் 60-70.

30. கிருபானந்தவாரியார் சுவாமி, குகஸ்ரீ திருமுருக, முருகன், பக்.65-72.

# இயல் மூன்று

# சங்கர நயினார் கோயில் திருவிழாக்களும் சமூக இயைபும்

நாள், வாரம், பட்சம், மாதம், ஆண்டு எனும் பஞ்ச பருவ வழிபாடுகள் பற்றி விளக்குவதாகவும், சங்கரநயினார் கோயிலில் ஆண்டுதோறும் நிகழும் சித்திரை மற்றும் ஆடித்தவசு திருவிழாக்களை ஆய்வதாகவும் இவ்வியல் அமைகின்றது.

திருவிழாக்கள் மனித சமுதாயத்தில் முக்கியத்துவம் பெற்றவையாகும். திருவிழாக்கள் மக்களுக்கு இறை உணர்வையும், இன்பத்தையும் ஒருங்கே ஊட்டுவனவாகும். கோயில்களில் நாள்தோறும் வழிபாடுகள் நடைபெற்றாலும் திருவிழாக் காலத்தில் சிறப்பு வழிபாடுகள் நடைபெறுகின்றன. மக்கள் அனைவரும் இறைவனுடைய திருப்பணியில் இணைந்து இறையருளும், நலமும் பெற்றிட திருவிழாக்கள் அடித்தளமாகின்றன. எனவே சமூக ஒற்றுமைக்கும், சமய ஒற்றுமைக்கும் இன்றியமையாத அடிப்படைக் காரணியாக திருவிழாக்கள் நடைபெறுகின்றன எனலாம்.

## திருவிழா - பெயர் விளக்கம்

‘விழா’ என்ற சொல்லின் அடிச்சொல் ‘வீழ்’ என்பதாகும். வீழ் - விழைவு; விருப்பம். மக்கள் விழைவுடனும், விருப்பத்துடனும் கொண்டாடுவது விழா.

‘‘சாறு’’ என்பது திருவிழாக்களைக் குறித்த பழைய தமிழ்ச் சொல்லாகும்.

‘‘சாறயர் மூதூர்’’[1]

‘‘சாறயர்ந் தெடுத்த உருவப் பல்கொடி’’[2]

விழா, சாறு ஆகிய தமிழ்ச் சொற்களில் ‘சாறு’ என்ற சொல் வழக்கற்றது.

பண்டிகை, உற்சவம் என்ற வடசொற்கள் திருவிழாவைக் குறிக்கின்றன.

உத்சவம் : 1. உத் = மேலான, 2. சவம் = ஐந்தொழில்கள்

**உற்சவம்**

1. உத் - மேலான
2. சவம் - ஐந்தொழில்கள்

சிவபெருமான் படைத்தல் முதலிய ஐந்தொழில்களைச் செய்கின்றான். இவற்றை அவன் உயிர்களிடத்தில் செலுத்துவதைத் தெரிவிப்பது ''உற்சவம்''. நுண்ணிய ஐந்தொழில்களைத் திருவிழாக்களின் நடைமுறைகள் தெளிவாகத் தெரிவிக்கின்றன.

**பழமை**

திருவிழாக்கள் தோன்றிய காலத்தைத் துல்லியமாகக் கணித்துக் கூற முடியாது.

> **''விழாக்கள் என்பன ஆதி மக்கள் ஒன்று சேர்ந்து நடத்தும் கூட்டுச் சடங்கிலிருந்து தோன்றியவை ஆகும்.''[3]**

என்பது ஒரு கருத்து. தனிப்பட்டவர் வழிபாடு; கூட்டத்தினர் வழிபாடு; சிறு சிறு கூட்டத்தினர் ஒன்று சேர்ந்து ஒரு ''குறுஞ் சமுதாயமாகக்'' கிளைத்து, இவர்கள் ஒன்றாகச் சேர்ந்து தெய்வங்களுக்குரிய சில சடங்குகளைச் செய்த சூழ்நிலையில் திருவிழாக்கள் தோன்றியிருக்க வேண்டும். திருவிழா என்பது மரபுப்படி வருகின்ற வரையறுத்த சடங்குகளின் தொகுதியாகும்.

**திருவிழாக்களும், சமுதாயத்தினரும்**

அறுவடைப் பணிகள் முதலிய பணிகளை முடித்த மக்கள் செல்வச் செழிப்புடன், அமைதியாக, ஓய்வாக, மகிழ்ச்சியாக இருந்தபோது திருவிழாக்களைக் கொண்டாடினர். அவர்களுக்கு அவை பொழுதுபோக்காகவும் அமைந்தன.

திருவிழாக்கள் நடைபெறுகின்ற இடங்களில் விளைபொருட்கள் அனைத்தும் விற்பனைக்கு குவிந்தன. வணிகம் பெருகியது.

ஊர் மக்கள் திரளாகக் கலந்து உறவாடுகின்ற போது நாகரிகக் கலப்பும், பண்பாட்டுக் கலப்பும் ஏற்படுவது இயற்கையே. திருவிழாக்கள் நடைபெறுகின்ற போது, அவை சமுதாயத்தில் தாக்கத்தையும் மாற்றத்தையும் ஏற்படுத்துகின்றன என்பது உண்மை.

**''மக்களின் வாழ்வில் சலிப்பினைப் போக்கவும், இன்பமும், மலர்ச்சியும், புத்துணர்ச்சியும் ஏற்படுத்துவதற்காகத் திருவிழாக்கள் நடைபெறுகின்றன.''[4]**

எந்த வகைப்பட்ட வேற்றுமையும் இல்லாமல் ஊர் மக்கள் அனைவரும் ஒருங்கிணைந்து ஒற்றுமையாகச் செய்கின்ற இறைவழிபாடே திருவிழா. சிறந்த நாகரிகமும், உயர்ந்த பண்பாடும் கொண்ட மக்கள் திருவிழாக்களைக் கொண்டாடும் தகுதி படைத்தவர்கள் ஆவர்.

மக்கள் திருவிழாக்களைக் கொண்டாடுவதில் அரசின் பங்கும் அதிகமாக உண்டு. அரசின் ஆட்சித் திறத்தால் நாட்டில் அமைதியும், அடக்கமும், ஒற்றுமையும், செல்வமும் அனைத்திற்கும் மேலாக இறை நம்பிக்கையும் பக்தியும் நிறையவே வேண்டும். மற்றும் கோயில்களும், அவற்றில் திருவிழாக்களைக் கொண்டாடத் தேவையான அனைத்து வசதிகளும், பொருள்களும், செல்வச் செழிப்பும், பரந்துபட்ட இடங்களும், பக்தி, ஆர்வத்துடன் கலந்து கொள்கின்ற பெருந்திரளான மக்களும் வேண்டும். அனைத்திற்கும் அடிப்படையாக மழைவளமும் தேவை என்று திருக்குறள் வரையறுக்கின்றது.

**''சிறப்பொடு பூசனை செல்லாது வானம்**
**வறக்குமேல் வானோர்க்கு மீண்டு''[5]**

பூசனை = என்பது வழிபாட்டையும்; சிறப்பு = என்பது சிறப்பாக நடைபெறுகின்ற திருவிழாக்களையும் குறிக்கிறது.

**பண்டைக்காலத் திருவிழாக்கள் சில**

பண்டைக் காலத்தில் நடைபெற்ற திருவிழாக்களில் முதலில் குறிக்கத்தக்கது கார்த்திகை தீபம்; இதனை அகநானூறு 'பெருவிழா' என்று குறிக்கின்றது.

''அருவி யான்ற வுயர்சிமை மருங்கில்
பெருவிழா விளக்கம் போல''[6]

அடுத்து, சிலப்பதிகாரமும், மணிமேகலையும் இந்திரவிழா நடைபெற்ற முறைகளை விளக்குகின்றன.[7] முற்காலத்தில் இவ்விழா இருபத்தெட்டு நாட்கள் நடைபெற்றது; இப்போது, இவ்விழாவைப் போகிப் பண்டிகை முதலிய நான்கு நாட்கள் விழாவாகக் கொண்டாடுகின்றனர். திருவோண நன்னாள் திருமாலுக்குரிய திருவிழா நாள் ஆகும்.

''கணங்கொள் அவுணர்க் கடந்த பொலந்தார்
மாயோன் மேய ஓண நன்னாள்''[8]

என அது குறிப்பிடப்பட்டிருக்கிறது. 'உள்ளிவிழா' என்ற பெயரோடு கருவூரில் ஒரு விழா நடைபெற்றதையும் அறிய முடிகிறது.[9]

திருஞானசம்பந்தர், மயிலாப்பூர் கபாலீச்சுரத்தில் மாதந்தோறும் நடைபெற்ற பத்துத் திருவிழாக்களை மயிலாப்பூர் பூம்பாவைப் பதிகத்தில் குறிப்பிடுகின்றார்.[10] அவை வருமாறு :

1. புரட்டாசி - பெருஞ்சோற்று விழா
2. ஐப்பசி - திருவோணம்(இராமர்)நடத்தியது என்பது புராணச் செய்தி
3. கார்த்திகை - விளக்கீடு
4. மார்கழி - திருவாதிரை
5. தைப்பூசம்
6. மாசிமகம் - கடலாட்டு விழா
7. பங்குனி உத்திரம்
8. வைகாசி அட்டமி. இது விரத நாட்களில் ஒன்று
9. மார்கழி - ஊஞ்சல் திருவிழா
10. ஆவணி அவிட்டம் ஈறாக நடைபெறுகின்ற பெருஞ்சாந்தி விழா. இதனைப் 'பவித்திரோற்சவம்' என்றும் கூறுவர்.

பண்டைக் காலத் திருவிழாக்களான இவை பல கோயில்களில் சிற்சில வேறுபாடுகளுடன் இக்காலத்தும் நடைபெறுகின்றன.

**உவா நாட்கள்**

அமாவாசை, பௌர்ணமி ஆகிய உவா நாட்கள் இரண்டிலும் எவரும், எப்பணிக்கும் செல்வதில்லை.[11] அன்றைய நாட்களில் ஓய்வுடன் இன்பமாய், அமைதியாய்க் காலங்கழித்தனர். எனவே, இறை வழிபாடுகளைச் செய்யத்தக்க நாட்களாக அவை அமைந்தன. அமாவாசைகள் தென்புலத்தாரை வழிபடுவதற்கும், பௌர்ணமிகள் திருவிழாக்கள் தொடங்குகின்ற அல்லது நடைபெறுகின்ற நாட்களாகவும் உயர்ந்தன. 1. சித்ரா பௌர்ணமி, 2. வைகாசி விசாகம், 3. கார்த்திகை மாதக் கிருத்திகை, 4. மார்கழித்திருவாதிரை, 5. தைப்பூசம், 6. மாசிமகம், 7. பங்குனி உத்திரம் முதலியன பௌர்ணமியைச் சார்ந்து வருவதால் சிறந்த நாட்களாக எப்போதும் மதிக்கப்படுகின்றன.

**சமயச்சார்பு**

பண்டைக் காலத்தில் பக்தி உண்டு; சமயத் தொடர்பான அரிய கருத்துகளும் உண்டு. ஆனால், 'சமயம்' என்ற தனி அமைப்பும் இல்லை, சமயத்திற்குரிய வரையறுக்கப்பட்ட தனிக்கொள்கைகளும் இல்லை. திருவிழாக்களும் சமயச் சார்புடையன அல்ல. ஏறக்குறைய, கி.பி. முதல் நூற்றாண்டு முதல் சமயங்கள் தோன்றிக் கிளர்ந்து வளர்ந்த போது திருவிழாக்களும் சமயச் சார்புடையனவாக மாறின. சைவம், வைணவம் முதலிய சமயத்தினர் அவரவர் கொள்கைகளின்படி, மரபுகளின்படி வெவ்வேறு முறைகளில் திருவிழாக்களை நடத்தலாயினர்.

**சங்கரநயினார் கோயில்**

திருவிழாக்களுக்குரிய பழைய மரபுகளும், நடைமுறைகளும் சங்கரநயினார் கோயிலில் வழுவாமல் பின்பற்றப்படுகின்றது. சிறு தெய்வ வழிபாடு, பரிவாரத் தெய்வ வழிபாடு, அனைத்திற்கும், அனைவருக்கும் மேலான பரம்பொருள் வழிபாடு முதலியன, திருவிழாக் காலங்களின் நிகழ்கின்ற பல வழிபாடுகள் ஆகும்.

கோயிலுக்குள் நடைபெறுகின்ற திருவிழாக்களில் உள்ளூர் மக்களும், சித்திரைப் பெருந்திருவிழா, ஆடித்தவசு விழா முதலிய சில திருவிழாக்களில் சுற்றுப்புற நகர, ஊர்

மக்களும் திரளாகப் பங்கேற்கின்றனர். சங்கரநயினார் கோயிலில் ''காமிகாகமப்படி'' நாள் வழிபாடுகளும், திருவிழாக்களும் நடைபெறுகின்றன.

**பஞ்ச பருவ வழிபாடுகள்**

கோயில்களில் நடைபெறுகின்ற வழிபாடுகளையும், திருவிழாக்களையும் ஐந்தாக வகைப்படுத்துவது வழக்கம். இவற்றைப் 'பஞ்ச பருவ வழிபாடுகள்' என்பர். அவை:

1. நாள் வழிபாடு
2. வார வழிபாடு
3. பட்ச வழிபாடு
4. மாத வழிபாடு
5. ஆண்டுத் திருவிழா (பிரம்மோற்சவம்)

என்பன. சங்கரநயினார் கோயிலில் பஞ்சபருவ வழிபாடுகள் நடைபெறுகின்ற முறைகளை இனி ஆராயலாம்.

**நாள் வழிபாடு**

கோயில்களின் வசதி, வாய்ப்பு, பக்தர்களின் வருகை முதலிய காரணங்களின் அடிப்படையில், நாள் வழிபாடுகளின் எண்ணிக்கை ஒன்று முதல் பன்னிரண்டு வரை வேறுபடுகின்றது. தினமும் ஆறுகால வழிபாடுகள் நடைபெறுவது பெரும்பான்மையாகும்.

**ஆறு கால வழிபாடுகள்**

| | | | |
|---|---|---|---|
| 1. | விடியற்காலை | - | காலை 6-7 மணி |
| 2. | காலைச் சந்தி | - | காலை 8-8.30 மணி |
| 3. | உச்சிக்காலம் | - | பகல் 11-12 மணி |
| 4. | மாலைக்காலம் | - | மாலை 5-5.30 மணி |
| 5. | மாலைச் சந்தி | - | மாலை 6-7 மணி |

6. முன்னிரவு - இரவு 8-8.45 மணி
(அர்த்தயாமம்)

மேற்கண்ட ஆறுகால வழிபாடுகள் சங்கர நயினார் கோயிலிலும் நிகழ்கின்றன. வழிபாட்டு நடைமுறைகளில் சிவனது ஐந்தொழில்களும் நுட்பமாய்ப் புலப்படுகின்ற முறைகள் வருமாறு :

1. அபிடேகம் - படைத்தல்
2. நிவேதனம் - காத்தல்
3. பலி - அழித்தல்
4. தீப ஆராதனை - மறைத்தல்
5. ஹோமம் - அருளல்

**வார வழிபாடுகள்**

தேர்ந்த சில கிழமைகளில் நடைபெறுகின்ற சிறப்பு வழிபாடுகள் இவை. பொதுவாக, எல்லாக் கோயில்களிலும் எல்லாத் தெய்வங்களையும் போற்றிச் சிறப்பு வழிபாடுகளை வெள்ளிக்கிழமைகளில் நடத்துகின்றனர். சிவனுக்குரிய நாள் திங்கட்கிழமை. ஆகவே சங்கரநயினார் கோயிலில் திங்கட்கிழமைகளிலும் இறை வழிபாடுகளைச் சிறப்பாகச் செய்கின்றனர்.

**பட்ச வழிபாடு**

வளர்பிறை, தேய்பிறை காலங்களில் வழிபடுகின்ற வழிபாடு பட்ச வழிபாடு ஆகும். சங்கர நயினார் கோயிலில் திதி அடிப்படையில் நடைபெறுகின்ற சிறப்பு வழிபாடுகள் மூன்று. அவை :-

1. சதுர்த்தி - விநாயகர் வழிபாடு
2. சஷ்டி - முருக வழிபாடு
3. திரியோதசி - சிவவழிபாடு
(பிரதோஷம்)

## 4. மாத வழிபாடுகள்

ஒவ்வொரு மாதமும் நடைபெறுகின்ற சிறப்பு வழிபாட்டு நாள்கள் வருமாறு :

1. தமிழ் மாதப் பிறப்புகள்
2. திருநட்சத்திரம் : 1. கிருத்திகை, 2. திருவாதிரை
3. திதிகள் : 1. அமாவாசை, 2. சதுர்த்தி, 3. சஷ்டி, 4. திரியோதசி (பிரதோஷம்), 5. பௌர்ணமி

அடுத்து, மாதந்தோறும் நடைபெறுகின்ற சிறப்பு வழிபாடுகள், திருவிழாக்கள் முதலியவற்றைத் தனித்தனியே காணலாம்.

### மாதச் சிறப்பு வழிபாடுகளும் திருவிழாக்களும்

| | மாதங்கள் | சிறப்பு வழிபாடுகள்/ திருவிழாக்கள் | நடைபெறும் நாட்களின் எண்ணிக்கை |
|---|---|---|---|
| 1. | சித்திரை | பெருந்திருவிழா (பிரம்மோற்சவம்) | 45 |
| 2. | வைகாசி | வசந்த உற்சவம் | 11 |
| 3. | ஆனி | இல்லை | |
| 4. | ஆடி | 1. ஆடித்தவசு விழா, 2. ஊஞ்சல் விழா | 12,3 |
| 5. | ஆவணி | 1. விநாயகர் சதுர்த்தி, 2. முளைப்பாலிகை | 1, 8 |
| 6. | புரட்டாசி | 1. நவராத்திரி, 2. சூரிய பூசை | 9, 3 |
| 7. | ஐப்பசி | 1. தீபாவளி, 2. திருக்கல்யாணம், 3. கந்த சஷ்டி விழா | 1, 10, 6 |
| 8. | கார்த்திகை | திருக்கார்த்திகைத் தீபம் | 6 |
| 9. | மார்கழி | திருவாதிரைத் திருவிழா | 10 |
| 10. | தை | தெப்பத் திருவிழா | 1 |
| 11. | மாசி | மகா சிவராத்திரி | 1 |
| 12. | பங்குனி | பங்குனி உத்திரம் மற்றும் சித்திரைப் பெருந்திருவிழா | தொடக்கம் |

**தங்கத்தேர்**

ஒவ்வொரு மாதமும், முதல் தேதியன்று இரவு 7 மணியளவில் தங்கத்தேர் உலா நடைபெறுகிறது.

**சித்திரை – பிரம்மோற்சவம்**

இதனைப் பற்றிய செய்திகளைப் ''பெருந்திருவிழாக்கள்'' என்ற உட்தலைப்பில் காணலாம்.

**வைகாசி – வசந்த உற்சவம்**

ஆறு பருவங்களில் மிகவும் சிறப்பானது 'வசந்த காலம்'. அறுவடைப் பணிகள் முதலியவற்றைச் செம்மையாகச் செய்து முடித்த உழவர்களும் பிறரும் ஓய்வாக, களிப்புடன் வாழ்கின்ற காலம் வசந்த காலம், அப்போது பல கோயில்களில் நடைபெறுகின்ற திருவிழாவே 'வசந்த உற்சவம்' என்பர்.

சங்கர நயினார் கோயிலில் வசந்த உற்சவம், கோயிலுக்குள்ளேயே பதினொரு நாட்கள் நடைபெறுகின்றது. இதற்காகும் செலவுகள் முழுவதையும் கோயில் நிர்வாகமே ஏற்கின்றது.

சங்கரநாராயணர், சங்கரலிங்க சுவாமிகள், கோமதியம்பிகை ஆகிய மூவரது திருமேனிகளும் குளிரும்படி அபிடேகம் செய்து அலங்கரித்து, ஆராதனை செய்து பக்தர்கள் கண் குளிர, மனம் குளிர, உயிர் குளிரத் தரிசித்துப் பக்திப் பரவசமடைகின்றனர்.

**ஆனி**

ஒவ்வொரு மாதமும், நட்சத்திர, திதி நாட்களில் பொதுவாக நடைபெறுகின்ற சிறப்பு வழிபாடுகளைத் தவிர வேறு வழிபாடுகள் ஆனி மாதத்தில் நடைபெறுவதில்லை.

### ஆடி - ஆடித்தவசு

ஆடித் தவசைப் பற்றிய செய்திகள் பின்னர் வரும் ''பெருந்திருவிழாக்கள்'' என்ற உட்தலைப்பின் கீழ் விளக்கப்பெறும்.

### ஆவணி : (அ) விநாயகர் சதுர்த்தி

ஆவணி வளர்பிறைச் சதுர்த்தியன்று தல விநாயகரைப் பக்தர்கள் திரளாகத் திரண்டு வழிபடுகின்றனர்.

#### முளைப்பாலிகை

ஆவணியில் எட்டு நாட்கள் நடைபெறுகின்ற திருவிழா ''முளைப்பாலிகை''. இதனை 'முளைக்கொட்டு', 'முளைப்பாரி' என்றும் வழங்குகின்றனர்.

#### நோக்கம்

நெல்லும், தானிய வகைகளும், பிறவும் சிறப்பாக வளர வேண்டும் என்பதற்காக ப் கோமதியம்பிகையை வழிபட்டு, அவளது அருள்நோக்கம் படியுமிடத்தில் 'முளைப்பாலிகை' விதைத்து, விளைவிக்கின்றனர். இவை மிக விரைவில் செழித்து வளர வளர, நிலங்களும் கொழிக்கும் என்பது ஒரு நம்பிக்கையாகும். நிலங்கள் பசுமையாய்ப் பின்னர் வளர்வதற்கு முளைப்பாலிகையின் வளர்ச்சி ஒரு முன்னோடி வளர்ச்சியாகவும்; அறிகுறியாகவும் இம்மக்களால் கருதப்படுகிறது.

#### முறைகள்

முளைப்பாலிகை வழிபாடு என்பது சக்தி வழிபாட்டின் ஓர் அங்கம். எண்ணிக்கையில் அதிகமான குழந்தைகளைப் பெற்ற சுமங்கலிகள் சிலர் கூடி ஒரு பெரிய பாத்திரத்தில் தானிய விதைகளை விதைக்கின்றனர். பிற மகளிர் கோமதியம்பிகையைப் போற்றி வழிபடுகின்றனர்.

**''ஒன்றாம் நாள் பார்க்கையிலே கோமதி**

**ஒரு இலையும் கொண்டிருப்பா தானானே**

**இரண்டாம் நாள் பார்க்கையிலே கோமதி**

**ரெண்டிலை கொண்டிருப்பா தானானே''[12]**

என்று அம்பிகையின் அருள் எழுச்சியையும், முளைப்பாலிகையின் வளர்ச்சியையும் ஒருங்கே வியந்து பாடுகின்றனர். முளைப்பாலிகை விளைவிப்பதால் ஏற்படுகின்ற பயன்களை,

**''தானானே தானானே**

**கோமதியே தானானே**

**ஆத்தா இடிவிழுக மழைபொழிய**

**இரு கரையும் பொங்கிவர**

**பெருகி வந்த தண்ணியிலே**

**பெண்களெல்லாம் நீராடி**

**நீராடி நீர்க் குளிச்சு**

**மஞ்ச வர்ணப் பட்டுடுத்திப்**

**பட்டு மினுமினுக்கப்**

**பாதரச சோதிமின்ன**

**ஊர வரவழைங்க**

**ஒற்றுமையாய் முளைபரப்புங்க''[13]**

என்ற நாடோடிப் பாடற்பகுதி சுருக்கமாய்ப் புலப்படுத்துகின்றது.

விழா முடிவில், முளைப்பாலிகையைச் சங்கரலிங்க சுவாமிக்கும், கோமதி அம்பிகைக்கும் நிவேதனமாகப் படைத்து வழிபடுகின்றனர்.

### *புரட்டாசி : (அ) நவராத்திரி*

புரட்டாசி மாதம், வளர்பிறைப் பிரதமை முதல் ஒன்பது நாட்களும் முப்பெருஞ்சக்திகளை வழிபடுவது ''நவராத்திரி''. நாயக்கர் காலம் முதல் சிறப்புப்

பெற்ற விழாக்களில் நவராத்திரியும் ஒன்று. பெண் தெய்வங்களைப் பெண்களே முழுக்க முழுக்க வழிபடுகின்ற விரதவிழா இது.

**முதல் மூன்று நாட்களில் துர்க்கையையும்,**
**இடை மூன்று நாட்களில் இலக்குமியையும்,**
**இறுதி மூன்று நாட்களில் சரஸ்வதியையும்**

வழிபட வேண்டும். பத்தாம் நாள் விசயதசமி. இது அறியாமையையும், ஆணவத்தையும் இறைவி அறவே அடக்கி, அகற்றி, வெற்றி பெற்ற திருநாள். நவராத்திரியைச் ''சரஸ்வதி பூசை'' என்றும், ''கலைமகள் வழிபாடு'' என்றும் கூறுகின்றனர். வீடுகளில் பெண்கள் 'கொலு' வைத்துச் சக்திகளை வழிபடுகின்றனர்.

கோயில்களில் இறைவனையும், இறைவியையும் கொலுவீற்றிருக்கும்படி அலங்கரிக்கின்றனர்.

**இலட்சார்ச்சனை**

கோமதியம்பிகையை விதவிதமான உடைகளாலும், வண்ண வண்ண மலர்களாலும் அலங்கரித்து வழிபடுகின்றனர். இலட்சார்ச்சனையும் நடைபெறுகின்றது.

**பஞ்சமுக அர்ச்சனை**

கலைமகள் நாளன்று ஆறுமுகப் பெருமானுக்குப் ''பஞ்சமுக அர்ச்சனை'' நடைபெறுவது ஒரு சிறப்பாம். ஆறுமுகனைச் சூழ்ந்து ஐந்து அர்ச்சகர்கள் நின்று, ஐந்து விதமான நிவேதனங்களைப் படைத்து, ஐந்து விதமான மலர்களால், அர்ச்சிப்பது 'பஞ்சமுக அர்ச்சனை' எனப்படும்.

### சூரிய பூசை

சூரியன் தன் ஒளிக்கதிர்க்கைகளால் இறைவனைத் தடவியும், தழுவியும் ஒளிபரப்பி அகலுவதைச் சூரிய பூசை என்று சிறப்பித்துக் கூறுகின்றனர். இது குறிப்பிட்ட சில நாட்களில், தேர்ந்த சில தலங்களில் மட்டுமே நிகழ்கின்றது.

சங்கர நயினார் கோயிலில் (1) மார்ச்சு 21, 22, 23ஆம் நாட்களிலும், (2) செப்டம்பர் 21, 22, 23ஆம் நாட்களிலும் காலை 6.13 மணியளவில் சூரியன் மூலவரை வழிபடுகின்றான்.

மார்ச்சு 21, செப்டம்பர் 22 ஆகிய இரு நாட்களில் பகல் நேரமும், இரவு நேரமும் சமமாக உள்ளன. அந்த இரு நாட்களிலும் சூரிய பூசை நிகழ்வது சிறப்பாகும். மற்றும், முதல் பூசை உத்தராயனத்திலும், இரண்டாம் பூசை தட்சிணாயனத்திலும் நடைபெறுகின்றன.

சூரிய பூசைகள் துல்லியமாக நிகழுமாறு கோயிலை வடிவமைத்துக் கட்டிய கட்டடக் கலைஞர்களின் வானியற் புலமையும், கட்டடத் தொழில்நுட்பமும் பாராட்டுக்குரியன. சூரிய பூசை நிகழுமாறு கோயிலை வடிவமைத்த கட்டடக் கலைத்திறனும் போற்றுதற்கு உரியது.

### ஐப்பசி : (அ) தீபாவளி

தமிழக மக்கள் அனைவரும் மிகச் சிறப்பாகக் கொண்டாடுகின்ற மற்றொரு திருவிழா தீபாவளி. மக்களின் வாழ்வில் ஏற்படும் துன்பங்கள் நீங்கி இன்பமும், வளர்ச்சியும் பெருகும் நாளாக இத்திருவிழா கொண்டாடப்படுகிறது.

சங்கர நயினார் கோயிலில், தீபாவளியன்று, சங்கரலிங்க சுவாமிக்கும், சங்கர நாராயணருக்கும், கோமதியம்பிகைக்கும் எண்ணெய்க் காப்பிட்டு, அபிடேகஞ் செய்து, புத்தாடைகள் அணிவித்து அலங்கரித்து வழிபடுகின்றனர்.

**திருக்கல்யாணம்**

பக்தர்கள் இறைவனையும், இறைவியையும் தம் குடும்ப உறவினர்களாகவே கருதுகின்றனர். அவர்களது பிறந்த நாள் விழாவைக் கொண்டாடுகின்றனர்; அவர்களைத் தொட்டிலில் கிடத்தித் தாலாட்டுகின்றனர்; ஊஞ்சலில் எழுந்தருளச் செய்து அதை மெல்ல அசைத்து மகிழ்கின்றனர். அவர்களுக்குத் திருக்கல்யாணம் செய்து அளப்பற்ற களிப்பினை அடைகின்றனர்.

திருக்கல்யாணம் என்பது போகநிலையில் இறைவனை வழிபடுவது ஆகும். இதனால், பற்பல போகங்களும் நற்பலன்களும் விளைவதாக மக்கள் நம்புகின்றனர்.

சங்கரநயினார் கோயிலில் ஐப்பசி மாதப் பௌர்ணமி நாளன்று கொடியேற்றத்துடன் திருக்கல்யாணத் திருவிழா தொடங்குகின்றது. கொடியேற்ற நாள் முதல் தினம், கோயிலில், இறைவனுக்கும் இறைவிக்கும் சிறப்பு அலங்காரங்களும் வழிபாடுகளும் நிகழ்கின்றன.

நாடோறும் தேவார இசைப்பாடல்களை இசைப்பதால் கோயிலில் தமிழ் மணமும், பக்தி மணமும், இசை மணமும் கமழ்கின்றன. பத்தாம் நாள் சங்கரலிங்க சுவாமிக்கும், கோமதியம்பிகைக்கும் திருக்கல்யாணம் முறைப்படி நடைபெறுகிறது. பதினோராம் நாள் அப்பனும், அம்மையும் பட்டணப் பிரவேசம் செய்வதுடன் திருக்கல்யாணத் திருவிழா நிறைவுறுகின்றது.

**கந்த சஷ்டி விழா**

கந்தனது பிறப்பு, வளர்ப்புடன் தொடர்புடையது கந்த சஷ்டி விழா. ஐப்பசி வளர்பிறை பிரதமை முதல் சஷ்டி வரையுள்ள ஆறு நாட்களும், சிறப்பாக ஆறாம் நாளும் இந்த விழா கொண்டாடப்படுகின்றது. பக்தர்கள் அந்த ஆறு நாட்களிலும் கடுமையான விரதங்காத்து, கோயில்களில் நடைபெறுகின்ற சிறப்பு வழிபாடுகளிலும் கலந்து கொள்கின்றனர்.

அன்று, திருச்செந்தூர் முதலான முருகன் திருத்தலங்கள் பலவற்றில் 'சூரசம்ஹாரம்' நடைபெறுகின்றது. ஆணவத்தின் அறிகுறியான சூரபத்மனை முருகன் அடக்கி அடிமைப்படுத்துகின்ற நிகழ்ச்சியே ''சூரசம்ஹாரம்''.

சங்கர நயினார் கோயிலில் முருகன் ஒரு பரிவாரத் தெய்வம் ஆவான். ஆகவே, இக்கோயிலிலும் கந்த சஷ்டி விழா ஆறு நாட்கள் நடைபெறுகின்றது.

**கார்த்திகை**

கார்த்திகை மாதத்தில் நடைபெறும் சிறப்புடைய விழா திருக்கார்த்திகைத் தீபம். கார்த்திகை மாதம் கிருத்திகை நட்சத்திரத்துடன் பௌர்ணமியும் சார்ந்து வருவது கார்த்திகைத் திருநாள். அன்று அந்திப் பொழுதில் மகளிர் முற்றம் முதலான இடங்களில் விளக்குகளை ஏற்றி வரிசையாக வைத்து முருகனை வழிபடுகின்றனர். இதற்குக் ''கார்த்திகை விளக்கீடு'' என்பதும் ஒரு பெயர். இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு மேற்பட்ட பழமைச் சிறப்புடையது இவ்விழா. தொல்காப்பியத்தில் அமைந்த

> **''வேலி நோக்கிய விளக்கு நிலையும்''**

என்ற தொடருக்கு உரை வரைந்த நச்சினார்க்கினியர்.

> **''கார்த்திகைத் திங்களில் கார்த்திகை விளக்கு''**

என்று திருக்கார்த்திகைத் தீபத்தைக் குறித்தார்.[14]

> **''மதிநிறைந் தறுமீன் சேரு மகலிருள்**
> **நடுநாள் மருகுவிளக் குறுத்து மாலை தூக்கிய**
> **பழவிறல் மூதூர் பலருடன் துவற்றிய விளக்கு''**

என்று அகநானூறும் கார்த்திகைத் தீபத்தைச் சுட்டுகின்றது.[15]

கார்த்திகைத் தீபத்தைப் பற்றிய குறிப்பு திருஞான சம்பந்தர் தேவாரத்திலும் உள்ளது.[16]

திருவண்ணாமலையில் மகாதீபம் ஏற்றப்படுகின்றது. சிவன் பிரமனுக்கும், திருமாலுக்கும் புலப்படாமல் ஒளிப்பிழம்பாய் நின்ற திருக்காட்சியை அத்தீபம் புலப்படுத்துகின்றது.

சிவன் கோயில்கள் சிலவற்றில் ''ருத்திர தீபமேற்றிச் ''சொக்கப்பனை''யைக் கொளுத்துகின்றனர். உலர்ந்த பனைமரம் ஒன்றைக் கோயிலருகில் கொளுத்துவது ''சொக்கப்பனை'' என்று கூறப்படுகிறது. பனை எரிகின்ற போது சொக்கன் (சிவன்) ஒளிப்பிழம்பாய்த் தோன்றுகின்றான் என்பது நம்பிக்கை. பனை எரிந்த எஞ்சிய சாம்பலைப் பக்தர்கள் அனைவரும் விபூதிப் பிரசாதமாக ஏற்றுத் தரிக்கின்றனர். இச்சாம்பலை வயல் வெளியில் தெளிப்பதுண்டு. இதனால் வேளாண்மை பெருகும் என்று நம்புகின்றனர்.

திருமால் கோயில்களில் பஞ்சராத்திர தீபம் ஏற்றப்படுகின்றது. சிறுவர்கள் ''மாவலியோ, மாவலியோ'' என்று 'மாவலி' சுற்றி, ஒளிப்பொறி வட்டங்களை உருவாக்கி மாபலிச் சக்கரவர்த்தியை மண்ணுலகத்தில் வரவேற்கின்றனர்.

இவ்வாறு பற்பல சிறப்பு வழிபாட்டு முறைகளைக் கொண்டது திருக்கார்த்திகைத் தீபத் திருநாள். அத்திருநாளில் சங்கர நயினார் கோயிலிலும் தீபங்கள் பல ஏற்றப்படுகின்றன. சிறப்பு வழிபாடுகளும் இடையறாமல் நிகழ்கின்றன.

திருக்கார்த்திகைத் தீபத்திருநாள் சைவ, வைணவச் சமயங்களின் ஒருமைப்பாட்டிற்குச் சான்றாக விளங்குகின்றது. அந்த ஒருமைப்பாட்டை உணர்த்துகின்ற சங்கர நயினார் கோயிலில் திருக்கார்த்திகைத் தீபத் திருவிழா சிறப்பாகக் கொண்டாடப்படுவது மிகவும் பொருத்தமாகும்.

### *மார்கழி : திருவாதிரைத் திருவிழா*

மாதங்களில் மார்கழி மாதமே மிகச் சிறந்த மாதம். தெய்வ வழிபாடுகளுக்கு உகந்த மாதமும் அதுவே. கண்ணனும் பகவத் கீதையில் ''மாதங்களில் மார்கழியாய் இருக்கிறேன்'' என்று அருளினான்.[17]

நட்சத்திரங்களில் சிவனுக்குரிய திருவாதிரையும், திருமாலுக்குரிய திருவோணமும் மேன்மையானவை. திருவாதிரையான் என்ற பெயர் சிவனுக்கும், திருவோணத்தான் என்ற பெயர் திருமாலுக்கும் உரியன. இந்த இரு நட்சத்திரங்களின் பெயர்கள் மட்டும் ‘‘திரு’’ என்ற சிறப்படை மொழியுடன் திகழ்கின்றன.

மாதங்களில் சிறந்த மார்கழியும், நட்சத்திரங்களில் சிறந்த திருவாதிரையும், நிறைவான திதியான பௌர்ணமியும் கூடிவரும் நாளே ‘‘திருவாதிரைத் திருநாள்’’. அன்று இறைவனைத் தரிசிப்பதை ‘‘ஆருத்ரா தரிசனம்’’ என்பர். ‘ஆருத்ரா’ என்ற வடசொல் ஆதிரை என்று தமிழில் மருவியது. திருவாதிரைத் திருவிழாவை,

‘‘மாயிருந் திங்கள் மறுநிறை ஆதிரை
விரிநூல் அந்தணர் விழவு தொடங்க’’

என்று பரிபாடல் சுட்டுகிறது.[18] எனவே, இவ்விழா இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு மேற்பட்ட பழமை வாய்ந்தது எனலாம். எல்லாச் சிவன் கோயில்களிலும், சிறப்பாகச் சிதம்பரத்திலும் திருவாதிரைத் திருவிழா நடைபெறுகின்றது.

திருவாதிரைத் திருவிழா நடராசருக்கும், மாணிக்கவாசகருக்கும் உரியது. இவ்விழா சங்கர நயினார் கோயிலில் பத்து நாட்கள் நடைபெறுகின்றது. திருவிழா நாட்களில் ஒவ்வொரு நாளும் காலையும், மாலையும் அபிடேகம் செய்து நடராசரை அலங்கரிக்கின்றனர். மாணிக்கவாசகரின் திருமேனியை அலங்கரித்து, நடராசரின் திருமுன் எழுந்தருளச் செய்கின்றனர். அப்போது ஓதுவார்கள் திருவெம்பாவை முழுவதையும் பண்களோடு பாடுகின்றார்கள். ஒவ்வொரு பாடல் முடிவுறும் போதும் சங்கு முழங்க மத்தளம் கொட்டுகின்றனர். கற்பூர ஆராதனையும் நிகழ்கின்றது.

திருவிழா நடைபெறுகின்ற பத்து நாட்களில், முதல் ஏழு நாட்களில் நடராசரையும், எட்டு, ஒன்பதாம் நாட்களில் சங்கரலிங்க சுவாமியையும் பத்தாம் நாளில் நடராசரையும் வழிபடுகின்றனர். தினமும், காலை மாலை வேளைகளில் நடராசர், சப்பரத்திலும், சங்கரலிங்க சுவாமியும், கோமதியம்பிகையும் வெவ்வேறு விதமான வாகனங்களிலும் பவனியுலா வருகின்றனர். திருவாதிரைத் திருநாளன்று நடராசருக்குச் சிறப்பு அபிடேகமும், பள்ளியறைத் தீப ஆராதனையும், சிறப்பு அர்ச்சனைகளும் நடைபெறுகின்றன.

திருவாதிரைத் திருநாளன்று இறைவன் உலகத்தைப் தோற்றுவிக்கின்றான். சத்தன் அருளால் சக்தியும் புலனாகும் நாள், இந்நாள் என்பது மரபு.

''சத்தனை அத்தன் என்றும் சக்தியை அன்னை என்றும் அழைப்பர். அத்தன் அன்னையைத் தன்னுள் பேரொடுக்கப் பேரூழியில் ஒடுக்கிக் கொள்வான். பின்பு உலகத் தோற்றமாம் மார்கழித் திருவாதிரையின்போது அவ்வன்னையை வெளிப்படுத்துவான். இதுவே சத்தன் அருள்தரின் சக்தி அருளுண்டாம்''[19] என்று கூறப்படுகின்றது.

## தை : தெப்பத் திருவிழா

சங்கரநயினார் கோயிலில் தெப்பத் திருவிழா ஒவ்வோர் ஆண்டும் தை மாதம் கடைசி வெள்ளிக்கிழமையன்று, ஊரின் தெற்குப் பக்கத்திலுள்ள ''ஆவுடைப் பொய்கை''யில் நடைபெறுகிறது. சங்கரலிங்கர் ஆவுடைப்பொய்கையில் தெப்பத்தில் வலம் வந்து அருள் சுரக்கின்றார்.

**''சீயக்காய் நெல்லி**
**சிறுபெயராம் கஸ்தூரி**
**அரச்சுத் திரட்டுவாளாம்**
**ஆவுடையாள்**
**ஐந்து வகைக் கிண்ணியிலே**
**தேச்சு முழுகுவாளாம் தெப்பம் கலகலங்க''**[20]

என்று நாடோடிப் பாடற்பகுதி ஆவுடையாள் ''தெப்பம் கலகலங்க'' மணப் பொருள்களைப் பூசி நீராடும் திறத்தை வியக்கிறது.

தெப்பத் திருநாளன்று மகளிர் மாவிளக்கெடுத்துத் தம் நேர்த்திக் கடன்களை நிறைவேற்றுகின்றனர். தாம் செலுத்த வேண்டிய காணிக்கைப் பொருள்களையும் செலுத்துகின்றனர்.

இறைவன் நீர் வாழ் உயிரினங்களுக்கும் அருள் புரியத் தெப்பத்தில் வலம் வருகின்றான். பிறவிப் பெருங்கடலை எளிதில் கடப்பதற்கு அவனது திருவடிகளே தெப்பம் ஆகும் என்பதைத் தெப்பத் திருவிழா குறிப்பாக உணர்த்துகின்றது.

***மாசி : மகாசிவராத்திரி***

ஆண்டுதோறும் மாசி மாதத் தேய்பிறைச் சதுர்த்தியில் மகா சிவராத்திரி வருகின்றது. தேவரும், அசுரரும் பாற்கடலைக் கடைந்தபோது திரண்ட நஞ்சினை சிவபெருமான் உண்டு உலகை உய்வித்த பெருநாளே மகாசிவராத்திரி. இது, விரதங்காத்துச் சிவபெருமானை வழிபடுவதற்குரிய சிறந்த நாளாகும்.

உண்ணாமல் விரதங்காத்தும், உறங்காமல் விழித்திருந்தும், எப்போதும் சிவசிந்தனையோடு, சிவ புராணம், தேவாரம் முதலிய நூல்களைப் பாராயணஞ் செய்தும் மகாசிவராத்திரியன்று சிவ வழிபாடு செய்ய வேண்டும். சிவன் கோயில்கள் அனைத்திலும் சிறப்பு வழிபாடுகளுடன், இரவு நான்கு காலச் சிறப்பு அபிடேக ஆராதனைகளும் நடைபெறுகின்றன. இச்சிறப்பு வழிபாடுகள் சங்கரநயினார் கோயிலிலும் உண்டு.

***பங்குனி : பங்குனி உத்திரம்***

இந்நாள், பெரும்பாலும் ஆண்டின் கடைசிப் பௌர்ணமி நாளாக அமைகின்ற மங்களமான திருநாள்.

''பலி விழாப் பாடல்செய் பங்குனி உத்திரநாள் ஒலி விழா''[21]

என்று திருஞானசம்பந்தரும் பங்குனி உத்திரத்தைச் சிறப்பித்தார்.

இராமன் முதலியோர் நால்வருக்கும் பங்குனி உத்திரத்தன்று தான் திருமணம் நிகழ்ந்தது.[22]

பங்குனி உத்திரத் திருநாள் பல நூற்றாண்டுகளாகக் கொண்டாடப்படுகின்ற பெருமையுடையது. பங்குனி உத்திரத்தன்று பல கோயில்களில் தெய்வத் திருமணங்கள் நிகழ்கின்றன. அதே நாளில் பிரம்மோற்சவமும் தொடங்குகின்றது.

சங்கரநயினார் கோயிலிலும் சித்திரைப் பிரம்மோற்சவத்திற்கான முன்னேற்பாடுகள் பங்குனி மாதத்திலேயே தொடங்கித் தொடர்ந்து நடைபெறுகின்றன. பிரம்மோற்சவத்தைச் சார்ந்த விநாயகர் வழிபாட்டின் தொடக்கத் திருநாள் பங்குனி உத்திரமேயாகும்.

## ஆண்டுத் திருவிழா - பிரம்மோற்சவம்

ஒவ்வோர் ஆண்டும் மிகச் சிறப்பாக நடைபெறுகின்ற ஆண்டின் பெருந்திருவிழா அல்லது பிரம்மோற்சவம் பஞ்ச பருவ வழிபாடுகளில் ஐந்தாவது ஆகும்.

**பிரம்ம + உற்சவம் :** பிரம்ம(ம்) - மேலான; சிறப்பான; உயர்வான; உற்சவம் பிரம்மோற்சவம்.

### சித்திரைப் பெருந்திருவிழா : பிரம்மோற்சவம்

சங்கர நயினார் கோயிலில் சித்திரை மாதத்தில், ஆண்டின் பெருந்திருவிழாவான பிரம்மோற்சவம் நாற்பத்தைந்து நாட்கள் தொடர்ந்து நடைபெறுவது தனிப் பெருஞ்சிறப்பு. இவ்விழா சங்கரலிங்கசுவாமிக்கும், உக்கிரபாண்டியனுக்கும் உரிய விழாவாக மதிக்கப்படுகின்றது.

ஊர்க்காவல் தெய்வமான அம்மச்சியார் கோயில் வழிபாட்டுடன் சித்திரைப் பெருந்திருவிழா தொடங்குகின்றது.

### அம்மச்சியார் கோயில் வழிபாடு

ஊர் மக்களுக்கு இடர்கள் வாராமல் காப்பதும், தேர் எளிதில் புறப்பட்டு, தங்கு தடையில்லாமல் ஓடி, ஒரு குறையும் இல்லாமல் நிலைக்கு வர உதவுவதும், பலிகளை ஏற்பதும், பூசாரியின் ஆணைகளின்படி இயங்குவதும் காவல் தெய்வத்தின் சில பொறுப்புகள் ஆகும். எனவே, பெருந்திருவிழாவின் தொடக்கத்தில் காவல் தெய்வத்தை முதலில் வழிபடுவது அடிப்படைக் கடமையாகின்றது.

ஊரின் காவல் தெய்வமான அம்மச்சியார் கோயில், ஊரின் வடக்கே அமைந்துள்ளது. இதனைக் ''காளி கோயில்'' என்றும் வழங்குகின்றனர். இங்கே, பெருந்திருவிழாவின் முதல் நாள் ''காப்புக் கட்டுதல்'' என்ற முக்கியமான சடங்கு நிறைவேறுகின்றது.

அன்று முதல் தினமும் அம்மனுக்கு எண்ணெய்க் காப்பிட்டு, காலையும் மாலையும் வழிபட்டுச் சுத்த அன்னத்தையும் பாலையும் நிவேதனமாகப் படைக்கின்றனர். அம்மச்சியாருக்கு ஐந்து நாட்கள் பூசை நடைபெறும். காப்புக் கட்டிய பிறகு ஊர் மக்கள் வேற்றூருக்குச் சென்று தங்குவதில்லை.

**அய்யனார் கோயில் வழிபாடு**

அய்யனாரும் மற்றொரு காவல் தெய்வமாவார். இவர் கோயில் திருநெல்வேலிச் சாலையில், சோலையன் குளக்கரையில் அமைந்துள்ளது. முதல்நாள் காப்புக் கட்டுச் சடங்கு இங்கும் முறையாக நடத்தப் பெறுகின்றது.

வழிபாடுகளின்போது அய்யனாருக்கு வெள்ளை நிற வேட்டியும், துண்டும் திருமேனி அம்மனுக்குச் சிவப்பு நிறச் சேலையும் சார்த்துவது மரபு. சுத்த அன்னமும் பாலும் நிவேதனப் பொருள்களாகும்.

காப்புக் கட்டு நாள் முதல் ஐந்து நாள்களுக்குக் காலையும், மாலையும் அய்யனார் கோயில் சிறப்பு வழிபாடுகள் நிறைவேறுகின்றன.

**கொடியேற்றம்**

கோயிலின் முன் விநாயகருக்குரிய பித்தளைக் கவசமுடைய முப்பத்தெட்டடி உயரமான கொடி மரம் உள்ளது. இதில் பெருச்சாளிச் சின்னமுடைய கொடி பங்குனி உத்திரத்தன்று முகூர்த்த நேரத்தில் முறைப்படி ஏற்றப்படுகின்றது.

### விநாயகர் வழிபாடு

கொடியேற்ற நாள் முதல் ஐந்து நாட்கள் விநாயகரை வழிபடுகின்றனர். தினமும், வெள்ளிச் சப்பரத்தில், பெருச்சாளி வாகனத்தில் விநாயகர் பவனியுலா வருகின்றார்.

### முருக வழிபாடு

அடுத்த ஐந்துநாள் வழிபாடு முருகனுக்குரியது. தினமும் இவரும் பவனியுலா வருவது வழக்கமாகும்.

### தேவார மூவர் வழிபாடு

தேவார மூவர் சிறப்பு வழிபாடுகள் மூன்று நாட்கள் நடைபெறுகின்றன. முதல் நாள் திருஞானசம்பந்தரையும், இரண்டாம் நாள் திருநாவுக்கரசரையும், மூன்றாம் நாள் சுந்தரமூர்த்தி சுவாமிகளையும் தனித்தனியே வழிபடுகின்றனர்.

### சந்திரசேகரர் வழிபாடு

''சந்திரன் தட்சன் சாபத்தால் உடல்தேய சிவமூர்த்தியிடம் அபயம் புகுந்த காலத்துச் சிவன், அவனுக்கு அபயம் தந்து தன் திருமுடியில் சந்திரனை அணிந்த திருக்கோலத்தைத்தான் சந்திரசேகரர்'' என்று அழைப்பர்.[23] இத்திருக்கோலம் மகேசுவர வடிவங்கள் இருபத்தைந்தில் ஒன்றாகும்.

சந்திரசேகரரை ஏழுநாட்கள் வழிபடுகின்றனர். ஏழாம் நாள் அவர் ஊருக்குக் கிழக்கேயுள்ள பெருங்கோட்டூருக்கு எழுந்தருளுகின்றார்.

### பிடிமண் எடுத்தல்

'பிடிமண் எடுத்தல்' என்பது பெருந்திருவிழாவுக்குரிய கொடியேற்ற நாளுக்கு முந்திய நாள் நடைபெறுகின்ற ஒரு முக்கியச் சடங்காகும். பிடிமண்ணின் பெருமையை,

''மண்ணும் மணமும் கொண்மின்''

என்று நாலாயிர திவ்வியப் பிரபந்தமும் போற்றுகின்றது.[24] பிடிமண் எடுக்கும் இச்சடங்கு நிகழ்வதற்கான காரணங்களைப் பின்வருமாறு காட்டலாம்.

அ. ஒரு தெய்வத்தை ஓரிடத்திலிருந்து மற்றோர் இடத்தில் அமைத்து வழிபட விரும்புகின்றவர், முந்திய இடத்திலிருந்து பிடி மண்ணை அள்ளி எடுத்து வருவது வழக்கம்.

ஆ. பஞ்சம், பசி, பகை முதலிய காரணங்களால் மக்கள் குடிபெயர வேண்டிய நெருக்கடி ஏற்படுகின்ற போது, அவர்கள் தெய்வ வழிபாடு செய்கின்ற தூய இடத்திலிருந்த பிடி மண்ணைத் தம்மோடு எடுத்துச் செல்கின்றனர். இப்பிடிமண் காப்பாகவும், வேறோரிடத்தில் தெய்வத்தை மீண்டும் நிலை நிறுத்தவும் பயன்படுகின்றது.

இ. பல சாதியினர் ஒரே தெய்வத்தைப் பொதுவாக வழிபடுகின்றனர். பின்னர் கருத்து வேறுபாடுகளால் அவர் பிரிகின்றனர். ஒவ்வொரு சாதியினரும் தாம் வழிபட்ட இடத்திலிருந்து பிடிமண்ணை அள்ளிச் சென்று வெவ்வேறு இடங்களில் தக்க வழிபாடுகளுடன் வைத்துத் தெய்வ வடிவங்களைத் தனித்தனியே உருவாக்குகின்றனர்; வழிபடுகின்றனர்.

ஈ. பிடிமண்ணின் பெருமைகளைப் பற்பல கதைகள் எடுத்துக் காட்டுகின்றன. எனவே, பிடிமண் எடுத்தல் என்ற சடங்கு மிகவும் இன்றியமையாதது ஆகும்.

பெருங்கோட்டூரில், உக்கிர பாண்டியனின் பட்டத்து யானை கோட்டால் குத்திய அதே இடத்தில் பிடி மண்ணை எடுக்கும் சடங்கு நடைபெறுகின்றது. முளைப்பாலிகை அமைக்க இந்த மண்ணைப் பயன்படுத்துகின்றனர்.

**கொடியேற்றம்**

பிடிமண் எடுத்த நாளுக்கு மறுநாள் கொடியேற்றப்படுகின்றது. கொடியில் இடபத்தையும், அஸ்திரத் தேவரையும் வரைந்து, முறைப்படி வழிபாடுகளை நிகழ்த்திக் கொடியேற்றுகின்றனர்.

> **''ஆத்மாக்களையும் தர்மத்தையும் கீழ்நிலையிலிருந்து உயர்நிலைக்குக் கொண்டு செல்லும் இறைவனின் கருணைத்திறம் இவ்விழாவில் விளக்கப்படுகின்றது''**[25]

இடபம் என்பது ஆத்மா, தர்மம் ஆகியவற்றைக் குறிக்கும். அருள் வடிவானவன் இறைவன்; அருள்புரியக் காத்திருக்கின்றான் என்ற குறிப்பைக் கொடியேற்றம் புலப்படுத்துகின்றது. ''கொடிமரம் = பதி; கொடிச் சீலை = பசு; கயிறு = பாசம், பாசங்களால் கட்டுண்ட பசு அந்தப் பாசங்களைப் பற்றுக் கோடாகக் கொண்டு, பாசங்களை நீக்கிப் பக்குவப்பட்டுப் பதியைப் பற்றிக் கொள்கின்றது'' என்பது கொடியேற்றத்தால் உணரப்படுகின்ற தத்துவ உட்பொருளாகும்.

கொடியேற்றம் நடைபெற்ற நாள் இரவில் சங்கரலிங்க சுவாமிகள் தந்தப் பல்லக்கிலும், கோமதியம்பிகை பூம்பல்லக்கிலும் பவனியுலா வருகின்றனர். தொடர்ந்து நாடோறும், காலையிலும், மாலையிலும் இறைவனும் இறைவியும் வெவ்வேறு வாகனங்களில் எழுந்தருளித் தரிசனம் தருகின்றனர்.

இறைவனும் இறைவியும் தம்மை நோக்கிக் கோயிலுக்கு வந்த பக்தர்களுக்கு அருளுகின்றனர். இவ்வாறு எளிதில் வர முடியாத குழந்தைகள், கன்னிகள், ஊனமுற்றவர்கள், தீராப் பிணியுற்றவர்கள், முதியவர்கள், பல காரணங்களால் கோயிலுக்குள் நுழைய முடியாதவர்கள் முதலியவர்களுக்கு அருள்புரிவதற்காக, விதவிதமான திருக்கோலங்களில், வாகனங்களில் தாமே பக்தர்களை நோக்கிப் பவனியுலா வருகின்றனர்.

**எட்டாம் நாள் மும்மூர்த்தி தரிசனம்**

பெருந்திருவிழாவின் எட்டாம் நாள் நடராசருக்கு வழிபாடுகள் நடைபெறுகின்றன.

அதே நாளில், தங்கச் சப்பரத்தில் பிரமனும், வெள்ளிச் சப்பரத்தில் சங்கரனும், நாராயணனும் ஒருங்கே எழுந்தருளுகின்றனர். இப்பவனியுலா தனிப் பெருஞ்சிறப்புடையது. பக்தர்கள் சங்கரன், நாராயணன் என்ற இருமூர்த்திகளையும் மற்றும் பிரமனுடன் மும்மூர்த்திகளையும் ஒருங்கே தரிசித்து மும்மடங்கு பொலிகின்ற அருளைப் பெறுகின்றனர்.

**ஒன்பதாம் நாள் தேர்த் திருவிழா**

ஒன்பதாம் நாள் சித்திரைப் பௌர்ணமியன்று நடைபெறுகின்ற தேர்த் திருவிழாவின் போது சங்கரலிங்கசுவாமியும், கோமதியம்பிகையும் தனித்தனித் தேர்களில் வலம் வருகின்றனர். ஊர் கூடித் தேரிழுக்கின்றது.

சுவாமியின் தேர் தெற்குத் தெருவில் வருகின்ற போது, இறையருளோ என்னவோ காரணம் தெளிவாகப் புலனாகாதபடி அதன் கலசம் பயங்கரமாக ஆடுகின்றது. அது சரிந்து விழுவது விபத்து; அமங்கலம்; எனவே, கோயிலார் அக்கலசத்தை அப்போது அகற்றி விடுகின்றனர். பின்னர் எந்தவிதமான குறையும் குற்றமும் இல்லாமல் தேர் நிலைக்கு வருகின்றது.

**பத்தாம் நாள்**

பெருந்திருவிழாவின் இறுதி நாளான பத்தாம் நாளன்று சுவாமியும், அம்பிகையும் இடப வாகனத்தில் எழுந்தருளி வலம் வருகின்றனர்; பேரருள் தருகின்றனர்.

**கொடியிறக்கம்**

விழாவின் நிறைவாக, முதல்நாள் ஏற்றிய இடபக்கொடி இறக்கப்படுகின்றது. உக்கிரபாண்டியன் காலத்திலிருந்தே சித்திரைப் பெருந்திருவிழா நடைபெற்று வருகிறது என்பதற்கு

> **''தெண்ணிலா வேதியார்க்குச்**
> **சித்திரைத் திங்கடன்னில்**
> **விண்ணவ நிறைஞ்சியேத்த**
> **விழாவினை நடாத்தினானே''**[26]

எனும் இப்பாடல் சான்றாக உள்ளது.

**ஆடித்தவசு பெருந்திருவிழா**

''ஆடித்தவசு'' என்பது திருநெல்வேலி மாவட்டத்தில் மிகச் சிறப்பாக நடைபெறுகின்ற பெருந்திருவிழா ஆகும். இவ்விழா ஆடி மாதம், பௌர்ணமி, பூராட நட்சத்திரத்தில் தொடங்கிப் பன்னிரண்டு நாட்கள் நடைபெறுகின்றது.

உமையம்மை, சங்கரன், நாராயணன் ஆகியோர் இருவரையும் ஒருங்கே காண விழைந்து, தம் விழைவை இறைவனிடம் விண்ணப்பித்தாள். இதனைக் கேட்ட இறைவனும் ''நீ நிலவுலகத்தில் அவதரித்துப் புன்னை வனத்தில் கடுந்தவம் புரிந்தால் இருவர் ''திருக்கோலத்தை ஒருங்கே தரிசிக்கலாம்'' என்று பணித்தான். அவ்வாறே கோமதியம்பிகையாய் அவதரித்த அம்மை கடுந்தவஞ்செய்ய, சங்கரநயினாரும் அம்மையின் திருமுன் சங்கர நாராயணராகத் திருக்காட்சி தந்து, அரியும் சிவனும் இருவரல்லர் ஒருவரே என்பதை உமைக்கும் உலகுக்கும் புலப்படுத்தினார். தான் விரும்பிய திருக்கோலம் இதுவே என்று கோமதியம்பிகையும் மகிழ்ந்தாள். இப்புராண வரலாற்றைப் பின்னணியாகக் கொண்டு, கொண்டாடப் பெறுகின்ற பெருந்திருவிழாவே ''ஆடித்தவசு''.

அம்மை மேற்கொண்ட தவத்தை மையமாகக் கொண்டது ''ஆடித்தவசு''. தவமியற்றிய அம்மைக்கும் ''தவசியம்மன்'' என்ற வேறொரு பெயரும் அமைந்தது.

சங்கரநயினார் கோயிலில் நடைபெறுகின்ற இப்பெருந் திருவிழாக்களில், சித்திரைத் திருவிழாவைத் 'தேர்த்திருவிழா' என்றும், ஆடித்தவசு திருவிழாவைச் 'சப்பரத் திருவிழா' என்றும் சிறப்பிக்கின்றனர்.

**நடைமுறை**

''ஆடித்தவசு'' கொடியேற்றத்துடன் தொடங்கித் தொடர்ந்து ''மண்டகப்படிகளின்'' அடிப்படையில் பன்னிரண்டு நாட்கள் நடைபெறுகின்றது.

**மண்டகப்படிகள்**

ஊரில் சமுதாயத்தினர் பலர் விரவி வாழ்கின்றனர். இவர்கள் தத்தமக்கெனத் தனித்தனியே சில இடங்களைத் தெரிவு செய்து, அங்கெல்லாம் நிலையான மண்டபங்களைக் கட்டி வைத்துள்ளனர். இவற்றிற்கான நிலப்பகுதிகள் சிலவற்றை அரசாங்கம் அளித்துள்ளது.[27]

**''ஆடித்தவசு'' மண்டகப்படிகள்**

மண்டகப்படி நடைபெறுகின்ற திருநாட்கள், வழிபாடுகள் செய்கின்ற சமுதாயத்தினர், அவை நிகழ்கின்ற மண்டபங்களின் இருப்பிடங்களைப் பற்றிய விவரப்பட்டியல் :-

| திருநாள் எண் | சமுதாயத்தினர் | மண்டபங்களின் இருப்பிடங்கள் |
|---|---|---|
| 1 | மறவர் | சங்கரநயினார் கோயில் அண்ணாசாலை அருகில் உள்ளது |
| 2 | யாதவர் | சுவாமி சன்னதியருகில் உள்ளது |
| 3 | 24 கிராமத்தைச் சேர்ந்த இல்லத்துப் பிள்ளைமார் சமுதாயப் பொதுச் சபை | கீழரத வீதியில் உள்ளது |
| 4 | செங்குந்த முதலியார் | கோயில் இருக்கின்ற இந்தியன் வங்கிச் சாலையில் உள்ளது. |
| 5 | சலவைத் தொழிலாளர் | அரசு மருத்துவமனையருகில் உள்ளது |
| 6 | மறவர் சமுதாயத்தைச் சார்ந்த நான்கு குடும்பங்கள் | கோயிலின் கல்யாண மண்டபத்தின் கீழ்ப்புறத்தில் உள்ளது. |

| | | |
|---|---|---|
| 7. | சேனைத் தலைவர் | வடக்கு ரத வீதியில் உள்ளது |
| 8 | சங்கர நயினார் கோயில் நகர மருத்துவர் சவரத் தொழிலாளிகள் | வடக்கு ரத வீதியில் உள்ளது |
| 9 | 24 கிராமத்துத் தெலுங்குச் செட்டியார்கள் | பேருந்து நிலையத்தின் வடபுறத்தில் உள்ளது |
| 10 | வணிக வைசியர் | கீழரத வீதியில் உள்ளது |

கொடியேற்றியபின் ஒவ்வொரு நாளும் சுவாமிக்கும், அம்பிகைக்கும் சிறப்பு வழிபாடுகள் நடைபெறுகின்றன. அவர்கள் வெவ்வேறு வாகனங்களில் வலம் வருகின்றனர். தேவையான, போதுமான வாகனங்கள் அனைத்தும் கோயிலில் உள்ளன. ஒவ்வொரு நாளும் குறிப்பிட்ட மண்டபங்களில் அவர்களை எழுந்தருளச் செய்து, அந்தந்த நாட்களுக்குரிய சமுதாயத்தினர் செய்ய வேண்டிய வழிபாடுகளைச் செய்கின்றனர்.

**வாகனங்களும், ஐந்தொழில்களும்**

சிவனது ஐந்தொழில்களை உணர்த்தும் போக்கில் திருவிழாக்களின் நடைமுறைகள் விளங்குகின்றன. அந்த ஐந்து தொழில்களை வாகனங்களும் குறிப்பாகப் புலப்படுத்துகின்றன.

திருவிழா பத்து நாட்கள் நடைபெறுகின்ற போது முதல் ஐந்து நாட்கள் விருத்திக்கிரம ஐந்தொழில்களையும், அடுத்த ஐந்து நாட்கள் லயக்கிரம ஐந்தொழில்களையும் வாகனங்கள் உணர்த்துகின்றன என்பர்.[28] சில காட்டுகள் :-

| | **வாகனம்** | | **விருத்திக்கிரம ஐந்தொழில்கள்** |
|---|---|---|---|
| 1. | கற்பக மரம் | - | படைத்தல் |
| 2. | சூரிய பிரபை } சந்திர பிரபை | - | காத்தல் |

3. அதிகார நந்தி - அழித்தல்

4. நாகம் - மறைத்தல்

5. இடபம் - அருளல்

மற்ற ஐந்து நாட்களுக்குரிய வாகனங்கள், லயக்கிரம ஐந்தொழில்களைத் தெரிவிக்கின்றன.

**பத்தாம் நாள்**

தவசு விழாவின் பத்தாம் நாளன்று முளைப்பாலிகை ஏந்துகின்றனர்.

**பதினோராம் நாள்**

பதினோராம் நாளன்று, அம்பிகை தெற்கு ரத வீதியிலுள்ள ''தவசு மண்டபத்தில்'' திருத்தவக்கோலத்தில் எழுந்தருளுகின்றாள். வழிபாட்டின்போது சிறுபருப்பும், பானகமும் படைக்கப்படுகின்றன.

திருக்கோயிலில் சுவாமிக்கும், அம்பிகைக்கும் அபிடேகங்களும், வழிபாடுகளும் சிறப்பாக நிகழ்கின்றன. அம்பிகை, சங்கர நாராயணர் திருக்கோலத்தைக் காணக் கடுந்தவம் புரிந்தாள். அவள் அத்திருக்கோலத்தைத் தரிசிக்க வேண்டும் என்பதற்காக அவளுக்கோர் 'அழைப்புச் சுருள்' வருகின்றது; உடனே அவள் ஆவலோடும், ஆர்வத்தோடும் காத்திருக்கின்றாள்.

மாலையில், அம்பிகையின் முன் சுவாமிகள் முதலில் சங்கர நாராயணராகவும், இரவு பன்னிரண்டு மணிக்குச் சங்கரலிங்க சுவாமியாகவும் திருக்காட்சி அருளுகின்றார். அப்போது அபிடேகம், அலங்காரம், பரிவட்டம் சார்த்தல் முதலியன நடைபெறுகின்றன. தவசு விழாவின் உயிர்நாடியான உச்சநிலைத் திருக்காட்சி இதுவே.

தவசு விழாவைக் காண மக்கள் கூட்டம் வெள்ளமாய் - கடலாய்த் திரள்வது வழக்கம். 1981ஆம் ஆண்டு வரலாறு காணாத மக்கள் கூட்டம் நிரம்பித் திரண்டதாக நாளிதழ் ஒன்று குறிப்பிட்டுள்ளது.[29]

**பன்னிரண்டாம் நாள்**

இந்நாளில் சுவாமியும், அம்பாளும் பட்டிணப்பிரவேசம் செல்லும் நிகழ்ச்சி நடைபெறும்.

**கலை நிகழ்ச்சிகள்**

தவசு விழாவின் போது ஒவ்வொரு நாளும் இசை, நாட்டியம், கூத்து, நாடகம் முதலிய கலைநிகழ்ச்சிகள் நடைபெறுகின்றன. இவற்றையும் 'மண்டகப்படி சமுதாயத்தினரே' நிகழ்த்துகின்றனர்.[30]

**உபயதாரர்**

தவசு விழாவின் ஒவ்வொரு நாளும் ஆகின்ற செலவுகள் அனைத்தையும், அந்தந்த நாட்களில் விழாவினை நடத்துகின்ற மண்டகப்படி சமுதாயத்தினர் ஏற்கின்றனர்.

**அம்பாசமுத்திரம்**

'தவசுக் காட்சி' அம்பாசமுத்திரத்திலும் நடைபெறுகின்றது. அங்கே தவசு காட்சியும், திருக்கல்யாணமும் ஒரே நாளில் நிகழ்கின்றன. ஆனால், சங்கரநயினார் கோயிலில் ''தவசுக் காட்சி'' ஆடிமாதமும், ''திருக்கல்யாணம்'' ஐப்பசி மாதமும் நடைபெறுகின்றன.

தவசு விழாவைப் பற்றிய முக்கியக் குறிப்புகள் சில இங்குக் குறிக்கத் தக்கன.

1. ஊரில் வாழ்கின்ற அனைத்துச் சமுதாயத்தினரும் தவசு விழாவில் பங்கேற்கின்றனர். எனவே, சமுதாயத்தினரிடையே ஒற்றுமையும், ஒருமைப்பாடும் நிலைத்து நிலவுகின்றன.

2. குறிப்பிட்ட சமுதாயத்தினர் முந்திய ஆண்டை விட இந்த ஆண்டில் மேலும் சிறப்பாகத் திருவிழாவைக் கொண்டாட வேண்டும் என்று ஆர்வத்துடன் முயல்கின்றனர்.

மற்றும், வேறு சமுதாயத்தினர் கொண்டாடுகின்ற மண்டகப்படி திருவிழாவைவிடத் தாம் கொண்டாடுகின்ற திருவிழாவே மேன்மையடைய வேண்டும் என்று ஒவ்வொரு சமுதாயத்தினரும் போட்டி மனப்பான்மையுடன் திருவிழாவைக் கொண்டாட முனைகின்றனர். ஆகவே, ஒவ்வொரு நாள் திருவிழாவையும் உச்சிநிலைப் பொலிவுடன் நிகழ்த்துகின்றனர்.

3. சமுதாயத்தின் மையமாகக் கோயில் விளங்குகின்றது என்பதற்கு தவசு விழா சிறந்த சான்றாக விளங்குகின்றது.

**ஊஞ்சல் திருவிழா**

ஆடித்தபசு விழா நடைபெற்று முடிந்த பின்னர் ஊஞ்சல் திருவிழா மூன்று நாட்கள் நிகழ்கின்றது.

ஊஞ்சலின் கயிறுகள் = பாசங்கள்; ஊஞ்சல் பலகை - பாசங்களைப் பற்றிய பசு; பக்குவப்பட்ட பசு, பதியை ஏந்தி, மகிழ்ச்சியுடன் அசைந்தாடுகின்ற தகுதியைப் பெறுகின்றது. இந்த உயர்ந்த தகுதியைப் பெறப் பசுக்கள் முயல வேண்டும் என்ற கருத்தை ஊஞ்சல் திருவிழா உணர்த்துகின்றது.

**காணிக்கைப் பொருள்கள்**

மக்கள் பற்பல பொருள்களைப் பற்பல முறைகளில் சங்கரநயினார் கோயிலுக்குக் காணிக்கையாகச் செலுத்துகின்றனர். அவ்வாறு அவர்கள் செலுத்தும் முறைகள் வருமாறு :

## உண்டியல்

பணத்தையும், நகைவகைகளையும் உண்டியலில் செலுத்துகின்றனர். சிலருக்குக் கண், கை, கால் முதலிய உறுப்புகளில் நோய்கள் வந்து, அவை இறையருளால் குணமானால், பிரார்த்தனைக் கடன் முடிக்க அவர்கள் பொன், வெள்ளிக், செம்புத் தகடுகளால் செய்த உறுப்புகளை உண்டியலில் சேர்க்கின்றனர்.

## பணவிடைகள்

தூரத்து நாடுகளில் வாழ்கின்றவர்கள், கோயிலுக்கு வர முடியாதவர்கள் முதலியோர் அஞ்சல் பணவிடை மூலம் கோயிலுக்குப் பணம் அனுப்புகின்றனர். பணவிடை வரவுகளைப்பதிவு செய்வதற்கென்றே தனி எழுத்தர் பணிபுரிகின்றார். பணம் அனுப்பியவர்களுக்குத் திருநீறு, குங்குமம், மஞ்சள், புற்றுமண் ஆகிய பிரசாதங்களைக் கோயிலார் அஞ்சலில் அனுப்புகின்றனர்.

## விளைபொருட்கள்

பயிர் வகைகளை அறுவடை செய்தவுடன், அவற்றில் ஒரு பங்கினைக் கோயிலுக்கென ஒதுக்கிப் பாதுகாப்பாக வைத்திருக்கின்றனர். தவசு விழாவின்போது அவற்றைக் காணிக்கையாக அளிக்கின்றனர். இதனால் நிலங்களின் விளைச்சல் ஒவ்வோர் ஆண்டும் கூடுதலாகின்றது என்று நம்புகின்றனர்.

கோமதியின் அருளால் பூக்காத மரங்கள் பூக்கும், காய்க்காத மரங்கள் காய்க்கும், விளையாத நிலங்கள் விளையும், விளைகின்ற நிலங்கள் மேன்மேலும் செழிப்புடன் விளையும் என நம்பும் உழவர்கள் அம்பிகைக்குக் காணிக்கைப் பொருள்களைத் தருவதற்குத் தவறுவதில்லை.

> ''பூக்காத மரம் பூத்ததோ
> பூவுல வண்டு விழுகாதோ
> பூக்க வைக்கும் கோமதிக்குப்
> பூவால சப்பர சோடணையாம்

காய்க்காத மரம் காய்க்காதோ
காயிலே வண்டு விழுகாதோ
காய் காய்க்க வைக்கும் கோமதிக்கு
காயால சப்பர சோடணையாம்''[31]

**துலாபாரம்**

''இது நடைபெற வேண்டும்'' என்று பிரார்த்தனை செய்து நேர்ந்து கொண்டவர்கள், ''அது நிறைவேறியவுடன்'', தம் உடலின் எடைக்கு நிகராக ஏதேனும் ஒரு பொருளைக் கோயிலுக்கு வழங்குவது ''துலாபாரக் காணிக்கை''யாகும்.

எல்லாக் காலங்களிலும், சிறப்பாகத் தவசு விழாவின் போதும், அரிசி, தானியங்கள், வெல்லம், பழ வகைகள், காசுகள் முதலியவற்றில் ஏதேனும் ஒன்றைச் சிலர் துலாபாரக் காணிக்கையாகக் கோயிலுக்கு அளிக்கின்றனர்.

**அன்னதானம்**

வயிற்றுவலி போன்ற நோயிலிருந்து விடுபட ஏழைகளுக்கு அன்னதானம் வழங்குவர். சிலர் குறிப்பிட்ட எண்ணிக்கையுடைய துறவிகளுக்கு இலையிட்டு அரிசி, காய்கறி முதலியவற்றைப் படைப்பர். சிறு குழந்தைகளுக்கும் அன்னதானம் செய்கின்றனர். இவ்வாறு மக்கள் அன்னதானம் செய்து, தங்களுடைய நேர்த்திக்கடனை நிறைவேற்றுகின்றனர்.

**மாவிளக்கு**

தேனுடன் தினை மாவு அல்லது பச்சரிசி மாவு, வெல்லம் ஆகியவற்றைக் கலந்து, நன்றாகப் பிசைந்து, சிறு சிறு உருண்டைகளாக்கி, அவற்றில் அளவான குழிகளை அழகாக அமைத்து, அக்குழிகளில் நெய்வார்த்துத் திரியிட்டு ஏற்றுவது ''மாவிளக்கு'' ஆகும்.

தவசுத் திருவிழாவின்போது சுவாமி சன்னதித் தெருவிலும், அம்மன் சன்னிதித் தெருவிலும் அதிக எண்ணிக்கையில் மாவிளக்கு எடுக்கின்றனர். விழாக் காலங்களில் கோயிலின் எல்லா இடங்களிலும் மாவிளக்கு எடுக்கும் பழக்கம் மக்களிடையே இருந்துவருகின்றது.

சிலர், ஏதேனும் தம் உறுப்பில் நோய் படர்ந்திருந்தால், அப்பகுதியின் மீது ஓர் இலையுடன் கூடிய மாவிளக்கை வைத்தபடி அந்நோயைத் தணித்து அறவே அகற்றுமாறு அம்பிகையை வேண்டுகின்றனர். அம்மன் அருளால் உடலை விடாமல் பிணித்த பிணி தளர்கின்றது; நோய் அகலுகின்றது என்று நம்புகின்றனர்.

### மகப்பேறு

மகப்பேறு இல்லாதவர் அம்பிகையை வேண்டி, விரதங்காத்து நேர்ந்து கொண்டால், அவர்களுக்கு மகப்பேறு கிடைக்கும் என நம்புகின்றனர். குழந்தையின் நேர்த்திக்கடன் கழிக்கின்றனர்.

> **''கொடி மரத்தைத் தொட்டாலே**
> **கோமதி குழந்தை வரம் தருவாளே''**[32]

என்பது மக்களின் அசைக்க முடியாத நம்பிக்கையாகும்.

> **''கடும் விரதங்காத்தால், உடலில் சில மாற்றங்கள் ஏற்படுகின்றன. எனவே, மலட்டுத்தன்மை நீங்கி மகப்பேறு கிடைக்கின்ற வாய்ப்பும் மிகுதியாகிறது என்பதை அறிவியலும் ஒப்புக்கொள்கின்றது.''**[33]

### சூறையிடுதல்

விநாயகரைச் சிறப்பாக வழிபடத் தேங்காயைச் சூறையிடுகின்றனர். இத்தகைய வழிபாடு விநாயகருக்கேயுரியது.

ஆனால், வணிகம் சிறப்பாக நடைபெற வேண்டும் என்பதற்காக வணிகரும், நிலம் செழிப்பாக வளர வேண்டும் என்பதற்காக உழவரும், பிறரும், திரளான மக்கள் ஏற்றுக் கொள்வதற்காகக் காய்கறிகள், பழ வகைகள், மிளகாய் வற்றல், பலகார

வகைகள் முதலிய பல பொருள்களைத் தவசு விழாவின்போது சூறையிடுகின்றனர். சூறையிடுதல் என்ற காணிக்கை முறை ஒரு வகைத் தருமம்; இத்தருமம் இறைவருக்கு மறைமுகமாகச் செலுத்துகின்ற காணிக்கை என்பதில் ஐயமில்லை.

### உயிரினங்களைத் தருதல்

மக்கள் பசு, காளை முதலிய கால்நடைகளையும், கோழி, சேவல் முதலிய பறவைகளையும் பாதுகாத்து வளர்க்கின்றனர். அந்த உயிரினங்கள் நோய்களின்றி வாழ்ந்து வளரவும், இனம் பெருகவும் உயிரினங்களைக் கோயிலுக்குக் காணிக்கையாகத் தருகின்றனர். சிலர் அவற்றை விற்றுப் பணமாக்கி, அதை உண்டியலில் செலுத்துவதும் உண்டு.

காணிக்கைகளைச் செலுத்து முறைகளில் ஒன்றோ, சிலவோ பிற கோயில்களின் வழக்காற்றில் இருந்தாலும், சங்கரநயினார் கோயிலில் மேற்கண்ட காணிக்கை செலுத்து முறைகள் அனைத்தும், இவை போன்ற பிறவும், வழக்காற்றில் இருப்பது மற்றொரு தனிச் சிறப்பாகும்.

### தவசு விழாவுடன் தொடர்புடைய நம்பிக்கைகள்

தவசு விழா மக்களுடன் ஒன்றிய தொடர்புடையது. அந்த விழாவுடன் சார்புடைய நம்பிக்கைகள் வருமாறு:

1. தவசு நாளன்று கோமதியம்பிகை, தெற்கு ரத வீதியிலுள்ள தபசு மண்டபத்தில் எழுந்தருளியிருக்க சங்கர நயினார், சங்கர நாராயண ராகத் திருக்காட்சி தருகின்ற நேரத்தில், கருடன் தரிசனம் தந்து, சப்பரத்தை மும்முறை வலம் வந்தால் ஊரில் தேவையான அளவு மழை பொழியும் என்றும், ஊர் மக்கள் பல வளப்பங்களுடன் வாழ்வார்கள் என்றும் நம்புகின்றனர்.

2. கன்னிகள் தவசு விழாவில் பங்கேற்று அம்பிகையிடம் பணிந்து வேண்டினால் அவர்களுக்கு விரைவில் திருமணம் நிறைவேறுகிறது என்பது மற்றொரு நம்பிக்கையாகும்.

3. தவசு விழாவைக்காண வருகின்ற மக்கள் பாத்திரங்களைக் குறிப்பாகச் சமையற் பாத்திரங்களை வாங்குவது வழக்கம், இவ்வாறு வாங்கினால் நல்லது என்றும், நற்பலன்கள் விளைகின்றன என்றும் நம்புகின்றனர்.

4. தவசு விழா நிறைவுற்ற மறுநாள் சுவாமியும், அம்பிகையும் பட்டணப் பிரவேசம் செய்கின்றனர். அன்றைய நாளில் விளைபொருட்கள். மண்பாண்டங்கள். ஓலைப் பெட்டிகள் முதலியவற்றை விலைக்குக் கொடுப்பதும் கொள்வதும் சிறப்பு என்று நம்புகின்றனர். அன்றைய நாளில் வாங்குகின்ற ஓலைப்பெட்டிகள் வீட்டில் இருப்பது மிகவும் நல்லது என்று ஊர்ப்பெரியவர்கள் கூறுகின்றனர்.

5. உழவர்கள் ஆடி மாத விதைப்புக்குத் தேவையான விதைகளைத் தவசு நாளன்று வாங்குகின்றனர். இப்படி வாங்கி விதைத்தால், விளைச்சல் பெருகும் என்பது மற்றொரு நம்பிக்கையாகும்.

**தவசு விழாவில் அரசின் பங்கு**

தவசு விழாவைக்காணப் பெருந்திரளான மக்கள் கூடுகின்றனர். இவர்களுக்குத் தேவையான அடிப்படை வசதிகளை அரசு செய்கின்றது. தெருக்களைத் தூய்மைப்படுத்தல், சுண்ணாம்பு தெளித்தல், தண்ணீர்ப் பந்தல்களை அமைத்தல், காவல், போக்குவரத்து வசதி, நிகழ்ச்சிகளை ஒலி பரப்புதல், ஒளி பரப்புதல் முதலியவற்றைச் செய்கின்றது.

மற்றும். தனியார் தொலைக் காட்சியினரும், பத்திரிகை நிருபர்களும் பிறரும் தவசு விழாவில் கூடுகின்றனர். தவசு விழாவைப் பற்றி உலக மக்கள் அறிந்து வியக்குமாறு செய்திகளைப் பரப்பிப் பல உதவிகளைச் செய்கின்றனர்.

**குடமுழுக்குப் பெருவிழா**

திருவிழாக்களின் மணிமுடியாய்க் குடமுழுக்குப் பெருவிழா விளங்குகின்றது. இதனைக் கும்பாபிடேகம் என்றும், குட நீராட்டு என்றும் வழங்குவர். குட முழுக்கின் வகைகள் சிலவற்றில் இரண்டு சிறப்பானவை.

(1) புதுக்கோயிலைக் கட்டியவுடன் செய்கின்ற குடமுழுக்கு.

(2) பழைய கோயிலைப் புதுப்பிக்கின்றபோது நிகழ்கின்ற குடமுழுக்கு. இது பன்னிரண்டு ஆண்டுகளுக்கு ஒரு முறை நடைபெற வேண்டும் என்பது விதிமுறையாகும். திருமேனிகளை ''அட்டபந்தனம்'' செய்து குட நீராட்டு நிகழ்த்த வேண்டும்.

## அட்ட பந்தனம்

பீடங்களுடன் திருமேனிகளை அழுத்தமாக ஒட்ட வைக்கப் பயன்படுகின்ற கலவை அட்ட பந்தனம் எனப்படும். இதில் 1. கொம்பரக்கு, 2. சுக்கான் தூள், 3. குங்குலியம், 4. கற்காவி, 5. செம்பஞ்சு, 6.சாதிலிங்கம், 7.தேன்மெழுகு, 8. எருமைப்பாலில் திரட்டிய வெண்ணெய் ஆகிய எட்டுப்பொருள்கள் கலந்துள்ளன. இப்பந்தனம் அபிடேக நீரில் கரைந்து ஒரு மருந்தாகவும் அமைகின்றது, இது பல பிணிகளைத் தணிக்க வல்லது.

## தீர்த்தங்கள்

ஆறுகள் தோன்றுகின்ற மூலப்பகுதிகளிலும், கங்கை, காவிரி முதலிய புனிதமான ஆறுகளிலும் முகந்த தீர்த்தங்களைத் தூய குடங்களில் நிரப்புகின்றனர். அவற்றை யாக சாலைகளில் அடுக்குகின்றனர். யாகம் வளர்த்து வேத யாக மந்திரங்களை ஓதுகின்றனர். மந்திர ஆற்றல்களைத் தீர்த்தங்கள் ஈர்க்கின்ற பேராற்றலுடையன. ஆகவே, இவை தாமும் புனிதமாகின்றன.

சிறந்த முகூர்த்த நாளில் குடமுழுக்குப் பெருவிழா நடைபெறுகின்றது. அட்ட பந்தனம் செய்யப்பட்ட திருமேனிகளின் மீதும், விமானக் கலசங்களின் மீதும். கோபுரக்கலசங்களின் மீதும் புனித தீர்த்தங்களை வார்த்து அபிடேகம் செய்கின்றனர்.

சங்கரநயினார் கோயிலில், கடந்த இருபதாம் நூற்றாண்டில் குடமுழுக்குப் பெருவிழா விழாக் குழுவினரால் ஆரம்பிக்கப்பட்டது. குடமுழுக்கு நடைபெற்ற நாட்கள் வருமாறு: 1934 ஆம் ஆண்டு குடமுழுக்குத் திருவிழா நடைபெற்றது. பின்னர் பனிரெண்டு ஆண்டுகளுக்கு ஒருமுறை குடமுழுக்குத் தவறாமல் இக்கோயிலில் நடைபெற்று வருகின்றது.

குடமுழுக்கு பல முறைகள் நிகழ்வதால் கோயில்கள் பழுதுபார்க்கப்பட்டுப் புதிய கட்டமைப்புடனும், வண்ணப் பொலிவுகளுடனும் திகழ்கின்றன எனலாம்

# தொகுப்புரை

1. தேர்ந்த சில சடங்குகளின் தொகுதிகளே திருவிழாக்களாக அமைகின்றன. இவை காலத்தைக் கணிக்க முடியாத பழமை கொண்டவை.

2. திருவிழாக்கள் மரபுவழிப்படி தொடர்ந்தும், பல நூற்றாண்டுகளைக் கடந்தும், இப்போதும் நடைபெறுகின்றன.

2. கார்த்திகை விளக்கீடு, இந்திரவிழா, திருவாதிரைத்திருவிழா முதலியன இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு மேற்பட்ட பழமையுடைய திருவிழாக்களாகும்.

4. திருவிழாக்கள் பழங்காலத்தில் சமயச்சார்புடையன அல்ல; ஏறக்குறைய முதல் நூற்றாண்டுக்குப் பிறகு அவை சமயச் சார்புடையனவாக மாறின.

5. மக்கள் ஓய்வாகவும், மகிழ்ச்சியாகவும், செல்வச் செழிப்புடனும் வாழ்கின்ற காலச்சூழ்நிலைகளில் விழாக்கள் நடைபெறுவது வழக்கம்.

6. மக்களிடையே நாகரிகம், பண்பாடு, மொழி, சமயம் முதலியன மெல்லக்கலப்பதற்குத் திருவிழாக்கள் முக்கியக் காரணங்கள் ஆகும்.

7. சங்கரநயினார் கோயிலில் பஞ்ச பருவ வழிபாடுகளும் சிறப்பாக, நிறைவாக நடைபெறுகின்றன.

8. கோயிலில், ஆறு சமயத் தெய்வ வழிபாடுகளில் சிவ வழிபாடு முதன்மையானது. இந்த வழிபாட்டுக்கு நிகராக மற்ற ஐந்து சமயத் தெய்வங்களையும் போற்றி வழிபடுகின்றனர்.

9. இந்துமதக் கோயில்கள் பலவற்றில் அறு சமயத் தெய்வ வழிபாடுகள் நிறைவாக நிகழ்கின்றன.

10. அறு சமயத் தெய்வ வழிபாடுகளைத் தவிர வேறு சில வழிபாடுகள் வருமாறு:

1. சங்கர நாராயணர் வழிபாடு

2. மும்மூர்த்தி வழிபாடு
3. சமய குரவர் நால்வர் வழிபாடு
4. நாயன்மார் வழிபாடு
5. காவல் தெய்வங்கள் முதலிய சிறு தெய்வ வழிபாடுகள்
6. விளக்கு வழிபாடு
7. நவ. கிரக வழிபாடு

10. பௌர்ணமி நாட்களில் திருவிழாக்கள் நடைபெறுகின்றன; அல்லது பிரம்மோற்சவங்கள் தொடங்குகின்றன. இப்பழைய மரபை இப்போதும் எல்லாக் கோயில்களும் வழுவாமல் பின்பற்றுகின்றன.

11. கார்த்திகை விளக்கீடு, நவராத்திரி, தீபாவளி முதலியன கோயிலுக்குள்ளே நடைபெறுகின்றன. இவற்றைக் காண உள்ளூர் மக்கள் திரளாகப் பங்கேற்கின்றனர்.

12. கோயிலின் அகத்தும், புறத்தும் நடைபெறுகின்ற சித்திரைப் பெருந்திரு விழாவிலும், ஆடித்தவசு விழாவிலும் உள்ளூர் வெளியூர் மிகப்பெருந்திரளான மக்கள் கூடி வழிபடுகின்றனர்.

13. பொதுவாக எல்லாக் கோயில்களிலும் நடைபெறுவதைப் போல இக்கோயிலிலும் பெருந்திருவிழா நடைபெறுகின்றது.

14. ஆனால் ஆடித்தவசு விழா சிறப்பாக ஒரு புராண வரலாற்றுப் பின்னணியோடு நிகழ்கின்றது. அரிய நுட்பமான கருத்துகளை மக்கள் எளிதில் புரிந்து கொள்ளும்படி ஆடித்தவசு விழாவின் நடைமுறைகள் உள்ளன.

15. தெய்வ வடிவங்கள், வழிபாடுகள், திருவிழாக்களின் மூலமாக ''அரியும் சிவனும் ஒண்ணு'' என்ற கருத்து ஆழமாகவும், அழுத்தமாகவும் நிலைநாட்டப் பெறுகின்றது.

16. பக்தர்கள் கோயிலுக்குச் செலுத்துகின்ற காணிக்கை முறைகள் பலவாகும். 'சூறையிடுதல்' என்ற காணிக்கை முறை இக்கோயிலின் ஒரு சிறப்பம்சம்.

16. ஆடித்தவசு விழாவுடன் தொடர்புடைய நம்பிக்கைகள் பல உள்ளன. காணிக்கைகள் பல உள்ளன. காணிக்கைகளும், நம்பிக்கைகளும், தமிழர் வாழ்க்கையுடன் திருவிழாக்கள் நெருங்கிய தொடர்புடையன என்பதற்குச் சான்றுகளாக அமைகின்றன.

# அடிக்குறிப்புகள்

1. சிறுபாண்., 201.
2. மதுரைக்காஞ்சி, 366.
3. கலைக்களஞ்சியம், தொகுதி 9, ப 419.
4. தட்சிணாமூர்த்தி, அ., தமிழர் நாகரிகமும் பண்பாடும், ப.307.
5. குறள் 18.
6. அகம். 185: 10-11.
7. சிலம்பு : இந்திரவிழவூரெடுத்த காதை, மணிமேகலை 1: 4345; 25:197200.
8. மதுரைக்காஞ்சி , 590-591.
9. அகம். 368 :18.
10. திருஞான சம்பந்தர், தேவாரம், மயிலாப்பூர் பூம்பாவைப்பதிகம்.
11. பட்டினப்பாலை, 93.
12. கோமதியம்மாள், களப்பாகுளம், சங்கரன் கோயில் - கூறிய பாடற்பகுதி. நாள் : 15.5.1999.
13. கருப்பாயம்மாள், செந்தட்டியார்புரம், சங்கரன் கோயில் - கூறிய பாடற்பகுதி. நாள் 4.3.2002.
14. தொல். புறத்திணையியல் 35. நச்சினார்க்கினியர் உரை.
15. அகம் 141 : 8-10; 185:1011.
16. திருஞான சம்பந்தர், தேவாரம், மயிலாப்பூர், பூம்பாவைப் பதிகம், பாடல் 3.
17. பகவத் கீதை, அத்தியாயம் 10:35.

18. பரிபாடல் 11:7778.

19. பரிபாடல் 22:7778.

20. சுப்பம்மாள், ஆவுடையாள்புரம், சங்கரன் கோயில் - கூறிய பாடற்பகுதி நாள் 5.5.99.

21. திருஞானசம்பந்தர் தேவாரம், மயிலாப்பூர், பூம்பாவைப்பதிகம், பாடல் 7.

22. கம்பர், கம்பராமாயணம், பாலகாண்டம், கடிமணப்படலம், பாடல் 99.

23. அபிதான சிந்தாமணி ப,576.

24. நாலாயிரத்திவ்யப்பிரபந்தம், காப்புப் பாடல் 3.

25. ஆறுமுக நாவலர், கே., இந்து மத இணைப்பு விளக்கம், ப.146.

26. முத்து வீரக்கவிராயர், சங்கர நாராயண சுவாமி கோயிற்புராணம், உக்கிரன் வழிபாட்டுச் சருக்கம் பாடல் 33.

27. சங்கரன் கோயில் வட்டாட்சியர் - நேர்முகத்தில் கூறியது.

28. செந்துறைமுத்து, புலவர், திருக்கோயில்களும் வழிபாட்டு முறைகளும், ப.78-85.

29. தினமலர், நெல்லைப் பதிப்பு, நாள் 17.3.81, ப.6.

30. தவசுவிழா நாட்களில் நடைபெற்ற கலை நிகழ்ச்சிகள் பலவற்றை ஆய்வாளரும் கண்டிருக்கிறார்.

31. குருவம்மாள், கோதை நாச்சியார்புரம், சங்கரன்கோயில் - கூறிய பாடற்பகுதி, நாள் 5.5.99.

32. அன்னம்மாள், கூறியபாடற்பகுதி, நாள் 10.2.98.

33. சத்தியசீலன், சி., நாட்டுப்புறவியல் ஆய்வுக்கோவை, 2; ப.617-618.

# இயல்நான்கு

## சங்கர நயினார் கோயில் சார்ந்த இலக்கியங்கள்

சங்கரநயினார் கோயில் தொடர்புடைய இலக்கியங்கள் பற்றிய விவரங்களைத் தொகுத்துத் தருவதாக இவ்வியல் அமைகின்றது.

தமிழில் திருத்தலச் சார்புடைய தல புராணங்களும், சிற்றிலக்கியங்களும் மிகுதியாக உள்ளன. இவை வெறும் புனைந்துரைகளின் பழைய புனைகதைகளின் தொகுதிகள் மட்டுமின்றி அவற்றை அடிப்படையாக அமைத்துப் பற்பல நுண்கருத்துக்களைப் புலப்படுத்துகின்ற ஊற்றுக் கண்களாகவும் திகழ்கின்றன. தமிழ் நாட்டுத் திருத்தலங்கள் பாடல் பெற்ற தலமாகவும், வைப்புத் தலமாகவும் உள்ளன. இவை இரண்டிலும் இடம் பெறாத தலமாக சங்கர நயினார் கோயில் அமைந்துள்ளது.

சங்கர நாராயண சுவாமி கோயிற்புராணம், சங்கரலிங்க உலா, சங்கரநயினார் கோயில் அந்தாதி, கோமதி அந்தாதி, கோமதியம்பிகை பிள்ளைத் தமிழ், கோமதி மகிமை, கோமதி சதரத்னமாலை, சங்கர சதாசிவ மாலை, நாட்டுப்புறப் பாடல்கள் ஆகிய இலக்கியங்கள் இவ்வியலில் ஆய்விற்கு உட்படுத்தப்படுகின்றன.

### தலபுராணம் - சங்கர நாராயணசுவாமி கோயிற்புராணம்

தலபுராணங்கள் திருத்தலத்தின் சிறப்புகளையும், மூர்த்தியின் மேன்மைகளையும், தீர்த்தத்தின் மகிமைகளையும் கற்பனை வளத்துடன் விவரிக்கின்றன. சுருங்கக் கூறினால் தலபுராணம் என்பது பழங்கதை, சமயக் கொள்கை, வேதக்கருத்துக்கள், தத்துவம், நீதி, வரலாறு, வருணனை, அற, மறச் செயல்கள் போன்றவற்றை ஒரே தொகுப்பாகக் கொண்ட களஞ்சிய நூலாக விளங்குகின்றது.

சீவலமாற பாண்டியனார் இயற்றியது சங்கரநாராயண சுவாமி கோயிற் புராணம். நூலாசிரியர் பாண்டிய மரபைச் சார்ந்தவர் என்பது மட்டும் தெரிகிறது. இவரது வரலாற்றைப் பற்றி அறிய முடியவில்லை; இவரது காலத்தைத் துல்லியமாகக் கணிக்க அகச்சான்றோ, புறச்சான்றோ கிடைக்கவில்லை. சங்கரநாராயண சுவாமி கோயிற்புராணத்திற்கு அரும்பதவுரையையும், சுருக்க வசனத்தையும் இயற்றியவர் சேற்றூர் மு.ரா. அருணாசலக் கவிராயர் அவர்கள் முதன் முதலாகப் பதிப்பித்த ஆண்டு 1901. சங்கரநயினார் கோயில் தல புராணத்தின் முற்பகுதியையும், வேறு சில பாடல்களையும் முத்துவீரக் கவிராயர் இயற்றி அப்புராணத்துள் சேர்த்தனர் என்பர்.[1]

**''இவ்வாசிரியரால் (முத்துவீரக் கவிராயரால்) சீவலமாற பாண்டியரியற்றிய சங்கரநயினார் கோயில் புராணத்துள் நதிச்சருக்கம் முதல் மூர்த்தி விசேடச் சருக்கம் முடிய ஆறு சருக்கங்களும் கடவுள் வாழ்த்துள் மூன்று பாடல்களும் புராண வரலாற்றுள் இரண்டு பாடல்களும் பாடிச் சேர்க்கப்பெற்றன எனத் தெரியவருகின்றது''.**

சங்கர நாராயணர் கோயிற்புராணத்தில் 13 சருக்கங்களும் 506 பாடல்களும் இருக்கின்றன. அச்சருக்கங்களின் சுருக்கங்கள் வருமாறு:

## திருநதிச் சருக்கம்

கூழையாற்றின் சிறப்பினையும், அதன் கரைகளில் அமைந்த வளப்பங்களையும் இது எடுத்துரைக்கின்றது.

**''பின்றை யவ்வர னருளெனப் பெருகிமே லுயர்ந்து**
**சென்று கூழையா றெனுந்திருப் பெயர்சிறந் தனவே''[2]**

## திருநாட்டுச் சருக்கம்

**''முத்திருக்கு நகைமல முகையிருங்குந் தனமளியை**
**யொத்திருக்குங் கருங்கூந்த ஓடையகோ மதிபாகர்**
**நத்திருக்குங் கழையணிந்த நாதர்திரு வருளானே**
**சித்திருக்குந் திருமாது சிறந்திருக்குங் கடியெல்லாம்''[3]**

என வரும் பாடலால் பாண்டிய நாட்டின் பெருமைகளை சுட்டிக்காட்டுகின்றார்.

## திருநகரச் சிறப்பு

சீராசை நகரத்தின் சிறப்புகளையும் பெருமைகளையும் தெளிவாக விளக்குகின்றது.

மேற்குறித்த மூன்று சருக்கங்களும் மிகுந்த இலக்கியச் சுவையுடையன. கற்பனைப் புனைவுகள் இவற்றில் மிகுதியாகக் காணப்படுகின்றன. ஆற்றையும், நாட்டையும், நகரத்தையும் அழகுற வருணிக்கின்ற இச்சருக்கங்கள். ஆறு, நாடு, நகரம் ஆகிய இம்மூன்றும் இருக்க வேண்டிய முறைகளை நயம்பட விரித்துக் காட்டுகின்றன.

ஒரு திருத்தலத்தில் தலம், தீர்த்தம், மூர்த்தி ஆகிய மூன்றும் பொலிந்திருக்க வேண்டுமென்பது தாயுமான சுவாமிகளின் அருள்வாக்கு.[4] அடுத்து வரும் மூன்று சருக்கங்களும் தலம் முதலிய மூன்றின் பெருமைகளை எடுத்துரைக்கின்றன.

## தல விசேடச் சருக்கம்

சங்கரநயினார் கோயிலின் தனிச்சிறப்புகளை இச்சருக்கத்தில் விளக்குகின்றார் இந்நூலாசிரியர்.

**பத்திரந் தனிற்சி ரேட்டம் பலந்தரு வில்வ மாரு**
**மந்திரந் தனிற்சி ரேட்டம் பாசுப தாத்ர மாகுஞ்**
**சத்திக டனிற் சிரேட்டத் தையல்கோ மதித்தா யாகுஞ்**
**சித்திரத் தலங்க டம்மிற் சிரேட்டஞ்சீ ராசை யாமே''[5]**

உமாதேவியின் பல்வேறு வடிவங்களில் மிகவும் சிறந்தது கோமதியம்பிகை என்றும், திருத்தலங்கள் யாவற்றிலும் சிறப்புடையது சீராசையாகிய சங்கர நயினார் கோயில் என்றும் கூறும் இப்பாடல் இத்தலத்தின் மேன்மையை உணர்த்துவது எண்ணிமகிழத் தக்கது.

### தீர்த்த விசேடச் சருக்கம்

சங்கரநயினார் திருத்தலத்தில் பல தீர்த்தங்கள் இருந்தாலும் மிக்க பெருமையுடையது நாகசுனைத் தீர்த்தம்.

> ''ஐப்பசி மதியின் முற்று மத்தடந் தன்னின் மூழ்கிச்
> செப்பருஞ் சாந்தி ராய ணயப்பெயர் விரதஞ் செய்வோர்
> சுப்பிர மனத்த ராகித் தூலதே கத்தோ டேவான்
> மைப்பொலி கண்டவர் வாழு மகாசிவ லோகஞ் சேர்வர்''[6]

ஐப்பசி மாதத்தில் நோன்பு நோற்று நாகசுனையில் படிந்து நீராடி, வழிபடுவோர் தமக்குச் சிவலோகம் சித்திக்கும் என வலியுறுத்தும் மேற்சுட்டிய திருப்பாடல் இக்கோயிலின் தீர்தத்ததையும், மூர்த்தத்தையும் போற்றுகின்றது.

### மூர்த்தி விசேடச் சருக்கம்

இது சங்கரலிங்க சுவாமியின் மேன்மைகளைப் புலப்படுத்துகின்றது. இப்பகுதியில் நூலாசிரியர் தல வரலாற்றையும் இறைவனின் தனிச்சிறப்புகளையும் விளக்குகிறார்.

> ''புன்னைமா வனத்தி னீழற் புவியினி லனாதி யாகி
> யன்னைகோ மதியினோடு மமர்ந்தரு ளமல வித்தாய்
> மன்னிய தொண்டர்க் கெல்லா மங்கள நல்க லாலே
> தன்னைநே ரிவ்வி லிங்கஞ் சங்கர லிங்க மாகும்''[7]

### சங்கர நாராயணரான சருக்கம்

சங்கரலிங்க சுவாமிகள் சங்கனுக்கும், பதுமனுக்கும் சங்கர நாராயணராகத் திருக்காட்சி தந்த வரலாறு இச்சருக்கத்தில் கூறப்பட்டுள்ளது. மேலும் கோமதியம்மையின் தவம், தலத்தின் சிறப்பு, பெருமை ஆகியன சுட்டப்பெற்றுள்ளன.

''ஐயநின் கூறே மாலு மயன் முதற்றேவு மென்னு
மெய்யுணர் வேயெஞ் ஞான்றும் விளைவுற வேண்டு மீங்கே
கொய்யுநற் போது தூவயுன் குரைகழ லிலங்கு நோன்றாண்
மையற வழுத்தி யாங்கள் வைகலும் வைகல் வேண்டும்''[8]

### உக்கிரன் வழிபடு சருக்கம்

இது சங்கரன் நாராயணர் வரலாற்றுடன் தொடர்புடைய சருக்கம். உக்கிர பாண்டியன் சங்கரலிங்க சுவாமியைத் தரிசித்து மனம் மகிழ்ந்தும், நெகிழ்ந்தும் அவருக்காக ஒரு கோயிலைக் கட்டிய வரலாற்றை இது கூறுகின்றது. இது திருத்தலம் உருவான வரலாற்றை விரிவுறக் கூறுகிற சருக்கமாகும்.

திருத்தலங்களில் எத்தனையோ அற்புதங்களும், அதிசயங்களும் நிகழ்கின்றன என்பர். இவை நிகழ்ந்ததாகத் தெரியவந்தால்தான் அத்திருத்தலங்களுக்குத் தனித்த மதிப்பும், மரியாதையும் ஏற்படும். இவற்றை அறிகின்ற பக்தர்கள் இத்திருத்தலங்களைத் தரிசிக்க வேண்டும் என்ற அவாவுடனும், ஆர்வத்துடனும், வியப்புடனும், பக்தியுடனும் அங்கே வந்து கூடுவார்கள். இனி வரும் ஐந்து சருக்கங்கள் இத்திருத்தலத்தில் நிகழ்ந்த வியப்புக்குரிய நிகழ்ச்சிகளை விளக்குகின்றன.

### தக்கணை தவம்புரி சருக்கம்

புலவர் ஒருவர் தம் அன்பான மனைவியைப் பிரிந்து கணிகையர் பலருடன் வாழ்கிறார். பல தீவினைகளைச் சுமந்த அவர் மறுபிறப்பில் தக்கணை என்ற பெண்ணாகப் பிறக்கிறார்.

பெண் முயலுடன் விளையாடிக் கொண்டிருந்த ஆண் முயலைக் கொன்ற ஒருவன், கொன்ற தீவினையால் சத்தியகீர்த்தி என்ற பெயரில் மறுபிறப்பெடுக்கின்றான்.

தக்கணைக்கும், சத்தியகீர்த்திக்கும் திருமணம் நிகழ்ந்தது. இருவரது தீவினைத் தொகுதிகளும் ஆற்றலுடன் தாக்கியதால் சத்தியகீர்த்தி இறக்கிறான். தக்கணை விதவையாகிறாள். இவள் புன்னைவனம் வந்து தவமிருந்து, ஏழு பிறவியெடுத்து, இறுதியில் இறையருளால் வீடுபேறடைகிறாள். இவ்வரலாற்றை நயம்பட எடுத்து மொழியும் சருக்கமாக இச்சருக்கம் அமைந்துள்ளது.

### வீரசேனன் பிணிதீர்ந்த சருக்கம்

வீரசேனன் என்னும் சோழ மன்னன் ஒருவனின் வரலாற்றை இயம்பும் சருக்கமாதலால் இது வீரசேனன் பிணி தீர்த்த சருக்கம் எனப் பெயர் பெறுவதாயிற்று. அம்மன்னின் வரலாறு பின்வருமாறு: வீரசேனன் என்பவன் உறையூரிலிருந்து அரசாண்ட சோழ மன்னன், தீவினைப் பயனால் பிணி உடையோனாகிப் பின் இத்திருத்தலத்தின் மகிமையால் பிணி தீர்ந்த இவன் வரலாற்றை இச்சருக்கம் கூறுகிறது.

ஒரு நாள் மன்னன் நகர்வலம் வந்தான். அப்பொழுது மழை வந்தது. அவன் ஓர் அந்தணன் வீட்டில் ஒதுங்கினான். மன்னனுக்குப் பசித்தது. அந்தணன், வழிபாட்டிற்காக வாங்கி வைத்திருந்த கனிகளை மன்னன் உண்டான். இதனால் தீவினைகள் பெருகி முதிரவே மன்னனது உடம்பைத் தீராப் பிணிகள் பிணித்தன. மன்னன் தன் மகனுக்கு முடி சூட்டிவிட்டுப் புன்னைவனத்திற்கு வந்தான். சிவசன்மன் என்ற சான்றோரை அடைந்து ஐந்தெழுத்து மந்திரத்தை உணர்ந்து சங்கரலிங்கரை வழிபட்டு முத்தியடைந்தான்.

### சயந்தன் வினை தீர்த்த சருக்கம்

இந்திரன் மகனான சயந்தன் காக்கை வடிவத்துடன் சென்று, வனவாசமிருந்த சீதையின் மார்பில் கொத்தினான். இதனால் சினந்த இராமன் ஓர் அம்பைக் காக்கையின் மீது எறிந்தான். அது அக்காக்கையின் ஒரு கண்ணைப் பறித்தது. சயந்தன் காக்கை வடிவத்துடன் திரிந்தான். முடிவில் புன்னை வனத்திற்கு வந்து சங்கரலிங்க சுவாமியிடம் அடைக்கலம் அடைந்தான். அவரும்

அவனது காக்கை வடிவத்தை ஒழித்து முன்னைய தேவ வடிவத்தை அருளினார். இப்புராண வரலாற்றை எடுத்துக் காட்டும் சருக்கம் இது.

**கானவன் வீடு பெற்ற சருக்கம்**

கானவன் என்பவன் வீடு பேறு அடைந்த நிகழ்வைக் கூறுவதாக இச்சருக்கம் அமைகிறது. இச்சருக்கம் கூறும் செய்தியாவது, வேடன் ஒருவனுக்கு எலியைப் பிடிக்கின்ற போது அவனுக்குப் புதையல் கிடைத்தது. அதைத் தீய வழியில் செலவழித்தான். செல்வம் குறைந்தது; பாவம் நிறைந்தது. நலிந்த வேடன் நாகசுனைக்கரையில் விழுந்திருந்த ஒரே புண்ணியத்தால் இறைவனின் திருவருளைப் பெற்று வீடுபேறு அடைந்தான்.

**கன்மாடச் சருக்கம்**

சேற்றூருக்குப் பக்கத்திலே ஓடுகின்ற தேவியாற்றங்கரையிலே தவம் செய்திருந்தவர் சிவராத முனிவர். இவர் மகனான கன்மாடன் ஒரு பசுவைக் கொன்று, தீராத தீவினைகளை அடைந்தான். இறுதியாகப் புன்னை வனத்திற்கு வந்து நாகசுனையில் மூழ்கி மூன்று நாள்களில் முத்தி பெற்றான்.

சமயச் சார்புடைய வழக்காறுகளையும் விளக்குவதாக இக்கோயிற் புராணம் அமைந்துள்ளது என்பதற்கு திருநீற்றை அணிய வேண்டிய முறைகளையும், இடங்களையும் விளக்குவதாக வரும்,

**‘‘தலையில் நுதலில் தடமார்பின்**
**உந்தித் தடத்தில் முழந்தாளில்**
**மலையின் உயர்ந்த திணிதோளில்**
**மணிகண் டத்தில் முன்கைதனில்**
**இலகு கழுத்தில் சுவன்மிசையில்**
**பஞ்சப் பிரம மெழுத்தோதி**
**நிலவு பொழியும் வெண்ணீறு**
**நெறியின் அணிதல் வேண்டுமால்’’[9]**

எனும் இப்பாடலால் அறியலாம். இவ்வாறு அரிய கருத்துக்களின் களஞ்சியமாக இக்கோயிற்புராணம் திகழ்கின்றது.

## சிற்றிலக்கியங்கள்

### *சங்கரலிங்க உலா*

'சங்கரலிங்க உலா' என்ற நூல், உலா என்ற சிற்றிலக்கிய வகையைச் சார்ந்தது. பாட்டுடைத் தலைவரான சங்கர லிங்கர், உலா வரும்போது அவரைப் பேதை முதலான எழுவகைப் பெண்டிர் கண்டு காமுற்றதாகக் கலிவெண்பாவால் புனைந்துரைக்கப் பெற்றுள்ளது. இந்நூல் 312 கண்ணிகளைக் கொண்டது. இந்த உலாவை இயற்றியவரது பெயரையும், வரலாற்றையும் அறிய முடியவில்லை. இந்த உலாவுக்குக் கூழையுலா, வரராசையுலா என்ற வேறு பெயர்களும் இருக்கின்றன. ஆனால், பெருவழக்குடைய சங்கரலிங்க உலா என்ற பெயரே இதற்கு நிலைத்தது.

### *தலச் சிறப்பு*

சங்கரலிங்க உலாவின் தொடக்கத்தில் சங்கரநயினார் கோயிலின் தலவரலாறு சுருக்கமாகக் கூறப்பெறுகிறது.[10]

சங்கரநாராயணர் வடிவத்தைக் காண வேண்டும் என்று கடுந்தவம் புரிந்த ஆவுடை அம்மைக்கும், சங்கன், பதுமனுக்கும் பிறருக்கும் சங்கரலிங்கர், சங்கரநாராயணராகத் திருக்காட்சியளித்தார் என்பதை,

> ''ஒருபாற் புலித்தோ லுடைதயங்க மற்றை
> ஒருபாற்பொன் னாடை யொளிர - ஒருபால்
> மழுவு மொருபால் வளையும் துலங்கத்
> தழுவு முருவமைந்து''[11]

எனும் பாடலால் இந்நூலாசிரியர் விளக்குகிறார்.

சங்கரலிங்கரின் பெருமைகள் அளவிடற்கரியன. அகத்தியனாருக்கு ஐந்தெழுத்தின் உண்மைப் பொருள்களை உணர்த்தியவர் இவரே.[12] இந்திரன்

மகன் சயந்தன் பெற்ற காக்கை வடிவத்தை இவர் மாற்றினார்.[13] இத்தகைய பல பெருமைகளைக் கொண்ட சங்கரலிங்கர் உலா வரும் நாள்,

**''சித்திரை கங்கை யணியுஞ் சடாடவியான்**
**சித்திரைத் திங்கள் திருநாளில் - நத்திச்**
**சிவந்தபதத் தாமரையைச் சேவித் துலகம்**
**உவந்ததிரு நாளி லொருநாள்''**[14]

எனக் குறிப்பிடப்படுகிறது. உலா வருவதற்காக வைறையில் திருப்பள்ளியெழுந்து, திருமஞ்சனமாடிப் பலவகைப்பட்ட அணிகலன்களைப் புனைந்தார். அவர் திருக்கைகளில் காப்பும், திருவரையில் பொன்னாடையும், உதர பந்தனமும், திருவரையின் ஒரு பக்கத்தில் வாளும், திருமுடியில் இரத்தின மகுடமும், இரு காதுகளில் குழைகளும், திருக்கண்டத்தில் கண்டசரமும், திருத்தோள்களில் இரத்தின வலயங்களும், திருமார்பில் மாலைகளும், செங்கைகளில் மணிக்கடகங்களும் திருவடிகளில் சிலம்புகளும் அணிந்தார்.[15] இத்தகைய அழகுடன் சங்கரலிங்கர் உலா வருகின்றார் எனக் காட்டப்பட்டிருக்கிறது.

சுவாமிகளுடன் விநாயகரும், முருகரும், சண்டேசுவரரும், சமயக் குரவர் நால்வரும், சேரமான் பெருமாளும், முசுகுந்தனும், இராம பாண்டியனும் வந்தனர்; சுவாமியும் தேரில் எழுந்தருளினார்; அப்போது இசைக் கருவிகள் பல முழங்கின.[16]

**''அருவுருவ மாகிநின்றான் அன்றிருவ ராகி**
**மருவுருவங் காட்டவந்தான் வந்தான் - உருகித்**
**தொழுதிசைப்ப மாமதுரைத் தொன்னகர்செல் லாது**
**வழுதி வணங்கவந்தான் வந்தான் - பழுதிற்**
**பொருந்தும் பெரும்பிணிக்கோர் புற்றி னடத்து**
**மருந்து தருவந்தான் வந்தான் - திருந்து புகழ்**
**மையிலகு சுந்தரன் வந்தான்வந் தானென்று**
**செய்ய திருச்சின்னஞ் சேவிப்ப''** [17]

என்று சங்கரலிங்கர் உலா வருவதற்கான காரணத்தை எடுத்துரைக்கின்றது.

**திருத்தலம் பற்றிய குறிப்புகள்**

திருத்தலம் பற்றிய மிக முக்கியமான குறிப்புகள் உலா நூலில் காணப்படுகின்றன. அவை வருமாறு:

**தலப்பெயர்கள்**

1. புன்னைவனம்; 2. வரராசை 3. சீராசை, 4. கூழைப்பதி[18]

**தலமரம்**

1. புன்னை[19]

**''புன்னை வனத்துள ஓர்புன்னை நிழல்''**

**தலத்தீர்த்தம்**

நாகசுனை[20]

**''ஞான நெறிஉதவும் நாக தனை''**

**இறைவனது திருப்பெயர்கள்**

1. சங்கரர் 2. புன்னைவன நாதர் 3. வன்மீக நாதர், 4. சங்கரநாராயணர்.[21]

**இறைவியின் திருப்பெயர்கள்**

1. ஆவுடைத்தாய் 2. சங்கரி[22]

**திருவிழா**

1. சித்திரைத் திருவிழா[23]

திருஞானசம்பந்தமூர்த்தி தேவாரம் முழங்க, முப்பத்து முக்கோடி தேவர் வணங்கும் திருநாளில், மக்கள் தங்களது பலவகையான பிணிகள் நீங்குவதற்காக

பலவகையான காணிக்கைகளைச் செலுத்துகின்றனர். சித்திரை மாதத்தில் இத்தலத்தில் விழா நடக்கும்போது இறைவன் உலாவருவதற்கு அறிகுறியாக சூரியன் உதயமாகிறான் என்று இந்நூலின் தொடக்கத்தில் கூறப்பெற்றுள்ளது.

## இறைவனது தசாங்கம்

தசம் + அங்கம் = தசாங்கம். தசம் என்றால் பத்து. உலா வரும் அரசரோ அல்லது கடவுளரோ எவராயினும் அவர்களுக்குரிய பத்துச் சின்னங்களைப் புகழ்ந்து பாடுவது தசாங்கம் ஆகும். பாட்டுடைத் தலைவன் அரசனாகவோ இறைவனாகவோ அமைவானாயின் அவர்களுக்குரிய சின்னங்களாக புகழ்ந்து கூற வேண்டியவை மலை, ஆறு, நாடு, நகர், குதிரை, யானை, கொடி, மாலை, முரசு, ஆணை. இவற்றுள் ஒன்றிரண்டு அங்கங்களைக் கூறாமலும் இருக்கலாம். இந்நூலில் சங்கரருக்குரிய பத்து அங்கங்களும் இடம்பெற்றுள்ளன. அவற்றின் விவரம் வருமாறு:

1. மலை - பொதிகை மலை
2. ஆறு - பொருநையாறு
3. நாடு - தமிழ்நாடு
4. நகர் - சீராசை
5. குதிரை - வேதம்
6. யானை- ஐராவதம்
7. கொடி - காளைக்கொடி
8. மாலை - கொன்றை மாலை
9. முரசு - தெய்வமுரசு
10. ஆணை- செங்கோல்

இவை சுவாமியின் அருளாட்சிக்குரிய பத்து உறுப்புகளாகும்.[24]

**உக்கிரபாண்டியன்**

இவன் சங்கரலிங்கம் வீற்றிருக்கின்ற கோயிலைக் கட்டியவன்.[25] சித்திரைத் திருவிழா நடைபெற்ற போது, பழமைச் சிறப்புடைய மதுரை மாநகருக்குச் செல்லாமல் சங்கர நயினார் கோயிலுக்குச் சுவாமியைத் தரிசிக்க வந்தான்.[26] ஆண்டுதோறும் அவன் பிறந்த நாளன்று தேர்த் திருவிழா நடைபெறுகின்றது.

**புற்று மண்**

எல்லாப் பிணிகளுக்கும் புற்றுமண்ணே மருந்தாம். நோய்கள் தீரச் சுவாமி புற்று மண்ணை மருந்தாக அருளுகின்றார்.[27]

**''முக்கண்**
**மாமருந்து புற்றிடத்து மண்மருந்தா லெப்பிணியும்**
**போமருந்து மென்றான்''[28]**

புற்றுமண் மருந்தால் எல்லா நோய்களும் ஒழியும் என்று சுவாமி கூறினாராம். சுவாமி புற்றிடங்கொண்ட வன்மீக நாதராவர். ஆகவே புற்று வழிபடத்தக்கது.

**''புன்னைப் பொதும்பரின்கீழ்ப் புற்றூ டினிதமர்ந்த**
**முன்னைப் பொருளான் முழுமுதலான்''[29]**

என்று புற்றை இறைவன் இடமாகக்கொண்ட தன்மை கூறப்படுகிறது. கோயில் தோன்றிய காலந்தொட்டே புற்றுமண் நோய்களைத் தீர்க்கின்ற புனித மருந்தாகப் போற்றப் பெறுகின்றது.

**சித்திரக்கூடம்**

கோயில் வளாகத்தில் சித்திரக்கூடம் ஒன்றிருந்ததை உலா நூலால் அறிய முடிகின்றது. இதில் தலத் தொடர்புடைய ஓவியக் காட்சிகள் சில வரையப்பட்டிருந்த செய்தி இவ்வுலா நூலில் கூறப்பெற்றுள்ளது. அக்காட்சிகள் வருமாறு :[30]

1. புன்னை வனத்தில் ஆவுடையாள் சுவாமியை வழிபட்ட காட்சி

2. அம்மைக்குச் சுவாமி சங்கர நாராயணராகத் தரிசனம் தந்த காட்சி

3. சங்கனுக்கும், பதுமனுக்கும் அதே வடிவத்தைப் புலப்படுத்தியருளிய காட்சி.

4. நகரமும், அதன் நடுவில் உக்கிரபாண்டியன் கட்டிய கோயிலும் தோன்றுகின்ற காட்சி.

5. சுவாமி அகத்தியனாருக்கு ஐந்தெழுத்து விளக்க உபதேசம் அருளுகின்ற காட்சி. இந்த ஓவியங்கள் அனைத்தும் தற்பொழுது பெரிதும் சிதைந்த நிலையில் உள்ளது.

## மூலநூல்

சங்கரலிங்க உலாவில் காணப்படுகின்ற மேற்கண்ட அரிய குறிப்புகள் அனைத்தும் சங்கரன் கோயிலைப் பற்றிய ஆய்வுகளுக்குத் துணை செய்கின்ற மூலக்கூறுகளாம். குறிப்பாக, வடமலையப்பப் பிள்ளையவர்கள் கோயிலுக்கு ஆற்றிய திருப்பணிகளை இந்நூல் தொகுத்துரைக்கிறது. இந்தக் குறிப்புகள் வேறு எந்த நூலிலும் காணப்படவில்லை. ஆகவே, இவ்வுலா நூல் சங்கரநயினார் கோயில் வரலாற்று ஆய்வுக்குப் பெரிதும் பயன்படுகின்ற மூல நூலாகத் திகழ்கின்றது எனலாம்.

## சங்கர நயினார் கோயில் அந்தாதி

''சங்கர நயினார் கோயில் அந்தாதி'' என்ற நூலை இயற்றியவரின் பெயர் முதலிய விவரங்கள் புலனாகவில்லை. இந்நூல் நூறு பாடல்களைக் கொண்டது. இவற்றுள் 65-74; 98 ஆகிய எண்களைக் கொண்ட 11 பாடல்கள் யமகமும், மற்றவை திரிபும் ஆகும்.

யமகம் என்பது வடசொல். மடக்கு என்பதற்கு மாற்றாக யமகம் எனும் அவ்வடசொல்லைக் கையாள்கின்றனர். சொல்லணிகளுள் ஒன்றாக விளங்கும் இம்மடக்கணி குறித்து,

> ''எழுத்தின் கூட்ட மிடைபிறி தின்றியும்
> பெயர்த்தும்வேறு பொருடரின் மடக்கெனும் பெயர்த்தே''[31]

எனத் தண்டியலங்காரம் விளக்கும். அஃதாவது பாடலில் வரும் ஒரு சொல் மீண்டும் மீண்டும் வந்து வெவ்வேறான பொருள்களைத் தருமாறு அமைப்பது மடக்கு எனப்பெறும் என்பது மேற்சுட்டிய தண்டியலங்கார நூற்பாவால் புலனாகும்.

செய்யுளின் நான்கடிகளிலும் முதலெழுத்து மட்டும் திரிந்து (வேறுபட்டு) ஏனைய எழுத்துகள் ஒத்து நிற்குமாறு சொல் அமைத்துப் பாடுவது திரிபு எனப்படும். எழுத்து திரிந்து வருதலாற் திரிபு என வழங்கலாயிற்று. இவ்விரு அணிகளும் இணைந்து வருமாறு இவ்வந்தாதி நூல் யாக்கப் பெற்றுள்ளது.

இந்நூலில் இடம் பெற்றுள்ள பாடல்கள் சொல்லணிகளைப் புனைந்த பாடல்களாக இருப்பதால் கடுமையான நடையுடையன; சொற்பிரிப்புகளும், பொருள்களும் தெளிவாகத் தெரிவதில்லை. இந்நூலுக்குக் கூழையந்தாதி, வரராசையந்தாதி என்ற வேறு பெயர்களும் உள்ளன.

## திருத்தலம் பற்றிய குறிப்புகள்

1. **தலப் பெயர்கள் :** (1) கூழை நகர், (2) சீராசை, (3) வரராசை, (4) ராசை[32]

2. **தலமரம் :** புன்னை[33]

3. **இறைவனின் திருப்பெயர்கள் :** (1) கூழைப்பிரான் (2) சங்கரர், (3) சங்கரேசர் (4) சிவசங்கரேசர், (5) ஆவுடை நாயகர், (6) சங்கரநாரணர்.[34]

4. **இறைவியின் திருப்பெயர்கள்:** (1) ஆவுடைத் தோகை (2) ஆவுடை மாது (3) ஆவுடையம்மன். இவ்வாறு 'ஆவுடையாள்' என்ற ஒரு பெயரை நூலாசிரியர் பற்பல முறைகளில் பயன்படுத்துகின்றார்.[35]

மேற்கண்ட பெயர்கள் அனைத்தும் பழங்கால மக்கள் வழக்காற்றில் இருந்த, அனைவரும் இயல்பாகப் பயன்படுத்திய பெயர்களாகும். இவற்றை நூலாசிரியர் பொருத்தமான இடங்களில் அமைத்துப் பாடல்களைப் புனைந்துள்ளார்.

'சங்கரநாரணர்' என்ற பெயர் யமகத் தொடராக அமைந்த பாடல் வருமாறு:-

**''சங்கர நாரணர் தென்வர ராசைத் தனிக்குழை வெண்**
**சங்கர நாரண நம்பான்மின் னார்க்குத் தவித்திடு நெஞ்**
**சங்கர நாரண வேளெரித் தோர்சது வேதபிர**
**சங்கர நாரணங் கோர்பாக ரென்றஞ் சலித்தெண்ணுமே''**[36]

இப்பாடலில் 'சங்கரநாரணர்' எனும் சொல் யமகமாக அமைந்துள்ளது. முதலாமடியில் வரும் சங்கரநாரணர் என்பது இறைவன் பெயரைச் சுட்டும். இரண்டாமடியில் வரும் சங்கரநாரணர் எனும் சொல் முதலடியின் ஈற்றில் நின்ற வெண் என்ற சொல்லோடு கூடி 'வெண் + சங்க+ அநாரண' எனப் பிரிந்து வெண் சங்கால் ஆன குழையை அணிந்த ஆதிஅந்தம் அற்றவன் எனப் பொருள்படும். மூன்றாமடியில் வரும் 'சங்கரநாரண' எனும் சொல் இரண்டாமடியின் ஈற்றசையான 'நெஞ்' என்பதோடு இயைந்து நெஞ்சம் + கரம் + நா + ரணவேள் எனப் பிரிந்து நெஞ்சம், கரம், நாவால் துதிக்கத் தக்கவனும் காமனை எரித்தவனுமானவன் என்ற பொருளைத் தரும். நான்காமடியில் வரும் 'சங்கரநாரண' எனும் சொல் மூன்றாமடியின் ஈற்றில் நின்ற 'வேதபிர' எனுஞ் சொல்லோடு கூடி வேதபிரசங்கர் + அநார் + அணங்கு எனப் பிரிந்து வேதத்தை உபதேசிப்பவனும் ஆரணங்காகிய உமையைத் தம் உடலில் பங்காகக் கொண்டவனும் ஆகிய இறைவன் எனப் பொருள் தரும்.

இப்பாடலின் திரண்ட பொருள் வருமாறு:

ஆரணங்காகிய உமையைத் தன்னுடலில் பங்காகக் கொண்டவனாதலால் இடச் செவியில் வெண்சங்காலான குழையை அணிந்தவனும், காமனை எரித்தவனும், சனக குமரார்க்கு வேதத்தை உபதேசித்தவனும் ஆகிய இறைவனாம் சங்கரநாரணன் தென் வரராதசயம்பதியில் எழுந்தருளி உள்ளான். அவனை நெஞ்சம், கரம், நாவால் துதித்து நிற்றல் வேண்டும் என்பதாம்.

**''குயிலாய மாமனை யுள்ளிருந் தாவினய்க் கொள்ளை கொள்ள**
**அயிலாய மாமனை யப்பனை வாவென் றழைப்பதுபார்**
**கயிலாய மாமனை யன்றடுங் கூழைக் கடவுளுவ**
**மயிலாய மாமனை யாவுடை மாதிடம் வைத்தவனே''**[38]

என்பது திரிபு பாடல். இப்பாடல் அகப்பொருள் கருதி தோழி கூற்றாக அமைந்துள்ளது.

இப்பாடலின் நான்கடிகளிலும் குயிலாய மாமனை, அயிலாயமாமனை, கயிலாய மாமனை, மயிலாய மாமனை எனும் சொற்கள் பயின்று வந்துள்ளன. இச்சொற்களில் முதலெழுத்து மட்டும் திரிந்து திரிபு அணியாக அமைந்துள்ளது. முதலடியில் வரும் 'குயிலாய மாமனை' எனும் சொல் குயில் + ஆயம் + மா + மனை எனப் பிரிந்து குயிற் கூட்டம், பெரிய மாளிகை எனப் பொருள்பட நின்றது. இரண்டாமடியில் வரும் அயிலாய மாமனை எனும் சொல் அயில் + ஆய + மா + மனை எனப் பிரிந்து வண்டுகள் ஒலிக்கும் மலரம்புகளை உடைய காமனை எனப் பொருள்தரும். மூன்றாமடியில் வரும் கயிலாய மாமனை எனும் சொல் கயிலாயம் + மாமனை எனப் பிரிந்து கயிலாய அதிபதியான சிவபெருமானின் மாமனா தக்கன் எனப் பொருள் தரும், நான்காமடியில் வரும் மயிலாய மாமனை எனும் சொல் மூன்றாமடியின் ஈற்றில் நின்ற 'உவ' எனும் அடையோடு கூடி உவமயிலாய + அம் + மாமன் எனப் பிரிந்து ஒப்புமையில்லாத திருமகளை எனப் பொருள் தரும்.

இப்பாடலின் திரண்ட பொருள் வருமாறு:

தக்கனை அழித்தவனும் திருமகளை மார்பில் தாங்கும் நாராயணனை இடப்பக்கத்தில் கொண்டவனும் கூழை எனும் திருப்பதியில் எழுந்தருளியுள்ள கடவுளுமான சங்கரநாரணர் திருப்பதியில் வண்டுகள் ஒலிக்கும் மலரம்புகளை உடைய காமனை வரவேற்கும் முகமாக குயில்கள் கூவத் தொடங்கி விட்டன. காதலனைப் பிரிந்த மகளிர் நெஞ்சம் இனி அழிய வேண்டியதுதான்' என்பதாம்.

## கோமதி அந்தாதி

### அண்ணாமலை ரெட்டியார் (1861 - 1891)

கரிவலம்வந்தநல்லூருக்கு அருகில் இருப்பது 'சென்னி குளம்' என்ற சிற்றூர். இதில் பிறந்தவர் அண்ணாமலை ரெட்டியார். கழுகுமலை முருகன் மீது மிக்க புகழ்பெற்ற காவடிச்சிந்தினைப் பாடியவர் இவரே. 'கோமதி அந்தாதி' என்ற நூலை இவர் பாடியதாகக் கூறுகின்றனர்.

'அந்தாதி' என்றால் பொதுவாக நூறு பாடல்கள் இருக்க வேண்டும் என்பது விதி. ஆனால், கோமதி அந்தாதியில் நாற்பத்து நான்கு கட்டளைக் கலித்துறைப் பாடல்கள் மட்டுமே கிடைக்கின்றன.

பாடல்கள் அனைத்தும் திரிபு என்ற சொல்லணியைப் புனைந்தவை; எளிதில் பொருள் புலப்படாத மிகவும் கடுமையான நடையுடையவை.

''அண்ணாமலை ரெட்டியார் பாடிய கோமதி அந்தாதி என ஒரு நூல் அண்மையில் அச்சாகியுள்ளது. அவரின் பிற பாடல்களை நோக்கும் போது அந்நூல் அவர் பாடியதாகக் கொள்ளக்கூடவில்லை. செம்பாகமாகவும், எளிமையாகவும் யமகம், திரிபுகளைக் கையாளும் ஆற்றல் பெற்றவர் அவர். கோமதியந்தாதியில் உள்ள பாடல்களில் எளிமையோ செம்பாகமாகவோ இல்லை. வலித்து திரிபணி கொள்ளப்பட்டுள்ளது[39] எனும் அரங்க சீனிவாசனின் கூற்று ஆய்விற்குரியது.

எனவே, 'கோமதி அந்தாதி' என்ற நூலை அண்ணாமலை ரெட்டியார் பாடினாரா? பாடவில்லையா? என்ற கருத்து முரண்பாடு தனி ஆய்வுக்குரியதாக உள்ளது. சான்றிற்காக ஒரு பாடலை நோக்குவோம்.

**''கைத்தந்தத் தும்பிகள் விண்டும்பி**
**யொப்பப் பொற் காவணந்தோய்**
**முத்தந்தத் தம்பிர பைபுன்னை**
**யூரின்மு தல்வியையுள்**
**வைத்தந்தத் தும்பிறப் போடிறப்**
**புங்கெட மஞ்சனக்கோ**
**வித்தந்தத் தும்பினான் வந்தாலும்**
**குட்டி வெருட்டுவரே''[40]**

நீண்ட துதிக்கையும் தந்தங்களும் உடைய யானை அதன் முகப்படாத்தில் பொதிந்துள்ள முத்துக்களின் பிரகாசத்தால் தன் கரிய நிறமழிந்து வெண்ணிறமாகத் தோற்றமளிக்கும். அத்தகு யானையின் மீது பவனி வரும் புன்னையூரின் தலைவியை அகத்தே வைத்து உள்குவாரின் பிறப்பு இறப்பாகிய வினைகள் அற்றுப்போகும். பாசக் கயிறை உடைய யமனாவன் வரும்போது அவனையும் மிரட்டும் நெஞ்சுறுதி வாய்க்கும் என்பது மேற்காட்டிய பாடலின் பொருளாம். இப்பாடலில் அடிதோறும் கைத்தந்தத், முத்தந்தத், வித்தந்தத், வைத்தந்தத், எனும் சொற்கள் திரிபாய் அமைந்து கிடத்தலை அறிய வேண்டுவதாம். கூற்றுவனின் வலிமை கெடத் தன் காலால் உதைத்தவனும் தோலாடை அணிந்தவனுமான சங்கரனொடு புற்றில் உறையும் கோமதி அம்மையின் அருள் கிடைத்துவிடின் அற்பமான எள்ளும் புல்லும் கூட பரமானந்த வீட்டிற்கு நம்மைக் கொண்டு செல்லும்.

## கோமதியம்பிகை பிள்ளைத் தமிழ்

ஊற்றுமலைக் குறுநில மன்னரின் அரசவைப் புலவர் புளியங்குடி முத்து வீரக் கவிராயர் இயற்றியது கோமதியம்பிகை பிள்ளைத் தமிழ். இதில் இலக்கண முறைப்படி பத்துப் பருவங்களும் நூறு பாடல்களும் உள்ளன.

நூலாசிரியர் பத்தொன்பதாம் நூற்றாண்டில் வாழ்ந்தவர் என்பது தெரிகிறது. இவரைப் பற்றிய வேறு வரலாறும் பிறவும் புலனாகவில்லை. நூலாசிரியர் பழந்தமிழ் இலக்கிய இலக்கணங்களில் மிக்க பயிற்சியுடையவர். திருமுறைகளையும், சித்தாந்த சாத்திரங்களையும் கற்றுணர்ந்தவர். அனைத்துக்கும் மேலாகக் கோமதியம்பிகையின் மீது அளவற்ற பக்தி கொண்டு அரிய பாடல்களைப் புனைந்தவர்.

''... இருமல்குட் டங்குன்ம மீளைகா மாலைதலை
வலியிருகை கான்முடக்கு
முந்தைவினை யான்மருந் திற்றீர்ந் திடாதநோய்
முதுபேய் தொடக்குபித்த
முற்றுநின் சந்நிதியின் முன்வந்தவர்க்குமுன்
வாராது நீக்கு முதலே''[41]

என்று நோய்களை நீக்கி இன்பம் தருகின்ற கோமதியம்பிகையின் பேரருளைச் சிறப்பித்துப் பாடுகின்றார்.

முத்தப் பருவத்தில் வரும் ஒரு பாடல் நயம் மிகுந்தது மகளிர் தம் பற்களுக்கு முத்துக்களை உவமையாகக் கூறுவது மரபு. கோமதி அம்பிகையை பிள்ளையாகப் பாவித்து முத்தம் தருக எனப் பொருள்படுமாறு பாட எண்ணிய கவிஞர், 'கோமதியே கவிஞர் அனைவரும் பெண்டிர் பற்களுக்கு முத்துக்களை உவமையாகக் கூறிச் சென்றதை அறிந்த பின்னும் யானும் அவ்வாறே கூறுவது பயன்தருமோ. அவ்வாறாயின் வேறெதனை உவமையாகக் கூறுவேன்; அறிந்திலேன்', எனக் கூறி மயங்குகிறார். நயம் நிறைந்த அப்பாடல்.

''நாக முத்துங் கழையின்முத்து
நவில்செஞ் சாலி நல்குமுத்து
நால்வாய்க் கோட்டி னுள்ளிருந்து
தோன்றா முத்து நளிர்செய்கரு
மோக முத்துஞ் சங்கின் முத்து
மேலா நினது நகைமுத்தை

மேய துணையா மெனினூறா

யிரத்தோர் கூறும் விளம்பரிதென்

றாக முத்தப் பருவமுரைத்

தவர்முன் னுரைத்தா ரதையறிந்தும்

அடியே னுரைக்கிற் பயனென்னா''[42]

என்பதாகும்.

அம்புலிப் பருவத்தின் பாடல் ஒன்றில் இத்தலத்தின் சிறப்பு, தலவரலாறு, இறைவன், இறைவியின் பெயர், அம்மனின் தவச்சிறப்புக்கள், உக்கிரபாண்டிய மன்னனைப் பற்றிய குறிப்புகள் ஆகிய அனைத்தையும் ஆசிரியர் நயம்பட சிறப்பிக்கும்பான்மை பாராட்டத் தக்கதாகும்.

''வாராசை சீராசை பூகயிலை புன்னைவன

மாமிம் மகாதலத்தின்

மன்னுநின் குலவுக்கிர வழுதியும் பொன்னியாம்

வரநதிக் கிறைவனான

சிரநாம முற்றவனும் வனசரனு மணிமுடிச்

செங்கட் கொடும்பாந்தளிற்

சேடனென வறிவுற்ற சங்கபத் மர்களுஞ்

செயற்கரிய தவசுசெய்து

பரமான முத்திபெற் றுய்ந்தனர்க ளுனைவலிய

வாவென்று பரிவு செய்யிற்

பாலினிற் பழநழுவி வீழ்தல்போ லாகுநின்

பாக்கியம தேபாக்கியம்

அரனாரொ டெதிராடி விளையாடு மம்மையோ

டம்புலீ யாடவாவே

அரியரனு மொன்றாக வருதவ முயன்றவளொ

டம்புலீ யாடவாவே.[43]

## பாரதியார் பாடல்கள் - கோமதி மகிமை

### பாரதியார் (1882 - 1921)

பாரதியார் பல தெய்வங்களைப் பணிந்து பரவுகின்ற பண்பாளர். ஆனால், சக்தி வழிபாட்டில் மட்டும் மிக்க ஈடுபாடு கொண்டவர்.

**''துன்ப மிலாத நிலையே சக்தி**
**தூக்க மிலாக்கண் விழிப்பே சக்தி**
**அன்பு கனிந்த கனியே சக்தி**
**ஆண்மை நிறைந்த நிறைவே சக்தி''[44]**

என்று அவர் சக்திக்குப் பல விளக்கங்களைத் தருகின்றார்.

பாரதியார், அன்னை பராசக்தி கோமதியின் வரலாற்றைப் பாடி, அவளது அருளைப் புலப்படுத்த முனைந்தார். ஆறே பாடல்களைப் பாடி நிறைவு செய்தார். இந்த அளவில் கோமதியின் வரலாறு முற்றுப் பெறாமல் எஞ்சி நிற்கின்றது.

இப்போது கிடைக்கின்ற அந்த ஆறு பாடல்களும் அருமையானவை; சுவை மிக்கவை.

**''வாழிய முனிவர்களே - புகழ்**
**வளர்ந்திடுஞ் சங்கரன் கோயிலிலே**
**ஊழியைச் சமைத்த - பிரான்**
**உலகமெலா முருக்கொண்ட பிரான்**
**ஏழிரு புவனத்திலு - மென்றும்**
**இயல்பெறும் உயிர்களுக் குயிராவான்**
**ஆமுதல் அறிவாவான் - ஒளி**
**யறிவினைக் கடந்தமெய்ப் பொருளாவான்''[45]**
**தேவர்க் கெலாந்தேவன் - உயர்**
**சிவபெரு மான்பண்டொர் காலத்திலே**

**காவலி னுலகளிக்கும் - அந்தக்**

**கண்ணனும் தானுமிங் கோருருவாய்**

**ஆவலொடருந்தவங்கள் - பல**

**ஆற்றிய நாகர்கள் இருவர் முன்னே**

**மேவிநின் றருள்புரிந்தான் - அந்த**

**வியப்புறு சரிதையை விளம்புகின்றேன்.**[46]

என்று சிவபெருமானின் பெருமைகளைச் சுருங்கக் கூறி, சிவனும், திருமாலும் இரு நாகர் முன் ஒருருவாய் நின்று அருள்புரிந்த வரலாற்றைச் சுட்டினார். இந்த வரலாற்றைக் கேட்போர்கள் பெறுகின்ற நற்பயன்களுக்கு ஓர் அளவே இல்லையாம்.

**கேளீர் முனிவர்களே - இந்தக்**

**கீர்த்திகொள் சரிதையைக் கேட்டவர்க்கே**

**வேள்விகள் கோடி செய்தால் - சதுர்**

**வேதங்க ளாயிரமுறை படித்தால்**

**மூளுநற் புண்ணியந்தான் - வந்து**

**மொய்த்திடும், சிவனியல் விளங்கி நிற்கும்**

**நாளுநற் செல்வங்கள் - பல**

**நணுகிடும் சரதமெய் வாழ்வுண்டாம்.**[47]

இவ்வாறு தொடங்கிய வரலாறு முற்றுப் பெறாமை ஒரு பேரிழப்பேயாம்.

## கல்வெட்டு

பாரதியார் சங்கர நயினார் கோயிலுக்கு வந்து, கோமதி மகிமையைப் பாடினார். இந்தச் செய்தியை அம்மன் கோயிலில் அமைந்த கல்வெட்டொன்றில் பொறித்துப் பதிய வைத்துள்ளனர்.

**கோமதி சதரத்ன மாலை**

சித்தாந்த பண்டித பூஷணம் சிவ ஸ்ரீ ஆ.ஈசுரமூர்த்தி பிள்ளை அவர்கள் இயற்றியது கோமதி சதரத்ன மாலை. இவர் சங்கரன் கோயிலில் சில காலம் வாழ்ந்து, நாளும் கோமதியம்மையை வழிபட்டு அந்த அம்மையின் தரிசனமும், அருளும் பெற்றவர். பின்னர் இவர் திருவாவடுதுறை ஆதீன வித்வானாகவும் இருந்தார்.

'கோமதி சதரத்ன மாலை' என்ற நூல் இரத்தினம் போல ஒளி வீசுகின்ற நூறு பாடல்களைக் கொண்டது. எளிய நடையில் அமைந்தது. மக்கள் நாடோறும் இயல்பாகப் பயன்படுத்துகின்ற சொற்களால் பாடல்கள் அனைத்தும் புனையப் பட்டுள்ளன. ஆசிரியர் கோமதியை விளித்து, முன்னிலைப்படுத்தி, அவளது பேரருளை இறைஞ்சுகிறார்.

நூலின் நூறு பாடல்களில் மிக்க ஒளி தருகின்ற அம்மையின் பவனி உலாவை:

> **''அணியாருன் விழாநாளி லலங்காரம் பலகொண்டு**
> **மணிவீதி முழுக்கோடு வருநின்னைக் கண்டக்காற்**
> **பணியாத தலைபணியும் பாடாத வாய்பாடுந்**
> **தணியாத சிந்தையுந்தான் றணிந்தொடுங்கும் கோமதியே!''**[48]

என்று சிறப்பிக்கின்றார்.

நாராயணர் ஆலயத்தில் இலக்குமியின் தவத்தால் நாராயணசங்கரனாக காட்சி தந்த ஆலயங்கள் இல்லை என்பதை,

> **''நாரணனே யிலக்குமிசெய் நற்றவத்தா லவள்முன்னே**
> **நாரணசங் கரனாக நற்காட்சி தந்தானென்**
> **றாரணமோ நாரணற்கோ ராலயமோ சான்றுண்டா**
> **பூரணியே வளமாரும் புன்னைமகிழ் கோமதியே''**[49]

எனும் பாடலில் விளக்கி அதனால் தவச் சிறப்புடைய கோமதியே நீ இலக்குமியைக் காட்டிலும் சிறந்தவள் என்ற கருத்தைப் புலப்படுத்துகிறார்.

**''சொன்னாலும் வாயினிக்குஞ் சொலக்கேட்டாற் காதினிக்கும்**
**பன்னாளும் சிந்தித்தாற் பரந்தினிக்குஞ் சிந்தையெலாம்**
**பொன்னாளுங் கலையாளும் புவியாளும் புகழ்ந்தேத்து**
**மன்னாயுன் சரிதங்க ளற்புதமாங் கோமதியே!''[50]**

எனும் இப்பாடல் அம்மையின் புராண வரலாற்றைப் புகழ்ந்துரைக்கின்றது.

**''தொழவேண்டு முனையென்றும் தூமலர் தூஉய்ப் பாடியுன்மு**
**னழவேண்டு முன்னடியி லடியற்ற**
**விழவேண்டு மினவசெய்துன் விளங்கருளிற் றிளைத்தாடி**
**யெழவேண்டு மென்பதுவே எனக்காசை கோமதியே!''[51]**

மனம், வாக்கு, மெய் ஆகிய முக்கரணங்கள் கொண்டு எப்போதும் அம்பிகையைப் போற்றிப் பணிந்து வாழ வேண்டும் எனும் கவியின் ஆசைகளை இப்பாடல் எடுத்துரைக்கின்றது.

இவ்வாறு பாடல்கள் அனைத்தும் ஒவ்வொரு முறையில் பக்தி உணர்வுகளைத் தூண்டுகின்றன. எனவே, கோமதியம்பிகையின் புகழ்பாடும் இந்த இரத்தினமாலை சொல்லழகும், பொருளழகும் உடையவாய்ப் பக்திச் சுவை நனிசொட்டக்கூடியதாக அமைந்துள்ளது என்பது தேற்றம்.

**சங்கர சதாசிவ மாலை**

சங்கர சதாசிவ மாலை என்ற சிற்றிலக்கியத்தை இயற்றியவர் தச்சனல்லூர் வ. அழகிய சொக்கநாதபிள்ளை அவர்கள். இம்மாலை விநாயகர் வணக்கம், பரசிவ வணக்கம் என்ற கடவுள் வாழ்த்துப் பாடல்கள் இரண்டும் நீங்கலாக ஐம்பது பாடல்களைக் கொண்டது. இதன் ஒவ்வொரு பாடலும் ''சங்கர சதாசிவமே'' என்ற தொடரை மகுடமாகப் பெற்று முடிகின்றது. இக்ககவிஞரது காலம் கி.பி.19-20ஆம் நூற்றாண்டு ஆகும்.

கவிஞர் சங்கர சதாசிவனை முன்னிலைப்படுத்தி,

**''வாராத துன்பமெல்லாம் வந்ததுதான் போதுமினிச்**
**சேராத இன்பவெள்ளம் சேரவர மேயருள்வாய்''[52]**

என்று இறைஞ்சுகின்றார். இவ்வுலக வாழ்க்கையை இன்பத்துடன் கழித்த பிறகு தமது பிறப்பறுத்துத் தமக்கு வீடு பேறளிக்க வேண்டும் என்றும் வேண்டுகிறார்.

**''செந்தேன் ஒழுகுகொன்றைச்**
**செஞ்சடையாய் நின்கருணை**
**தந்தேயென் பிறப்பறுப்பாய்**
**சங்கர சதாசிவனே''[53]**

சைவ சமயத்தின் மீது மிக்க ஈடுபாடுடைய கவிஞர் சிவச் சின்னங்களான ஐந்தெழுத்து மந்திரத்தையும், திருநீற்றையும் போற்றிப் பாடியுள்ளார்.[54]

சிவனது திருவிளையாடல்கள் சிலவற்றைச் சுட்டிக்காட்டி அவனது பெருமைகளைப் போற்றுகின்றார். அவன் திரிபுரமெரித்தவன்; யானையை வதைத்துக் கொன்று அதன் தோலை ஆடையாக அணிந்தவன். நரிகளைப் பரியாக்கியவன் என்பன இவர் சுட்டிய சிவனின் வீரட்ட செயல்களுள் குறிப்பிடத் தக்கன.[55]

மேலும், சிவன் திருஞான சம்பந்தரது பண்சுமந்த பாடலைக் கேட்டு மகிழ்ந்தவன். சுந்தரமூர்த்தி சுவாமிகளுக்காகத் தூது சென்று மீண்டவன். இத்திருவிளையாடல்களை எல்லாம் எடுத்துக்காட்டும் கவிஞர், சிவனது எளியனாய் நின்று அருள்பாலிக்கும் தன்மையை உவந்து பாடுகின்றார்.[56]

சதாசிவ மாலை எளிய தமிழ் நடையுடையது; அழகான உவமைகளைக் கொண்டது; அனைவரும் படித்துப் பாராயணம் செய்யத் தக்கது. அந்நூலுள் பயின்று வரும் பக்தி உணர்வூட்டும் நற்றமிழ் பாடல்களுள் ஒன்று,

**பத்திசெய்து நின்னுடைய பஞ்சாட்சர விதியும்**
**சித்தியாய் நாயடியேன் தேறவரம் நீயருள்வாய்**

**முத்தி தரும் வித்தாய் முளைத்த முழுமுதலே**

**சத்தியொரு பாலமைத்த சங்கர சதாசிவமே**[57]

என்பதாம். உயிர்கள், 'அவனருளாலே அவன்தாள் வணங்கும்' இயல்பினவே அன்றித் தானே உணர்ந்து உய்வன அல்ல, என்பது சித்தாந்த முடிபு. இதனை உணர்ந்த கவிஞர், தனக்கு இறைவன்பால் பக்தி உணர்வு எழ அவ்விறைவனே அருள் புரிய வேண்டும் எனப் பணிந்து வேண்டுகிறார்.

சங்கர நயினார் கோயிலில் எழுந்துள்ள முப்பெருந்தெய்வங்களில், சங்கரலிங்க சுவாமியையும், கோமதியம்பிகையையும், இவர்கள் இருவரும் இணைந்த அர்த்தநாரீசுவரர் வடிவத்தையும் போற்றிப் பாடுகின்ற கவிஞர், சங்கர நாராயணரைப் பற்றிப் பாடவில்லை என்பது குறிப்பிடத்தக்கது.[58]

**தனிப்பாடல்களில் சங்கர நயினார் கோயில் பற்றிய செய்திகள்**

சங்கரநயினார் கோயிலைச் சார்ந்த மேற்கண்ட தனி இலக்கியங்கள் மட்டுமல்லாமல், நூல்கள் சிலவற்றின் பாடல்களிலும், தனிப்பாடல்கள் சிலவற்றிலும் இத்திருத்தலத்தைப் பற்றிய குறிப்புகள் காணப்படுகின்றன. இவற்றையெல்லாம் தொகுத்தளித்து இறைப்பணியோடு தமிழ்ப் பணி ஆற்றியவர் உ.வே.சாமிநாதையர் அவர்கள். அவ்வாறே சங்கரநயினார் கோயில் பற்றிய இலக்கியங்களே அன்றி வேறு இலக்கியங்களுள் பயின்றுவரும் இக்கோயில் பற்றிய பாடல்கள் குறித்து இனிக் காண்போம்.

**1. தெய்வச் சிலையார் விறலி விடு தூது:**

குமாரசுவாமி அவதானியார் இயற்றிய தெய்வச் சிலையார் விறலி விடு தூது என்ற நூல் சீராசையைச் சிறப்பித்துப் பாடுகிற அப்பாடற்பகுதி வருமாறு :-

**..... ஓங்கும்**

**உருவெழுத வொண்ணா ஒருபொருளை உக்ரப்**

**பெருவழுதி கண்ட பிரானை - மருவுமன்பர்**

**பேராசைக் கேயிணங்கு பெம்மா னை புன்னைவனச்**

சீராசைக் கேசென்று சேவிப்ப - ஓராசை
பற்றி நடந்தேனென் வாக்கியம்பொற் சித்திரைக்
கொற்றவிழாவுக்குக் கொடியேறிப் பொற்றொடிக்கை
ஆவுடைய தேவியுமென் ஐயனுமாய் வெள்விடைமேற்
சேவைதரு நாலாந் திருநாளிற் - கோவிலின்முன்
சந்நிதி வாசலிற்போய்ச் சந்தித்தேன் தெண்டனிட்டேன்
இன்னலெல்லாம் தீர்ந்துகரை யேறினேன் - முன்னவனும்
வீதிவலம் வந்தருளி மீண்டான் திருவாசற்
சோதிமணி மண்டபத்தின் சுற்றெல்லாம் - வேதியரும்
கைவரும் வேறுள்ள கனங்களும் கை கூப்பி நிற்கும்
தெய்வச் சபையின் சிறப்பெளிதோ வெய்ய
பிணிமாற மண்கொடுக்கும் பேருள்ளக் கோமான்
பணிமாறு காலம் பணிந்தேன் தணியாத
ஆனந்தவெள் ளத்தழுந்தினேன்''[59]

மேற்கண்ட பாடற்பகுதி சித்திரைத் திருவிழாவின் நான்காம் நாள் வெள்விடைமேல் இறைவனும் இறைவியும் எழுந்தருளி உலா வருகின்ற திருக்காட்சியைப் புனைந்துரைக்கிறது. சீராசையின் சிறப்புகளில் மிக முக்கியமானதான புற்றுமண்ணின் சிறப்பும் கூறப்பட்டுள்ளது.

டாக்டர் உ.வே.சாமிநாதையர் அவர்கள் சங்கரநயினார் கோயிலைச் சார்ந்த பாடற் பகுதிகள் சிலவற்றையும், தனிப் பாடல்கள் சிலவற்றையும் தொகுத்துப் பதிப்பித்தனர்.[60] இனி அவைகுறித்து நோக்குவோம்.

## வசை விடு தூது

இந்நூல் ஊற்றுமலை ஸமஸ்தானத் தலைவராக இருந்த நவநீத கிருஷ்ண தேவர்மேல் கன்றாப்பூர்க் கவிராயர் இயற்றிய பிரபந்தம். இந்நூலின் பாட்டுடைத் தலைவனான நவநீதகிருஷ்ண தேவன் சீராசையாகிய சங்கரநயினார் கோயிலுக்கு ஆற்றிய பணிகளை எடுத்துக்காட்டும் முகமாக,

''சீராசை யாவுடைய தேவிபுணர் புன்னைவனத்
தாரார் சடையப்பரனுக் கன்புமிகப் பேராது
மிக்கான பூசனைநை வேத்யமறைக் கட்டளையும்
எக்கால முந்தவறா தேநடத்தி...''

எனும் பாடல் அடிகள் வசை விடு தூதில் குறிப்பிடப்பட்டுள்ளன.

***சவ்வாது விடு தூது***

இந்நூல் வடகரை ஜமீந்தாராக இருந்த திரிகூட ராஜகோபால துரையின் மீது பாடப்பெற்ற தூது நூலாகும். இந்நூலின் கீழ்வரும் பாடலடிகள் வடகரை ஜமீன்தாரான திரிகூட இராஜகோபாலதுரையன், சங்கரநயினார் கோயில் இறைவன், இறைவி ஆகியோருக்குத் திருப்பணிகள் நடத்த ஏற்படுத்திய கட்டளைகளைச் சுட்டுகிறது.

.... ''தையலொரு
பாகன் சிவாயப் பரனுக்கும் தென்கூழை
நாகசுனை ஆவுடையாள் நாயகற்கும்
....... நடத்துமறைக் கட்டளைக்கோ''

மேற்கண்ட பாடல்களும், தனிப்பாடல்களும் சங்கரநயினார் கோயிலின் தனிச்சிறப்புகளைப் பொதுவாகத் தொகுத்துரைக்கின்றன.

இவைகளேயன்றித் தனிப்பாடல்கள் இரண்டும் உண்டு. இப்பாடல்கள் சங்கரநாராயணர் சிலை களவு போனபோது அதை மீட்கச் சென்ற பொன்னம்பல பிள்ளை அவர்களால் பாடப்பெற்றவை. இவ்விரு பாடல்களும் அவற்றின் விளக்கமும் இவ்வாய்வேட்டின் இரண்டாம் இயலான 'சங்கர நயினார் கோயில் அமைப்பு' என்பதனுள் விளக்கப்பட்டுள்ளது.

## நாட்டுப்புறப் பாடல்களில் சங்கரநயினார் கோயில்

நாட்டுப்புறப் பாடல்கள் தமக்கெனச் சிறப்பியல்புகள் சிலவற்றைக் கொண்டவை. நாட்டுப்புற மக்களின் உயிர்த்துடிப்புகளும், உணர்வு அலைகளும் அவற்றில் இழையோடுகின்றன. பற்பல பொருள்களை அவை உற்று நோக்குகின்ற கோணங்களும் வெவ்வேறாம்.

வழக்கில் இயல்பாக வழங்குகின்ற பழகு தமிழ்ச் சொற்கள் அழகு பொதிந்த பாடல்களாக அமைகின்றன. இவற்றில் எதுகையும், மோனையும் மிளிர்கின்றன.

இனிமையான ஓசை அமைதி; மயங்க வைக்கும் ஒலிநயம் ஆகியவற்றோடு பண்சுமந்து விளங்குகின்ற பாடல்கள் பல கிடைக்கின்றன.

பாடல்களின் இடையிடையில் மீண்டும் மீண்டும் அடுக்கி வருகின்ற சொற்களும் தொடர்களும் ஒரு தனிச் சிறப்பு. நயமான, மென்மையான நகைச்சுவை ததும்புவது பிறிதொரு சிறப்பு. பழமொழிகளும், வியக்கத்தக்க உவமைகளும் மின்னல் துடிப்புகளைப் போலப் பாடல்களின் அடிகளில் ஒளி தருவது மற்றொரு தனிச் சிறப்பு.

பாடல்கள் இலக்கண வரம்புகளுக்குக் கட்டுப்படாமல் இயங்குவதிலும் ஓர் அழகு இருக்கிறது. பாடல்களில் செயல்நடையும், கருத்தோட்டமும் ஒன்றையொன்று முந்த முயல்கின்றன.

சங்கர நயினார் கோயிலைச் சார்ந்த கீழ்வரும் நாட்டுபுறப் பாடல்களிலும் மேற்கண்ட தனிச் சிறப்புகள் அனைத்தும் பொருந்தியிருக்கின்றன.

## நாட்டுப்புறப் பாடல்கள்

### *மகப்பேறு*

சங்கரநயினார் கோயில் சிறந்த பிரார்த்தனைத் தலமாகும். மகப்பேறு இல்லாதவர்கள் கோமதியைப் பணிந்து வேண்டினால் மகப்பேறு கிடைப்பது

உறுதி என்பது திருநெல்வேலி மாவட்டப் பெரும்பான்மை மக்களின் அசைக்க முடியாத நம்பிக்கையாக உள்ளது.

கோமதியம்மை பிள்ளைப்பேறு வழங்கிய நிகழ்வொன்றின் மீது பாடப்பெற்றதாக வன்னிராசன் கதை எனும் நூல் இன்றும் வழக்கில் உள்ளது. அந்நூல் இவ்வாய்வேட்டின் பின்னிணைப்பாக இணைக்கப் பெற்றுள்ளது.

பிள்ளை வரம் வேண்டி தவசு நோற்ற பெண்ணொருத்தி கோமதி அம்பிகையின் அருளால் பிள்ளையைப் பெற்று மகிழ்கிறார். மலடி என்ற பழிச்சொல் தீர மகவளித்த அம்பிகையின் பேரருளை அப்பெண் பாராட்டுவதாக அமைந்தது கீழ்வரும் பாடல்.

**‘‘புன்னை மரத்தடியிலே**
**பொருந்தித் தவமிருப்பா**
**புன்னை வனம் கண் திறக்க**
**புள்ளை வரம் தந்தாளோ**

**மைந்தனில்லே என்று சொல்லி**
**மடித்தவசும் நாங்களிருந்தோம்**
**மாலை தந்தா வாடுமின்னு**
**மைந்தனையோ தந்தாளோ?**

**பிள்ளை என்று சொல்லி**
**பெருந்தவசும் நாங்களிருந்தோம்**
**பூ தந்தா வாடுமின்னு**
**புள்ளை தந்தாளாம்**

**தங்கக்குடம் கொண்டு**
**தண்ணிக்குப் போகையிலே**
**பொன்னுக்குடை பிடிச்சு**
**சிவசங்கரலிங்கர் பொழுதை**
**மறைச்சாராம்**

நாக சுனையிலே நடுத்தீர்த்தம் ஆடையிலே
பாசி விலகிப் பாலகனைத் தந்தாளே'' [61]

பூவைத் தந்தாலும், மாலையைத் தந்தாலும் அவை வாடிப்போய் விடும் என்பதால் வாடாத பூ, வாடாத மாலையான பிள்ளை வரம் தந்தாளாம் கோமதியம்மை.

கோமதியின் வரத்தால் பிறந்த பிள்ளை வளர்ந்தான். நிலவொளியில் கோமதி பந்தடிக்க, அப்பந்தை எதிர்த்தடிக்கின்றானாம் அப்பிள்ளை.

பட்டுப்போல் நிலவடிக்க
கோமதியாள் பந்தடிக்க
கோமதியாள் பந்தை எதிர்த்தடிக்கப்
பிறந்த கண்ணே!

ஈர்க்கிபோல் நிலவடிக்க
ஈசுவரியாள் பந்தடிக்க
ஈசுவரியாள் பந்தை
எதிர்த்தடிக்கப் பிறந்த கண்ணே! [69]

### *தாலாட்டுப் பாடல்கள்*

''ஆராரோ ஆராரோ ஆரிராரோ ஆராரோ
சீராரும் எங்கள்குல சிகாமணியே ஆராரோ
சங்கரனார் கோவிலிலே சன்னிதியின் மேல் பிள்ளைமரம்
ஐந்து தலைப் பூ நாகம் அஞ்சாமல் பூவெடுக்கும்
அதிகாரம் பெற்ற கண்ணா
தஞ்சம் என்று வந்தவர்க்குத் தலைகாக்கும் புண்ணியரோ
பின்னை ஒரு மரமாம், பின்னைப்பூ ஆயிரமாம்
பின்னை சுத்தி பூ எடுப்பார் தருமரோ உங்களய்யா
தானை ஒரு மரமாம் தானை தழைத்திருப்பது ஆயிரமாம்
அத்தி ஒரு மரமாம், அத்திக்காய் ஆயிரமாம்
அத்தி சுத்தி பூவெடுப்பார் அர்சுனராவார் உங்கய்யா

தோட்டம் திறந்து தொன்னை தைத்துப் பூ எடுத்து
வாழை வெட்டி நார் உரித்து வகை வகையாய்ப் பூத்தொடுத்து
அல்லி அரும்பெடுத்து அடியார்கள் பூசை செய்ய
அடியார் தவத்தினால் அவதரித்த பாலகனே!
சாமி அருளாலே தந்த தவப்பொருளோ
சாதிமான் நித்திரையிலே
பொதுவாய் விளையாட
புறந்த புனக்கிளியோ, புள்ளிமான் நித்திரையே''[63]

தவமிருந்த பெற்ற குழந்தையை ஒரு தாய் தாலாட்டுவதாக இப்பாடல் அமைந்துள்ளது.

கூழைவால் சங்கரலிங்கத்தையும், கோமதியையும் போற்றிக் குழந்தையைத் தாலாட்டுகின்றாள் ஒரு தாய். தெய்வப் பக்தியும், தாய்ப் பாசமும் பாடல்களில் இணைந்து வருகின்றன.

''சங்கரலிங்கமோ தனுக்கோடி ராமலிங்கம்
பூரியத்து லிங்கத்துக்குப் பூசை
செய்யப் பிறந்த கண்ணே!

வெள்ளிக் குஞ்சம் கட்டி கண்ணே! நீ
சங்கரலிங்கத்துக்கு வெள்ளியினால் வீசுகண்ணே!
தங்கக் குஞ்சம் கட்டி கண்ணே - நீ
சங்கரலிங்கத்துக்கு தங்கத்தினால் வீசுகண்ணே!

சங்கரலிங்கமோ தனுக்கோடி ராமலிங்கம்
''கூழைவால் லிங்கத்துக்குப்''
பூசை செய்ய பிறந்த கண்ணே!

தங்கச் சப்பரம் கொண்டு தனிவழி போகையிலே
வெள்ளிச் சப்பரம் கொண்டு வீதிவழி போகையிலே
கோமதி எனக்கு வாச்ச வீமரு
வாராருன்னு வீதியை மறைச்சாளோ?

ஆவுடைத் தவமிருக்கும் மண்டபமோ?
எண்ணெய் கொடமோ
ஆவுடைக்கு எதிரே ஒரு கொடி மரமோ
பச்சை மூங்கில் கட்டி
பழுத்த மூங்கில் நாருரிச்சு
சொச்ச மூங்கில் உரிக்குமுன்னே
சங்கரலிங்கர் சொப்பனமும் கண்டாரோ

காட்டுக் கொடி பிடுங்கி
கால் நீட்டிக் கூடை பின்னி
கூடைமேல் அடை கிடக்கும்
கூழைவால் சங்கரரோ?''[64]

*கற்பனை கலந்த மற்றொரு தாலாட்டுப் பாட்டு வருமாறு :*

''ஆராரோ ஆரிரரோ
என் கண்ணேயுறங்கு கானமயில் வண்டுறங்கு
வெள்ளி அழகுக்கோ! மேகத்து மின்னொளியோ!
கோமதி அம்மனோட பதக்கத்து முத்தொளியோ!
சங்கு முழங்க
தனிச்சங்கு தான் முழங்க
எங்கு முழங்குதுன்னு சங்கரலிங்கம்
எழுந்திருச்சுப் பார்த்தாரோ?''[65]

## தேரோட்டப் பாட்டு

சங்கரநயினார் கோயிலில் ''ஆடித் தவசு'' தேர்த் திருவிழா மிகவும் சிறப்பாக நடைபெறுகின்ற ஒரு விழா.

தேரோட்டம் பற்றிய நாட்டுப்புறப் பாடலொன்று வருமாறு :-

**''முந்தி முந்தி விநாயகரே முருகா! சரஸ்வதியே!**
**தப்பாமல் பாடவேண்டும் என்குருவே**
**ஆனை முகத்தவனே பானை வயித்தோனே**
**பக்தர்களைக் காப்பவனே**
**ஏனென்று கேளுமய்யா எங்க**
**ஏழைமுகம் பாருமய்யா**
**அஞ்சுதேர் ஓடிவரும் அதிகதலம் குத்தாலம்**
**வெங்கலத்தேர் ஓடிவரும் சிவசங்கரனார் சன்னதியிலே**
**ஆடித்தவசு, அருந்தவசு கோமதிக்கு ஆறுசட்டம்**
**நூறுமணி அசையா மணித்தேரு**
**சங்கரனார் சன்னதியிலே**
**அச்சு முறிஞ்சுதுன்னு கோமதி**
**அலைமோதி நின்னாளாம்**
**அச்சு முறியவில்லை, கோமதி அலைமோதி நிற்கவில்லை**
**யாரு வந்தா தேரு வரும், சிவசங்கரரர் வந்தா தேருவரும்**
**தேரு நடத்திவிட தெய்வகுல ஆசாரி**
**தேரு அசைய, மணி குலுங்க**
**கோமதியம்மா தெருவெல்லாம் பூச்சிதற**
**தேசத்தார் எல்லோரும் கையெடுக்க**
**வருவா ரதம் ஏறி ஆவுடைக்**
**கோமதி வருசம் ரெண்டு தேரு ஏறி''**[66]

**ஆவுடையாளே அடைக்கலம்**

சங்கரன்கோயில் மக்களிடையே வழங்கி வரும் பிறிது ஒரு நாட்டுப்புறப்பாடல் ஆவுடையாளே அடைக்கலம் என்பதாகும். எல்லாச் செயல்களுக்கும் காரணமாக நிற்பவளும் காரியமாகத் திகழ்பவளும் அன்னை கோமதி அம்பிகையே. அவளின் திருத்தாள் பணிவாருக்கு இவ்வுலக இடர்கள் அழிந்து பேரின்பம் வாய்க்கும் என்பதைக் கீழ்வரும் பாடல் காட்டுகிறது.

**''ஆயிரங்கால் மண்டபத்தில் பொன்கோட்டூர்**
**அசந்து கண் உறங்கையிலே**
**தம்பட்டக் காளை கொண்டு**
**சங்கரலிங்கம் தட்டி உறுப்பினராம்**
**எண்ணெய்க் கிணராம் ஆவுடைக் கோமதிக்கு**
**எதிரே ஒரு கொடி மரமாம்**
**நித்தம் ஒரு பட்டுடுத்தி ஆவுடைக் கோமதி**
**நேரம் ஒரு பூச்சூடி**
**மாலையும் சந்தனமும் கொடுத்து விட்டார்**
**கோட்டூர் வாங்கி வந்த கொடியேற்றம்**
**ஏழரையாம் கோபுரமாம்**
**ஏறும்பேறா மண்டபமாம்**
**பத்தரையாம் கொடிமரமாம்**
**பாம்பேறா மண்டபமாம்**
**மண்டபத்தின் கீழ் ஆவுடைக் கோமதி**
**மணி விளக்கு நின்னெரிய**

**பச்சிலைகள் வேண்டாம்**
**பலமருந்தும் தான் வேண்டாம்**
**புற்று மருந்தாலே பிணிதீர்ப்பாள் ஆவுடையாள்**
**வண்ண எழுத்துக்களாம்**
**வடசீமை அச்சுக்களாம்**

தென்னங் கழுகுகளாம்

ஆவுடைக் கோமதி தேசம் விளையாடிவர

தாம்பளமும் கொண்டு சங்கரலிங்கத்துக்கு

தவுந்த சுருளும் கொண்டு

திருக்கண்ணத் திறந்து

திருக்காட்சியைத் தந்தாராம்

மாடப்புறாவே மழைக்கெல்லாம் எங்கிருந்த?

கோலச் சிறகு கொடுக்கி கோமதியாள்

கோபுரத்தின் கீழிருந்தேன்

ஆடப்புறாவே அடமழைக்கு எங்கிருந்த?

வண்ணச் சிறகு ஒடுக்கி ஆவுடையாள்

மண்டபத்தின் கீழிருந்தேன்''[67]

எல்லோருக்கும் அடைக்கலம் தருகின்ற ஆவுடையாளின் அருள் திறமும், புற்றுமண்ணின் பெருமையும் மேற்கண்ட பாடலில் கூறப்பெற்றுள்ளன.

## நாட்டுப்புறப் பாடல்கள் - சில குறிப்புகள்

1. சங்கர நயினார் கோயிலைச் சார்ந்த நாட்டுப்புறப் பாடல்கள், சங்கரலிங்க சுவாமியை விடக் கோமதியம்பிகையை உயர்த்திப் பெருமையுடன் போற்றுகின்றன.

2. சிறுமி கோமதி, நிலவொளியில், ஒரு குழந்தையுடன் பந்தாடுகின்ற காட்சி நயமான கற்பனையாகும். நாட்டுப்புற மக்கள் இவளைத் தம் குடும்பத்தினருள் ஒருத்தியாகவே நினைக்கின்றனர் என்பது அவர்தம் வாய்மொழிப் பாடல்கள் உணர்த்துகின்றன.

3. நோய்களை விரட்டுகின்ற புற்றுமண், நாகசுனையின் பெருமைகளையும் பாமர மக்கள் மறவாமல் பாடுகின்றனர்.

4. ''கூழைவால் சங்கரலிங்கம்'' என்ற தொடர் அருமையானது. கூழைவால் குட்டையான வாலைக் கொண்ட பாம்பு (அன்மொழித் தொகை). இது படமெடுத்துக் குடை பிடிக்க வீற்றிருக்கின்றவர் சங்கரலிங்கர். கூழைப் பாம்பைப் பற்றிய விளக்கம் முதலியலில் கூறப்பெற்றுள்ளது.

**கதைப்பாடல்**

**கோமதி அம்மன் கதை**

''கோமதி அம்மன் தல மகிமை அம்மானை'' என்பது நூலின் பெயர். இந்த அம்மானை இலக்கியத்தை இயற்றியவர் இராமலிங்கம் பிள்ளையவர்கள். 2400 அடிகளைக் கொண்ட விரிவான நூல் இது. 1896ஆம் ஆண்டு மதுரையில் அச்சிடப்பட்டதாகத் தெரிகிறது. இக்கதைப் பாடல் கோமதி அம்மனின் 'ஆடித்தவசு' சிறப்பினை விளக்குகின்றது.[68]

ஏட்டிலக்கியங்களும், ஏட்டில் எழுதா இலக்கியங்களும் சங்கரலிங்க சுவாமியையும், கோமதியம்பிகையையும் சிறப்பிக்கின்றன. இவ்விலக்கியங்களின் வழி இக்கோயில் பற்றிய வரலாறு, மக்கள் நம்பிக்கை, இக்கோயிலில் நடைபெறும் திருவிழாக்கள், சடங்குகள் ஆகியன நன்கு புலப்படுகின்றன. இக்கோயிலைச் சுற்றியுள்ள மக்களின் வாழ்வியலை வரையறை செய்வதற்கு உரிய ஆய்வு மூலங்களாகவும் இவ்விலக்கியங்கள் திகழ்கின்றன என்பதில் ஐயமில்லை.

# தொகுப்புரை

1. சங்கர நாராயண சுவாமி கோயிற் புராணம் என்ற தல புராணம் ஒன்றும், சங்கரலிங்க உலா முதலிய சிற்றிலக்கியங்கள் ஏழும், பிற இலக்கியங்களில் பயின்றுவரும் பாடல்கள் சிலவும், தனிப்பாடல்கள் சிலவும் சங்கரன் கோயிலைச் சார்ந்த இலக்கியங்கள் ஆகும்.

2. மேற்கண்ட இலக்கியங்களால் சங்கரலிங்க சுவாமிகளின் கோயிலைப் பற்றிய வரலாற்றையும், சங்கரன் கோயிலில் வாழும் மக்களின் வாழ்வியலையும் அறிய முடிகிறது.

3. திருத்தலத்தைப் பற்றிய இலக்கியங்கள், இத்திருத்தலத்தின் தோற்றத்தையும், அரசன், ஜமீன்தார் முதலிய அடியார் இக்கோயிலுக்குச் செய்த வளர்ச்சிப் பணிகள் ஆகியவற்றையும் விளக்குகின்றன.

4. தல புராணம் விரித்துக் கூறுகின்ற இக்கோயில் பற்றிய பல்வேறு செய்திகளை மற்ற நூல்கள் தொகுத்தும் சுருக்கியும் கூறுகின்றன.

5. திருத்தலத்தைப் பற்றிய அரிய குறிப்புகள் பல சங்கரலிங்க உலாவில் அதிகமாகக் காணப்படுகின்றன. எனவே இவ்வுலா நூல் சங்கரநயினார் கோயில் வரலாற்று ஆய்வுக்கு சிறந்த ஆய்வுமூலமாகத் திகழ்கிறது.

6. உக்கிர பாண்டியன், வீரசேனன், முசுகுந்தன், இராம பாண்டியன் முதலிய மன்னர்களைப் பற்றிய வரலாற்றுக் குறிப்புகளும், வடமலையப்பப் பிள்ளையனைப் பற்றிய குறிப்புகளும் இக்கோயில் மீது பாடப் பெற்றுள்ள இலக்கியங்களில் காணப்பெறுகின்றன. எனவே இந்நூல்கள் பக்தி இலக்கியங்களாக மட்டுமேயன்றி வரலாற்று மூலங்களாகவும் திகழ்வது அறிய வேண்டியதாம்.

7. சங்கரன் கோயிலைப் பற்றிய நாட்டுப்புறப் பாடல்களும் இக்கோயில் பற்றிய அரிய செய்திகளைக் கூறுகின்றன.

# குறிப்புகள்

1. சங்கர நாராயண சுவாமி கோயிற் புராணம், மு.ரா.அருணாசலக் கவிராயர் (அரும்பதவுரையாசிரியர்) நூலின் முகப்புப் பக்கம்.
2. சங்கரநாராயணசுவாமி கோயிற்புராணம், திருநதிச் சருக்கம், பா.5.
3. சங்கரநாராயணசுவாமி கோயிற்புராணம், திருநாட்டுச் சருக்கம், பா.25.
4. தாயுமான சுவாமி பாடல்கள், பராபரக்கண்ணி, 156.
5. சங்கரநாராயண சுவாமி கோயிற்புராணம், தலவிசேடச் சருக்கம், ப.18.
6. சங்கரநாராயணசுவாமி கோயிற்புராணம், தீர்த்த விசேடச் சருக்கம், பா.19.
7. சங்கரநாராயண சுவாமி கோயிற்புராணம், மூர்த்தி விசேடச் சருக்கம், பா.1.
8. சங்கரநாராயணசுவாமி கோயிற்புராணம், சங்கர நாராயணச் சருக்கம், பா.68.
9. சங்கரநாராயண சுவாமி கோயிற்புராணம், வீரசேனன் பிணி தீர்ந்த சருக்கம், ப.48.
10. சங்கரலிங்க உலா, கண்ணிகள் 1-34.
11. மேற்படி, கண்ணிகள், 13-14.
12. மேற்படி, கண்ணி 26.
13. மேற்படி, கண்ணி 27.
14. மேற்படி, கண்ணிகள், 39-40.
15. மேற்படி, கண்ணிகள் 47-75.
16. மேற்படி, கண்ணிகள், 76-108.
17. மேற்படி, கண்ணிகள், 109-113.

18. மேற்படி, கண்ணிகள் 137,143 (2) கண்ணிகள் 34, (3) கண்ணிகள் 87, 246, (4) கண்ணி 306.

19. மேற்படி கண்ணி (1) 6.

20. மேற்படி (1) கண்ணிகள் 28, 138.

21. மேற்படி (1) கண்ணிகள் 30, 180 (2) கண்ணி 31 (3) கண்ணி 32 (4) கண்ணி 34.

22. மேற்படி (1) கண்ணிகள் 8, 43, 104, 143 முதலியன (2) கண்ணி 30.

23. மேற்படி, கண்ணி 39.

24. மேற்படி, கண்ணிகள் 261-265.

25. மேற்படி, கண்ணிகள், 23,287.

26. மேற்படி, கண்ணி 110.

27. மேற்படி, கண்ணிகள் 111; 135-136.

28. மேற்படி, கண்ணிகள், 181-182.

29. மேற்படி, கண்ணி 162.

30. மேற்படி, கண்ணிகள் 283-288.

31. தண்டியலங்காரம், நூற்பா 92.

32. சங்கர நயினார் கோயில் அந்தாதி (1) பாடல்கள் 5,7,17,39,68 (2) பாடல் 30 (3) பாடல்கள் 8, 19 (4) பாடல் 72.

33. மேற்படி, பாடல் 54.

34. மேற்படி, (1) பாடல் 14 (2) பாடல்கள் 7,17 (3) பாடல் 16, (4) பாடல் 13 (5) பாடல் 1, (6) பாடல் 98.

35. மேற்படி (1) பாடல் 31 (2) பாடல்கள் 33, 77 (3) பாடல் 51.

36. மேற்படி, பாடல் 98.

37. மேற்படி பாடல்கள் 5,8,9,11,16,17 முதலியன.

38. மேற்படி, பாடல் 77.

39. சீனிவாசன், அரங்க அருட்கவி , காவடிச் சிந்தும் கவிஞன் வரலாறும், , ப.68.

40. கோமதி அந்தாதி, பாடல் 4.

41. கோமதியம்பிகைப் பிள்ளைத் தமிழ் வருகைப்பருவம், பாடல் 56.

42. கோமதியம்பிகைப் பிள்ளைத் தமிழ், முத்தப்பருவம், பா.45.

43. கோமதியம்பிகைப் பிள்ளைத் தமிழ், அம்புலிப்பருவம், பா.68.

44. பாரதியார் பாடல்கள், பக்திப் பாடல்கள், எண்.21, சக்தி, பாடல் 1.

45. மேற்படி, எண்.42, கோமதி மகிமை, பாடல் 2.

46. மேற்படி, எண்.43, கோமதி மகிமை, பாடல் 3.

47. மேற்படி, பாடல் 4.

48. கோமதி சதரத்ன மாலை, பாடல் 10.

49. மேற்படி, பாடல் 28.

50. மேற்படி, பாடல் 19.

51. மேற்படி, பாடல் 99.

52. சங்கர சதாசிவ மாலை, பாடல் 12.

53. மேற்படி, பாடல் 23.

54. மேற்படி, பாடல்கள் 8,15,35.

55. மேற்படி, பாடல்கள் 9,20,30.

56. மேற்படி, பாடல்கள் 16,37.

57. மேற்படி, பாடல் 15.

58. மேற்படி, பாடல்கள் 2,7,10.

59. தெய்வச் சிலையார் விறலி விடு தூது, கண்ணிகள்.

60. சாமிநாதையர், உ.வே., (ப.ஆ.), சங்கரலிங்க உலா, ப.41-46.

61. திருமதி.பாஞ்சாலி, சங்கரன் கோயில் கூறிய பாடல், நாள்.6.5.1998.

62. திருமதி.கிருஷ்ணம்மாள், சங்கரன் கோயில், கூறிய பாடல், நாள் 7.5.1999.

63. திருமதி.வேலம்மாள், கீழ்வயலிகிராமம், கூறிய பாடல், நாள் 8.5.1999.

64. திருமதி அன்னம்மாள், கீழ்வயலிகிராமம், கூறிய பாடல் நாள் 9.6.1999.

65. திருமதி. பாண்டியன், வீரியிருப்பு, கூறிய பாடல், நாள் 18.5.1997.

66. திருமதி. ஆறுமுகம்மாள், வயலி, கூறியபாடல், நாள் 5.5.1999.

67. திருமதி. லட்சுமி, வயலி, கூறியபாடல், நாள் 7.2.1999.

68. சண்முக சுந்தரம், சு., டாக்டர், நாட்டுப்புற இலக்கிய வரலாறு, ப.145.

# இயல் ஐந்து

# சைவ - வைணவ ஒருமைப்பாடும் சங்கரநயினார் கோயிலும்

சமய ஒருமைப்பாட்டில் சங்கரநயினா'ர் கோயிலின் பங்கை உணர்த்தும் வகையில் இவ்வியல் மூன்று பகுதிகளாகப் பிரிக்கப்பட்டுள்ளது.

இலக்கியங்களில் சிவன், திருமால், சங்கரநாராயணனரைப் பற்றிய குறிப்புகளும், சங்கர நாராயணரின் கற்சிலைகள் சில எழுந்தருளியுள்ள இடங்களும் அவரது திருத்தலங்களும் முதற்பகுதியில் ஆய்வு செய்யப்பட்டுள்ளன.

பல நூற்றாண்டுகளுக்கு முன் சைவ, வைணவ சமயங்கள் பல காரணங்களால் முரண்பட்டன. அக்காரணங்களையும், அம்முரண்பாடுகளையும் அகற்ற வேண்டும் என்பதற்காக முன்னோர் மேற்கொண்ட பல வகை முயற்சிகளையும் இரண்டாம் பகுதி விளக்குகின்றது.

மேற்கண்ட கருத்துகளை அடிப்படையாகக் கொண்டு, சமய ஒருமைப் பாட்டில் சங்கரநயினார் கோயிலின் பங்கை மூன்றாம் பகுதி மதிப்பீடு செய்கின்றது.

## இலக்கியங்களில் சிவன், திருமால் (நாராயணர்)

பழங்காலத் தமிழ் மக்கள் வழிபட்ட தெய்வ வடிவங்களை இலக்கியங்களின் மூலமாக அறிய முடியும். அந்தக்காலத்தில் சங்கர நாராயண வடிவமும் வழிபாட்டில் இருந்தது என்று எடுத்துக்காட்ட இலக்கியச்சான்று உள்ளது.

**சங்கப்பாடல்களில் சிவனும், திருமாலும்**

சங்க காலச் சமுதாயத்தினர் சிவனையும், திருமாலையும் சிறப்பாக வழிபட்டனர். சக்தி வழிபாடும் இருந்தது. இம்மூவருள் தலைமையானவர் சிவன்.

பின்னர் அவர்கள் 'இருபெருந்தெய்வங்களை' ஒருருவில் இணைத்து வழிபட விழைந்தனர். இத்தகைய இணைப்பால் அவ்விரு தெய்வங்களின் ஆற்றல்களும் இருமடங்காகப் பெருகும் என்று நம்பினர் போலும். எனவே, சிவனும் சக்தியும் இணைந்த வடிவம் அர்த்தநாரி வடிவமாயிற்று; சிவனும் திருமாலும் இணைந்த வடிவம் சங்கர நாராயண வடிவமாயிற்று. இவ்வாறு படைக்கப் பெற்றுள்ள தெய்வத்திரு வடிவங்கள் புதுமைப் பொலிவுடன் திகழ்கின்றன.

சங்கர நாராயண வடிவத்தை அகநானூறு முதன் முதலில் சுட்டுகிறது.

**‘‘வெருவரும் கடுத்திறல் இருபெருந் தெய்வத்**

**துருவுட னியைந்த தோற்றம் போல**

**அந்தி வானமொரு கடலணி கொளாஅ**

**வந்த மாலை’’.[1]**

சிவப்பு நிறச் சிவனும், நீல நிறத்திருமாலும் ஆகிய இருபெருந் தெய்வங்களும் வடிவத்தால் ஒருவராக இணைந்து இருப்பதைப் போல அந்தி வானமும், கடலும் இயைந்து அழகுறத் தோன்றினவாம். பொருத்தமான இந்த உவமையில் சங்கர நாராயண வடிவம் வருணிக்கப் பெற்றுள்ளது. இந்த வருணனையில் வடிவத்தின் பெயர் குறிக்கப்படவில்லை. பெயர் சுட்டப்படாத (இந்த சங்கர நாராயணர்) வடிவம் தொன்மை வாய்ந்தது. இது பழங்காலத்தில் ஓவியத்தில் வரையப்பட்டிருக்கலாம்; சுதையில் வனையப்பட்டிருக்கலாம். எனவே இலக்கியத்தில் ஏறி ஏற்றம் பெற்றது போலும். என்றாலும் இவ்வடிவத்தின் தொன்மைக்காலச் சான்று எதுவும் இப்போது கிடைக்கவில்லை.

### கடவுள் வாழ்த்துகள்

பாரதம் பாடிய பெருந்தேவனார் புறநானூறு, அகநானூறு, ஐங்குறுநூறு ஆகிய மூன்று நூல்களின் கடவுள் வாழ்த்துக்களில் சிவனையும் நற்றிணையில் திருமாலையும் போற்றும் இவரே குறுந்தொகையில் முருகனையும் வழிபடுகிறார். இவற்றை உற்றுநோக்கும் போது பழங்காலத் தமிழர் இம்முப்பெரும் தெய்வங்களையும் சிறப்பாக வழிபட்டனர் எனக் கருத முடியும்.

### மும்மூர்த்திகள்

பிரமன், திருமால், உருத்திரன் (சிவன்) ஆகிய இம்மூவரும் மும்மூர்த்திகள் என வழங்குதல் இக்கால மரபு. இவர்கள் முறையே படைத்தல், காத்தல், அழித்தல் என்ற முத்தொழில்களைப் புரிகின்றனர் என்பது நம்பிக்கை. இம்மூவரையும் பரிபாடல் ஒருங்கே குறித்துள்ளது.[2] இம்மூவருக்கும் தனிப்பெருஞ்சிறப்பும் இருந்தது.

### பலர்புகழ் மூவர்

> ''உலகம் காக்கும் ஒன்றுபுரி கொள்கைப்
> பலர்புகழ் மூவரும் தலைவராக.''[3]

என்று திருமுருகாற்றுப்படை திருமால், சிவன், இந்திரன் ஆகியோர் மூவரையும் ''பலர்புகழ் மூவர்'' என்று சிறப்பித்தது. இம்மூவரையும் சங்க கால மக்கள் போற்றி வழிபட்டனர். காலப்போக்கில் இந்திர வழிபாடு செல்வாக்கிழந்தது.

### தேஎலா நல்லிசை நால்வர்

திருமால், பலராமன், சிவன், முருகன் ஆகியோர் ''தேஎலா நல்லிசை நால்வர்'' ஆவர். 'பாண்டியன் இலவந்திகைப் பள்ளித் துஞ்சிய நன்மாறன் சினத்தால் சிவன். வலிமையால் பலராமன், பகைவரைக் கொல்வதால் மாயோன்; கருதியதை முடிப்பதால் முருகன்' என்று நக்கீரரால் பாராட்டுப்படுகின்றான்.[4]

சிவனும், திருமாலும் ஒத்த பெருமையுடையவர்களாக மதிக்கப்பட்டனர். இவர்களுக்குள் வேற்றுமையோ, ஏற்ற இறக்கமோ காணப்படவில்லை. மற்றும், சங்கப்பாடல்கள் சிவனையும், திருமாலையும் இணையாக, ஒரே வடிவத்தில் இணைத்தும் காட்டியுள்ளன.

**சிலப்பதிகாரத்தில் சிவனும், திருமாலும்**

சிலப்பதிகாரம் சங்கரநாராயண வடிவத்தைக் குறிக்கவில்லை. ஆனால், அவர்களை இணையாக வைத்துப் போற்றுகிறது.

ஆறு சமயங்களில் காணபதியம் தவிர மற்ற ஐந்து சமயங்களின் பரம் பொருள்களை இளங்கோ அடிகளார் சிறப்பாகப் போற்றுகின்றார். குறிப்பாக, அவர் சைவ, வைணவச் சமயங்களை, அவற்றின் பரம்பொருள்களைப் பாராட்டுவதைச் சிலம்பில் பல இடங்களில் காணமுடிகிறது.

சிலப்பதிகார காலத்தில் சமயங்களுக்கிடையில் முரண்பாடுகள் இருந்ததாக அறிய முடியவில்லை. சமண சமயம் சார்ந்த இளங்கோஅடிகள் சைவ வைணவம் உள்ளிட்ட பிற சமயங்களையும் சிறப்பித்துப் பாடியுள்ளார். இவர் சிலப்பதிகாரத்தில் சிவன், திருமால், பலராமன், முருகன், அருகன் ஆகிய தெய்வங்களையும் பத்தினிக்கோட்டம், சோமசூரியகுண்டங்கள் ஆகிய கோயில்களையும் விளக்குகிறார்.

> **''நுதல்விழி நாட்டத் திறையோன் கோயிலும்**
> **உவணச் சேவல் உயர்ந்தோன் நியமமும்''**[5]

மதுரையில் சிவன் கோயிலும், திருமால் கோயிலும் இருந்தன என்பதை அடுத்தடுத்த அடிகளில் சுட்டுகிறார்.

**திருமேனிகள்**

சிவன், திருமால் ஆகியோரின் திருமேனிகளையும், அவருள் ஒருவருக்கும் ஏற்றம் ஏற்படாதபடி நிகராக வருணிக்கிறார்.

சிவன் - ‘‘பிறவா யாக்கைப் பெரியோன்’’[6]

திருமால் - ‘‘நீலமேனி நெடியோன்’’[7]

பெரியோன் - நெடியோன் என்பன ஒத்த பொருளுடையன. ‘‘பிறவா யாக்கை - ‘‘நீலமேனி’’ - என்ற தொடர்கள் அவர்களது திருமேனிச்சிறப்பைப் புலப்படுத்துகின்றன.

**மந்திரங்கள்**

‘‘அருமறை மருங்கின் ஐந்தினும் எட்டினும்
வருமுறை எழுத்தின் மந்திரம் இரண்டும்’’[8]

என்று சிவனுக்குரிய ஐந்தெழுத்து மந்திரத்தையும், திருமாலுக்குரிய எட்டெழுத்து மந்திரத்தையும் ஒருங்கே வைத்துச் சிறப்பித்துள்ளார். ஐந்தெழுத்து மந்திரமாவது ‘நமசிவாய’ என்பதாம். எட்டெழுத்து மந்திரம் ‘ஓம் நாராயணாயநமக’ என்பதாம். அவர் காலத்தில் இம்மந்திரங்கள் இரண்டும் பெருவழக்காக இருந்தன என்பது புலனாகிறது.

**பிரசாதங்கள்**

சேரன் செங்குட்டுவன் வடதிசை நோக்கிச் செல்லும்முன் சிவனை வணங்கிச் சிவப்பிரசாதத்தைத் தலைமுடிமேல் ஏந்தினான். இவன் சைவன் என்பது இதன் வழிப் புலப்படுகிறது. அடுத்து திருமால் பிரசாதத்தைத் தன் தோள்மேல் தாங்கினான்[9] என்பதால் இவன் சமயப் பொதுநோக்குடையவன் என்பது அறியப்படுகிறது.

**சைவ அடியார்களின் பாடல்களில் சங்கர நாராயணர்**

மேற்கண்டவை அனைத்தும் சைவம், வைணவம் உள்ளிட்ட சமயங்கள் எவ்விதப் பேத உணர்வுமின்றி சமுதாய வழக்கில் இருந்த என்பதை ன உணர்த்துகின்றன.

இத்தகு சான்றுகளால் சிலப்பதிகார காலத்தில் மக்களிடையே பல்வேறு சமயங்கள் வழக்கில் இருந்தன என்பதும் ஆனால் அவற்றுள் எவ்வித பிணக்கமோ, முரணோ ஏற்படவில்லை என்பதும் புலனாகிறது.

சிலப்பதிகார காலத்திற்குப்பின் தமிழின மூவேந்தர் ஆட்சி வீழ்ந்து களப்பிரரான பிற இனத்தார் ஆட்சி எழுந்தது. மக்களிடையே பிற இனப்பண்பாடு கலந்ததும் இக்காலமே. இக்காலம் பற்றிய முடிந்த முடிபான வரலாறு இன்றுவரை அறியப்படவில்லை. என்றாலும் களப்பிரர் காலத்திற்குப்பின் எழுந்த இலக்கியங்கள் மக்களிடையே சமயப்பிணக்கும் போராட்டமும் காழ்கொண்டு வளர்ந்திருந்ததைக் காட்டுகின்றன. சமணம், பௌத்தம் முதலான புறச்சமயங்களோடு மட்டுமேயன்றி இம்மண்ணில் முகிழ்த்து எழுந்த சைவ, வைணவ முதலான சமயங்கள் இடையேயும் பேதங்கள் தலையெடுத்தன. ஒரு சமயத்தார் பிற சமயத்தாரை வெறுத்தனர். பகை வளர்ந்தது. இவ்வாறு சமய பேத உணர்வால் போராட்டங்கள் ஒரு புறம் எழ, அவற்றை அகற்ற வேண்டும் என்ற முயற்சிகளும் மறுபுறமிருந்தன. காலங்கடக்க, முரண்பாடுகள் பெருகின; இணக்கம் எளிதில் ஏற்படவில்லை. ‘‘முரண்பாடுகளும்’’, ‘‘முயற்சிகளும்’’ தொடர்ந்து போரிட்டன. முரண்பாடுகள் முற்றின; முயற்சிகள் பயனளிக்கவில்லை. பக்தி இயக்கக் காலத்தின் தொடக்கத்தில் இம்முரண்களைப் போக்க இறையடியாளர்கள் முயன்றனர்.

சைவமும், வைணவமும் வெவ்வேறு சமயங்கள் அல்ல. அவையிரண்டும் ஒன்றே என்ற கருத்தினைத் தம் பாடல்கள் வழிச் சமுதாயத்தில் பரப்பினர். இரு சமயங்களும் ஒன்றே எனக் காட்ட அவர்கள் கையாண்ட உத்திகளில் ஒன்று, இரு சமயங்களுக்கும் உரிய இறைவன் திருவுருவங்களை இணைத்துப் புதிய இணைப்பு வடிவம் உருவாக்கியது ஆகும். அவ்விணைப்பு வடிவங்களைத் தேவார முதலிகளும், வைணவ ஆழ்வார்களும் பாடியுள்ளனர். அவற்றினை இனிக் காண்போம். தேவாரம் முதலிய சைவ இலக்கியங்கள் மகேசுவர வடிவங்கள் பலவற்றைப் புனைந்துரைக்கின்றன. சங்கர நாராயணர் வடிவம் அத்தகு மகேசுவர வடிவங்களில் ஒன்று.

நாயன்மார்களில் காலத்தால் முந்தியவர், காரைக்காலம்மையார். இவர் சங்கர நாராயண வடிவத்தை

**''ஒருபால் உலகளந்த மாலவனாம் மற்றை**

**ஒருபால் உமையவளாம்''[10]**

என்று வருணித்தார். இந்த அடிகளுக்கு இரண்டு முறைகளில் பொருள் கூறலாம் (1) சிவனின் வலப்பக்கத்தில் திருமால் இருப்பதாகக் காட்டுவது ஹரிஹர வடிவம்; சிவன் - இடபாகத்தில் திருமால் இருப்பதாகக் காட்டுவது சங்கரநாராயணர் வடிவம். (2)சிவனின் இடப்பக்கத்தில் உமையவள் இருப்பதாகக் காட்டுவது அம்மையப்பர் (அர்த்தநாரி) வடிவம். எனவே மேற்காட்டிய பாடல் (1) ஹரிஹர வடிவம், (2)சங்கநாராயணர் வடிவம் (3) அம்மையப்பர் வடிவம் ஆகிய மூன்று வடிவங்களையும் உணர்த்துகிறது எனலாம். மேலும் 'உலகளந்த' என்ற அடைமொழி திருமாலின் திரிவிக்கிரம அவதாரத்தைக் குறிப்பதும் இங்குக் குறிப்பிடத்தக்கது.

அடுத்து, சங்கர நாராயண வடிவத்தை

**''மாலுமோர் பாக முடையார்''[11]**

**''பாதியாயுடன் கொண்டது மாலையே[12]**

என்று திருஞானசம்பந்தரும்,

**''மாலொரு பாகமாக மகிழ்ந்த நெய்த்தான னாரே''[13]**

**''காவியங் கண்ண னாகிக்**

**கடல்வண்ண மாகி நின்ற**

**தேவியைப் பாகம் வைத்தார்**

**திருப்பயற் றூர னாரே' '[14]**

என்று திருநாவுக்கரசரும் வருணித்துள்ளார். இவர் திருமாலைச் சிவனின் ''தேவி'' என்று குறித்திருப்பது உற்றுநோக்கத்தக்கது.

**இடமால் வலத்தான் இடப்பால்**

**துழாய்வலப் பாலொண் கொன்றை**

**வடமா லிடந்துகில் தோல்வலம்**

**ஆழி யிடம்வ லம்மான்**

**இடமால் கரிதால் வலஞ்சே**

**திவனக் கெழில்ந லஞ்சேர்**

**குடமால் இடம்வலங் கொக்கரை**

**யாமெங்கள் கூத்த னுக்கே.**[15]

என்று சேரமான் பெருமாள் நாயனார் சங்கர நாராயண வடிவத்தைப் போற்றிப் பாடியுள்ளார். சேரமான் நாயனார் இதே வடிவத்தை ''வலந்தான் கழல்'' என்ற மற்றொரு பாடலிலும் புனைந்துள்ளமையும் இங்குக் குறிப்பிடத்தக்கது.[16]

இவ்வாறு சைவ இலக்கியங்கள் பலவற்றில் சங்கர நாராயண வடிவ வருணனைகள் காணப்படுகின்றன.

**ஆழ்வார் பாசுரங்களில் சங்கர நாராயணர்**

சங்கர நாராயணர் வடிவம் சிவ வடிவமாம். சிவனின் இடப்பக்கத்தில் இணைந்திருக்கின்றவன் நாராயணன். இந்த வடிவத்தின் அழகால் ஈர்க்கப்பட்ட ஆழ்வார்களும் சங்கர நாராயணர் வடிவத்தைச் சிறப்பித்துப்பாடியுள்ளனர். பொய்கையாழ்வார்,

**''அரன்நா ரணன்நாமம், ஆன்விடை புள்ளூர்தி**

**உரைநூல் மறையுறையும் கோயில் - வரைநீர்**

**கருமம் அழிப்பளிப்புக் கையதுவேல் நேமி**

**உருவமெரி கார்மேனி ஒன்று''**[17]

பொன்திகழு மேனிப் புரிசடையம் புண்ணியனும்

நின்றுலகம் தாய நெடுமாலும் - என்றும்

இருவரங் கத்தால் திரிவரேனும் ஒருவன்

ஒருவனங்கத் தென்று முளன்'' [18]

என்ற இருபாசுரங்களில் சங்கர நாராயண வடிவத்தை வருணித்துள்ளார்.

''தாழ்சடையும் நீண்முடியும் ஒண்மழுவும் சக்கரமும்

சூழரவும் பொன்னாணும் தோன்றுமால் - சூழும்

திரண்டருவி பாயும் திருமலைமேல் எந்தைக்கு

இரண்டுருவு மொன்றாய் இசைந்து'' [19]

என்ற திருப்பாசுரத்தை அருளியவர் பேயாழ்வார். இவர் இப்பாசுரத்தில் சங்கர நாராயணர் வடிவத்தைப் போற்றியுள்ளமையைக் காணலாம்.

முதலாழ்வார் மூவரில் பொய்கையாழ்வாரும், பேயாழ்வாரும் சங்கர நாராயணரைப் புனைந்து பாடினர். பூதத்தாழ்வார் பாடவில்லை.

சங்கர நாராயணரை வருணிக்கின்ற மேற்கண்ட பாசுரங்களில் சிவனைப்பற்றிய வருணனைத் தொடர்கள் முதலில் இருக்கின்றன. அடுத்து நாராயணனைப் பற்றிய வருணனைத் தொடர்கள் தொடர்கின்றன. இவ்வாறு ஆழ்வார்களின் பாசுரங்களில் சிவனுக்கு முதன்மை இருப்பதை உணர முடிகிறது.

அடுத்து, திருமங்கையாழ்வாரும்,

''பிறைதங்கு சடையானை வலத்தே வைத்து'' [20]

''கண்ணுதல் கூடிய அருத்தனை'' [21]

வாசவார் குழலாள் மலைமங்கை தன்

பங்கனை பாங்கில் வைத் துகந்தான் தன்னை'' [22]

என்று சங்கர நாராயண வடிவத்தைக் குறிப்பிட்டுள்ளார்.

நம்மாழ்வாருக்கும் சங்கர நாராயண வடிவத்தின் மீது மிக்க ஈடுபாடு உண்டு என்பதை,

**''மாகத் திளமதியம் சேரும்**

**சடையானைப் பாகத்து வைத்தான்.**[23]

**''தடம்புனல் சடைமுடியன் தனியொரு**

**கூறமர்ந்துறையும் உடம்புடையான்''**[24]

என்ற அவர்தம் பாடல்கள் மூலம் வெளிப்படுகின்றது. இவ்வாறு ஆழ்வார்கள் பலர் சங்கர நாராயண வடிவத்தை விவரித்துள்ளனர்.

சங்கர நாராயண வடிவம் பழமையானது என்பதும், இதனைப் பக்தர்கள் வழிபட்டனர் என்பதும், இருபெருந் தெய்வங்களைத் தனித்தனியாகவும், ஒருங்கிணைத்தும் இருசமயச் சான்றோர் போற்றினர் என்பதும், சைவ வைணவ முரண்பாடுகளை நீக்க இதனை ஒரு கருவியாகப் பயன்படுத்தினர் என்பதும், இந்த வடிவம் இரு சமய ஒருமைப்பாட்டின் சின்னம் என்பதும் தெளிவாகத் தெரிகின்றன.

**கம்பர்**

சங்கரனும், நாராயணனும் என்றென்றும் நிகரானவர்கள். எக்காரணத்தை முன்னிட்டும் அவர்களுக்குள் ஏற்ற இறக்கங்களைக் கற்பிக்கக் கூடாது என்று கம்பரும் வலியுறுத்துகிறார்.

**''அரனதிகன் உலகளந்த அரியதிகன்**

**என்றுரைக்கும் அறிவிலோர்க்குப்**

**பரகதிசென் றடைவ தரிய பரிசு''**[25]

அரனே உயர்ந்தவன், அரியே உயர்ந்தவன் என்று உயர்த்திக் கூறுகின்றவர்கள் அறிவற்றவர்கள்; அவர்களுக்குப் பரகதி கிடைக்காது. எனவே, அரன், அரி இருவரும் இருவரல்லர் ஒருவரே என்பது கம்பரின் முடிபு.

இவ்வாறு சான்றோர்களின் புனைந்துரைகளால் சங்கர நாராயண வடிவத்தின் பெருமைகள் மேன்மேலும் சிறந்தன. இதனால்,

''அரியும் சிவனும் ஒண்ணு
அறியாதவர் வாயில் மண்ணு''

என்ற பழமொழியும் தோன்றியது. இதன் மூலம் சமய பேதம் என்பது சிறு பிள்ளை விளையாட்டே என்ற ஓர் அரிய தத்துவத்தைப் பாமர மக்களும் எளிதில் புரிந்து கொண்டனர்.

**பள்ளு**

இரு சமய ஒருமைப்பாட்டை அழுந்த வற்புறுத்துகின்ற மற்றொரு நூல் முக்கூடற்பள்ளு. இது உழவர் வாழ்க்கையைப் பின்னணியாகக் கொண்ட ஒரு சிறு பிரபந்த நாடகம்.

பாடற் தலைவனான பள்ளனுக்கு இருமனைவியர். ஒருத்தி வைணவ சமயத்தையும் மற்றொருத்தி சைவ சமயத்தையும் சார்ந்தவர்.

இருவருக்கும் ஒரு முறை சண்டை வந்தது. இருவரும் ஒருவரையொருவர் பழித்துக் கொண்டனர். முடிவில் அவர்களது ஏசல் அவரவர் வழிபட்ட தெய்வங்களின்மேல் திரும்புகிறது; இருவரும் பெருந்தெய்வங்களை மாறிமாறி இழித்தும் பழித்துப் பேசினர். அப்போது முக்கூடற்பள்ளுவின் வைணவ மூத்த பள்ளி,

''பெருமான் அடியானுக்குப்
பெண்டிருந்துமே - எங்கள்
பெருமானை நீ பழித்துப்
பேசலாமோடி''[26]

என்று சைவ இளைய பள்ளியிடம் வினவுகின்றாள். பின்னர் சினந்தணிந்த பள்ளியர் இருவரும் இறைவன் ஒருவனே எனும் உணர்வுடன் அமைதி அடைவதோடு

கணவனுடன் ஒற்றுமையாக வாழத் தொடங்கினர். இவ்வாறு இப்பள்ளு நூல் புனையப்பெற்றுள்ளது.

இரு பள்ளியர் இருதெய்வங்களை ஏசுவது சமய முரண்பாடு; பின்னர் இருவரும் ஒற்றுமைப்படுவது சமய ஒருமைப்பாடு. பாமர மக்கள் மிக எளிதில் புரிந்து கொள்ளுமாறு பள்ளு நூல்கள் சமய ஒருமைப்பாட்டை கதைப் போக்கில் வற்புறுத்துகின்றன. இதற்கு வழிகாட்டிய நூல் முக்கூடற்பள்ளு. இந்நூலின் காலம் கி.பி. பதினெட்டாம் நூற்றாண்டு. இந்நூலுக்குப் பின்னர்த் தோன்றிய பள்ளு நூல்கள் மிகப்பலவாம்.

**சங்கர நாராயணரின் கற்சிலை வடிவங்கள்**

சங்கர நாராயணரின் கற்சிலை வடிவங்கள் சில தலங்களில் தள வரிசையிலும், சுவரிலும், கோட்டத்திலும் காணப்படுகின்றன. அவை வருமாறு:

***மாமல்லை***

தமிழகக் கட்டடக்கலை வரலாற்றில் கி.பி. ஏழாம் நூற்றாண்டு சிறப்பாகக் குறிக்கத்தக்கது. அதுவரை கோயில்கள் மரம், செங்கல் முதலியவற்றால் கட்டப்பட்டன. மகேந்திரவர்மன் கற்கோயிற்கட்டடங்களைக் கட்டத் தொடங்கினான். இவன் மாமல்லை முதலிய இடங்களில் குடைவரைக் கோயில்களை வடித்தான். இவற்றில் மிகப்பழைய சிற்பங்கள் பல இருக்கின்றன.

கி.பி. ஏழாம் நூற்றாண்டில் தமிழர் வழிபட்ட தெய்வ வடிவங்கள் பலவற்றை மாமல்லைக் குடைவரைக் கோயில்களில் காணலாம். தர்ம ராசா ரதத்திலும், ஆதிவராகர் கோயிலிலும் சங்கர நாராயணர் வடிவங்கள் இரண்டு காணப்படுகின்றன[7]. இவை காலத்தால் மிகப் பழமையானவை. ஒரே வடிவத்தில் அமைந்த சங்கரனின் தோற்றத்தையும் நாராயணனின் தோற்றத்தையும் எளிதில் பகுத்தறியக் கூடிய நிலையில் அக்கற்சிலைகள் இரண்டும் துல்லியமாக அமைந்துள்ளன.

### பிள்ளையார்பட்டி

இது கி.பி. 7 அல்லது 8ஆம் நூற்றாண்டில் தோன்றிய குடைவரைக் கோயில், இங்கு பிள்ளையாருக்கும், லிங்கத்திற்கும் நடுவில் ஒரு வடிவம் காணப்படுகிறது. இதனைப் பல்லவ மன்னனின் வடிவம் என்று பலரும் கருதினர். ஆனால் திருச்சிக்குத் தெற்கே பல்லவராட்சி பரவியதில்லை. எனவே இவ்வடிவம் பல்லவ மன்னனின் வடிவமன்று, சங்கர நாராயண வடிவம் என்று டாக்டர் இரா.நாகசாமி, திருசெந்தில்செல்வகுமார் முதலிய ஆய்வாளர்கள் துணிந்து கூறுவது ஏற்கத் தக்கதே.

''இந்த வடிவின் தலையில் வலப்பாதியில் சடாமகுடமும், இடப்பாதியில் கிரீடமும் காணப்படுகின்றன. இதையொட்டி இடதுபுறத்தில் திருமாலின் ஊர்தியான கருடன் இருப்பதால் வலப்புறத்தில் உள்ள வடிவம் நந்திகேசுவரராக இருக்கலாம் என்ற கூற்று இதனை உறுதி செய்கிறது''.[29]

மேலும், இந்த வடிவத்தில் வலக்கை வரத முத்திரையிலும், இடக்கை இடுப்பில் ஊன்றியவாறும் உள்ளன. இவற்றையெல்லாம் நோக்கும்போது இச்சிலை வடிவம் சங்கரநாராயண வடிவமே எனக்கருதமுடிகிறது.

### குன்றக்குடி

குன்றக்குடி மலையின் அடிவாரத்தில், தெற்கு நோக்கி மூன்று குடைவரைக் கோயில்கள் இருக்கின்றன. முதல் குடைவரையில், கருவறையின் வலப்பக்கத்தில் சங்கர நாராயண வடிவம் ஒன்று காணப்படுகிறது. சிவனது வலப்பக்கத்தில் சடையும், மழுவும், புலித்தோலாடையும் விளங்க, திருமாலது இடப்பக்கத்தில் திருமுடியும், பட்டாடையும், சங்கும் விளங்குகின்றன. இந்த வடிவமும் கி.பி. எட்டாம் நூற்றாண்டைச் சார்ந்தது.

### நாமக்கல்

கி.பி. எட்டாம் நூற்றாண்டைச் சார்ந்த நாமக்கல் குடைவரைக் கோயிலில் கருவறையின் இடப்பக்கத்தில் பால நரசிம்மர் வடிவம் உள்ளது. இந்த

வடிவத்தையொட்டிச் சங்கர நாராயண வடிவமொன்று காணப்படுகிறது. இந்த வடிவத்தில் சிவன் சடைமுடியில் இளம்பிறையைச் சூடி, வலக்கைளில் மானையும், பாம்பையும் ஏந்தியுள்ளார்; திருமால் மகுடத்தைச் சூடி இடக்கையில் சங்கை ஏந்தியுள்ளார். இந்த வடிவத்தின் இருபுறமும் தேவர்கள் நின்று, கைகளைக் கூப்பி வியப்புடன் வழிபடுகின்றனர்.

கி.பி. 7,8ஆம் நூற்றாண்டுகளில் சங்கர நாராயணர் வடிவத்தைச் சைவ அடியார்களும், ஆழ்வார்களும் பாடல்களில் சொல்லோவியங்களாக வரைந்தனர். மன்னர்கள் குடைவரைக் கோயில்களில் கற்சிலைகளாக வடித்தனர். இக்காலங்களில் சங்கர நாராயணர் வழிபாடு புகழ்பெற்று விளங்கியது என்பதற்கு மேற்காட்டிய இலக்கியங்கள் மற்றும் கற்சிலைகள் தக்கச் சான்றுகளாம்.

## கற்றளிகள்

குடைவரைக் கோயில்களுடன் கற்றளிக்கோயில்களும் கட்டப்பெற்ற போது அவற்றிலும் சங்கர நாராயண வடிவங்களை நிறுவினர். காட்டாகப், பல்லவன் இராசசிம்மன் கட்டியது காஞ்சி கைலாசநாதர் கோயில். இதன் கருவறையின் தென்புறச் சுவரில் சங்கர நாராயண வடிவத்தைக் காணலாம். இது சுதைச் சிற்பமாம்.

## கோட்டங்களில் சங்கர நாராயணர் வடிவங்கள்

'கோட்டம்' என்பது சுவரின் ஓர் உறுப்பு. அலங்காரமான மாடம், [illegible] கிழக்கு நோக்கி இருந்தால், கருவறை, மண்டபத் தென்புறச் சுவரில் இரண்டு கோட்டங்களும், மேற்புறச் சுவரில் ஒரு கோட்டமும். வடபுறச் சுவரில் இரண்டு கோட்டங்களும் ஆக ஐந்து கோட்டங்கள் அமைப்பது மரபு. இவ் ஐந்து கோட்டங்களை "பஞ்ச கோட்டங்கள்" என்பர்.

கருவறையின் பின்பக்கம், மேற்புறக் கோட்டத்தில் லிங்கோற்பவர் அல்லது மகாவிஷ்ணு அல்லது அர்த்தநாரியின் வடிவங்களை அமைப்பது வழக்கம். முதல் ஆதித்த சோழன் காலம் முதல் அங்கே சங்கர நாராயணரின் வடிவமும்

இடம்பெறலாயிற்று. இந்த அமைப்பைத் திருவெறும்பூர், திருவெறும்பீசுவரர் கோயிலில் காணலாம்.

மற்றும், தஞ்சைப் பெரிய கோயில், கங்கை கொண்ட சோழபுரக் கோயில் முதலிய சோழர்காலக் கோயில்களின் பெரிய கோட்டங்களில் சங்கர நாராயணர் வடிவத்தைக் காணமுடிகிறது.

பாண்டியர், சங்கர நயினார் கோயிலில் தனிச் சன்னதியில் சங்கரநாராயணரை எழுந்தருளச் செய்தனர்.

பல்லவர், சோழர், பாண்டியர் ஆகியோர் சிறப்பாகப் போற்றிய சிவவடிவம் சங்கர நாராயணர் வடிவம் என்பது புலனாகிறது. இதன் மூலம் மூவேந்தர்களும், இருசமய ஒருமைப்பாட்டைப் பாதுகாத்தனர் என்பதும் தெரிகிறது.

## சங்கர நாராயணர் எழுந்தருளியுள்ள திருத்தலங்கள்

சங்கர நாராயணர் மூலவராகவும், தனிச் சன்னதியிலும் எழுந்தருளியுள்ள திருத்தலங்கள் மிகச்சிலவே. அவை வருமாறு:-

### *சங்கர நயினார் கோயில்*

இங்கே சங்கர நாராயணர் தனிச் சன்னதியில் எழுந்தருளி அருள் சுரக்கின்றார். இவ் ஆய்வுக்குரிய கோயில் இதுவே.

### திருக்குற்றாலம்

பழங்காலத்தில் திருக்குற்றால நாதர் கோயில் திருமால் கோயிலாக இருந்தது. இதனால் இது சங்கு வடிவத்தில் அமைந்திருப்பதை இப்போதும் காணலாம்.

அகத்தியர், திருமாலின் திருமேனியைக் கைகளால் குறுக்கிச் சிவலிங்கமாக உருமாற்றினார். அவரது கைச்சுவடுகள் சிவலிங்கத்தின் உச்சியில் பதிந்துள்ளன[29] என்பர். இந்தப் புராண வரலாறு ''அரியும் அரனும் ஒன்று'' என்ற தத்துவத்தை

நுட்பமாக எடுத்துக்காட்டுகிறது. திருமாலே லிங்கம்; லிங்கமே திருமால்; இருவரும் ஒருவராவர் என்பதை இது உணர்த்துகிறது. மேலும் திருக்குற்றாலத் தல வரலாறு இக்கோயிலின் சிவலிங்கத்தைச் சங்கரநாராயணர் வடிவம் எனச் சுட்டுவதும் இங்கு இணைத்து நோக்கத்தக்கது.

## திருப்பாற்கடல்

காஞ்சிபுரத்திலிருந்து வேலூருக்குப் போகின்ற வழியில், ஏறக்குறைய முப்பது கிலோமீட்டர் தூரத்தில் திருப்பாற்கடல் என்ற திருத்தலம் உள்ளது. இங்கே ஆவுடையார் மீது, பாண லிங்கம் இருக்க வேண்டிய இடத்தில் திருமால் நின்று கொண்டிருக்கிறார். இத்தகைய வியப்புக்குரிய அரிய திருமேனியை வேறு எந்தத்திருத்தலத்திலும் தரிசிக்க முடியாது.

## ஹரிஹர்

கர்நாடக மாநிலத்தில் ஹோஸ்பெட் அருகில் ''ஹரிஹர்'' என்ற சிற்றூரில் ஹரிஹர சுவாமி கோயில் இருக்கின்றது. மூலவர் சங்கர நாராயணர். இவரது வல இடப்பக்கங்களில் பார்வதியும், இலக்குமியும் முறையே எழுந்தருளியுள்ளனர்.

சங்கர நாராயணர் எழுந்தருளியுள்ள சிறப்பான திருத்தலங்கள் மொத்தம் நான்கு. தமிழகத்தில் மூன்றும், கர்நாடகத்தில் ஒன்றும் உள்ளன.

## முரண்பாடும் ஒருமைப்பாடும்

### சமய முரண்பாடுகள்

தமிழகத்திலிருந்து சிவ வழிபாடு பல கொள்கைகளுடன் சைவமாகவும், திருமால் வழிபாடு பல கொள்கைகளுடன் வைணவமாகவும் வளர்ந்தன. ஏறக்குறைய கி.பி. இரண்டாம் நூற்றாண்டு முதல் இவை தமக்குள் முரண்படத் தொடங்கின. முரண்பாடுகளின் தோற்றத்திற்கான காரணங்களைக் கீழ்வருமாறு காட்டலாம்.

1. சமயத் தத்துவக் கொள்கைகள் விரிவடைந்த போது, அவற்றைப் பலவாறு விளக்கும் சூழ்நிலையில் கருத்து முரண்பாடுகள் எழுவது இயல்பே.

2. சிவனும், திருமாலும் அடிப்படையில் வெவ்வேறானவர். சிவப்பு வண்ணமுடையவன் சிவன்; இவன் அழிக்கின்றவன். கருநீலவண்ணன் திருமால்; இவன் காக்கின்றவன். தீயில் ஆடுபவன் சிவன்; நீரில் கிடப்பவன் திருமால். இப்படித் தெய்வங்களுக்கிடையில் அமைந்த பல வேறுபாடுகள், அவர்களைப் பரம்பொருள்களாகக் கொண்ட சமயங்களுக்கிடையிலும் முரண்பாடுகளை உருவாக்கின.

3. சமயவாதிகள் பெருகி மாற்றுச் சமயத்தினரின்கோட்பாட்டை எதிர்த்து வாதிட்ட போது முரண்பாடுகள் பெருகி விட்டன.

4. மன்னர் ஒரு சமயத்தைச் சார்ந்து, அதற்கே ஆதரவு தந்தனர். மாற்றுச் சமயத்தினரை அவர்கள் இழிவுபடுத்தினர்; சில போது கழுவேற்றிக் கொன்றனர். இதுவும் சமயப் பேதங்களும், பகை உணர்வும் வளர காரணமாகியது.

5. சமயச் சான்றோர்களாலும் முரண்பாடுகள் பல்கின. காட்டாக,

"அறியார் சமணர் அயர்த்தார் பவுத்தர்
சிறியார் சிவப்பட்டார்".[30]

என்பது திருமழிசையாழ்வாரின் அருள்வாக்கு.

அறியார், அயர்த்தார், சிறியார் என்ற பழிச் சொற்களில் பொதிந்துள்ள சமய முரண், உணர்ச்சி வேகம் உணரத்தக்கது. மதச் சான்றோரின் இத்தகு வெறுப்புணர்ச்சி மக்களிடையே சமயப் பகைமையை மேன்மேலும் வளர்த்தது.

இவற்றாலும் இவை போன்ற பிற காரணங்களாலும் இரு வேறு சமயங்களுக் கிடையில் வேற்றுமை உணர்வும், பகைமை உணர்வும் எழுந்து வளர்ந்தன. அன்பு,

அருள் ஆகிய அருங்குணங்களை வளர்க்க வேண்டிய சமயம், அவற்றிற்கு மாறான உணர்வுகளை வளர்த்து மக்களிடையே பகைமை உணர்வையும், அதன் பயனான பூசலையும் ஏற்படுத்தியபோது அவ்வேற்றுமையை ஒழித்து ஒற்றுமையைக் காணவும் சான்றோர் சிலர் முயன்றனர். இரு வேறு சமயத்தின் பகைமை உணர்வால் மக்கள் கொதித்தெழுந்தபோது அவற்றைத் தணிக்கச் சான்றோர்கள் பற்பல ஒருமைப்பாட்டு முயற்சிகளை மேற்கொண்டனர். அம்முயற்சிகளில் தேர்ந்த சிலவற்றை இனி ஆராயலாம்.

## இரட்டைச் சன்னிதிகள்

சங்க காலத்தில் சிவனுக்கும் திருமாலுக்கும் தனித்தனி கோயில்கள் இருந்தன என்பது முன்னர்க் குறிக்கப் பெற்றது.

கி.பி. ஏழாம் நூற்றாண்டு முதல் நிலைத்து நிற்கக்கூடிய கற்கோயில்கள் தோன்றின. அப்போது சிவனுக்கும், திருமாலுக்கும் இரண்டு வெவ்வேறு சன்னிதிகள் அமைத்து இரு தெய்வங்களையும் சமமாக வழிபட்டனர்.

## சிவன் கோயில்களில் திருமால்

### திருமெய்யம்

மகேந்திர வர்ம பல்லவனின் முன்னோர்கள் பலர் வைணவ சமயத்தைச் சார்ந்தவர்கள். மகேந்திரன் சமணன்; பின்னர்ச் சைவனாக மாறினான். இவன் திருமெய்யத்தில் சிவனுக்கு ஒரு குடைவரைக் கோயிலை எடுத்தான். இவன் மகன் நரசிம்மன் அதற்குப் பக்கத்தில் திருமாலின் மிகப்பெரிய சயனத் திருமேனியை வடித்தான். இந்த இரட்டைச் சன்னதிகள் பெரிய கோட்டைக்குள்ளே அமைந்திருக்கின்றன.

எனவே, சிவனுக்கும், திருமாலுக்கும் இரட்டைச் சன்னிதிகளைக் கொண்ட முதல் கோயில் திருமெய்யக் குடைவரைகளாம்.

தொடர்ந்து இரட்டைச் சன்னிதிகளைக் கொண்ட கோயில்கள் சில தோன்றின. இவ்வாறு தோன்றிய பழைய சிவன் கோயில்கள் மொத்தம் பன்னிரண்டு என்பர்.[31] அவை வருமாறு:-

1. திருவோத்துார், 2 . கச்சி ஏகம்பம், 3. கொடிமாடச் செங்குன்றுார், 4. சிதம்பரம், 5. சிக்கல், 6. பவானி, 7, திருநாவலுார், 8. திருநெல்வேலி, 9. திருப்பழனம், 10. பாண்டிக் கொடுமுடி, 11. திருப்பத்துார், 12. திருவக்கரை.

## திருமால் கோயில்களில் சிவன்

வைணவர் மறந்தும் புறந்தொழாமாந்தராவர். எனவே, திருமால் கோயில்களில் சிவனின் வடிவங்கள் மிகக்குறைவாகவே காணப்படுகின்றன. நவதிருப்பதிகளில் ஒன்றான திருக்குளந்தையில் நடராசர் வடிவமுள்ளது. மற்றொரு வைணவத் தலமான திருக்குறுங்குடியில் சிவனுக்குத் தனிச் சன்னதி இருக்கிறது.

சிவனின் கோயிலில் திருமாலும், திருமாலின் கோயிலில் சிவனும் எழுந்தருளி விளங்குகின்றனர்.

ஓரிடத்தில் நின்று சிவனையும் திருமாலையும் ஒரே நேரத்தில் தரிசிக்கும்படி இவர்கள் இருவருக்கும் இரட்டைச் சன்னிதிகளைச் சில கோயில்களில் அமைத்தனர். சிதம்பரம், ஈரோடு, நெல்லை மாவட்டம் திருப்போத்துடையார் கோயில் முதலியவற்றில் இந்த அமைப்பைக் காணலாம். திருப்போத்துடையார் கோயிலில் சிவனும், திருமாலும் எதிரெதிர் எழுந்தருளி ஒருவரையொருவர் தரிசிக்கின்றனர்.

இருபெருந்தெய்வங்களை எப்போதும் இணைத்தே வழிபட வேண்டும் என்ற நோக்கத்துடன் ''சிவவிஷ்ணு கோயில்'' என்ற பெயருடன் பல கோயில்கள் தோன்றின. அண்மையில் சென்னை பெரம்பூரில் ''ரஜினிராஜா கோயில்'' என்ற பெயருடன் சிவவிஷ்ணு கோயில் ஒன்று கட்டப்பட்டது. இதுவும் இரட்டைச் சன்னிதியுடையது.

மேற்கண்ட இரட்டைச் சன்னிதிக் கோயில்கள் அனைத்தும் சைவ, வைணவ ஒருமைப்பாட்டை வற்புறுத்துகின்றன.

**தேவாரத்திருத்தலங்களும், திவ்ய தேசங்களும்**

தில்லை, மதுரை, சீர்காழி, திருக்கண்டியூர், திருக்கச்சி ஏகம்பம் முதலியன தேவாரத் திருத்தலங்களாம். அவையே திவ்ய தேசங்களுமாம். இவை இரு சமயங்களுக்குமுரியன என்பதால், இரு சமய ஒருமைப்பாட்டிற்கு இவற்றின் பங்கும் மிகுதி என்பதில் ஐயமில்லை.

**சிவனும் திருமாலின் அவதாரங்களும்**

திருமாலின் ஐந்து அவதாரங்கள் சிவனுடன் தொடர்புடையன.

**இராமன்**

இராமேச்சுவரம், வேதாரண்யம், பட்டீசுவரம் ஆகிய மூன்று தலங்களில், தன் பாவங்கள் நலிய இராமன் சிவனை வழிபட்டான் என்று தலபுராணங்கள் தெரிவிக்கின்றன. இந்த மூன்று திருத்தல லிங்கங்களுக்கும் 'இராமலிங்கம்' என்ற ஒரே பெயர் வழங்குகின்றது.

இராமன் சிவனை வழிபட்ட மற்றொரு திருத்தலம் இராமனதீச்சுரம். இது திருக்கண்ணபுரத்துக்குக் கிழக்கே உள்ளது.

**பரசுராமன்**

பரசுராமன் சிறந்த சிவபக்தன். சிவனை நோக்கித் தவமிருந்து அவன் அருளிய பரசு என்ற மழுவை ஏந்திய ராமன், பரசுராமன்.

சீதையின் திருமணத்திற்குப் பிறகு பரசுராமன், இராமனை எதிர்த்தான். திருமாலின் இரு அவதாரங்களும் முரண்பட்டன. அப்போது பரசுராமனிடமிருந்த

விஷ்ணு தனுசை இராமன் வாங்கி, அதை வளைத்து நாணேற்றி அவனை வெற்றி பெற்றான்.

**வராகம்**

சிவனது திருவடிகளைத் தரிசிக்க வேண்டும் என்பதற்காகத் திருமால் வராக அவதாரம் எடுத்து, பெரும்பள்ளத்தை அகழ்ந்த திருத்தலம் அரப் பெரும்பாழி (அரித்துவாரமங்கலம்).

அடி, முடி தேடிய திருமாலும், பிரமனும் அணுக முடியாத அனற்பிழம்பாய்ச் சிவன் ஒளி வீசிய திருத்தலம் திருவண்ணாமலை.

**நரசிங்கம்**

இரணியனை வதைத்த பிறகும் நரசிங்கத்தின் திருச்சினம் தணியவில்லை. சிவன், திருபுவனத்தில், சரபமூர்த்தியாக எழுந்தருளிச் சினத்தைத் தணித்தார்.

**வாமனர்**

வாமன அவதாரமெடுத்த திருமால் சிவனை வழிபட்டதிருத்தலம் திருமாணிகுழி. மாணி எனில் வாமனன் என்று பொருள்.

**பரம்பொருள்களும், பரமபக்தர்களும்**

சிவனும் திருமாலும் இரு சமயங்களின் பரம்பொருள்கள் ஆவர். இவர்கள் ஒருவர் மற்றொருவருக்குப் பரமபக்தர்களாகவும் திகழ்கின்றனர். திருவீழிமிழலை, திருக்கண்டியூர் என்ற திருத்தலங்களின் வரலாற்றை நோக்குகின்றபோது இந்த உண்மை புலனாகின்றது.

## திருவீழிமிழலை

சிவன்மேல் கொண்ட அளவற்ற பக்தியினால் தம் கண்களை அகழ்ந்தெடுத்த அடியார்கள் இருவர். ஒருவர் திருக்கண்ணப்ப நாயனார்; மற்றொருவர் திருமால்.

திருமால் சிவனை வழிபட்ட திருத்தலம் திருவீழிமிழலை. திருவீழிமிழலையில், திருமால் சக்கராயுதத்தைப் பெறுவதற்காக, ஆயிரம் தாமரைப் பூக்களைக் கொண்டு சிவனை நாடோறும் அர்ச்சித்து வழிபடுவது வழக்கமாம். ஒரு நாள் ஒரு பூ குறைந்தது. உடனே தாமரைக் கண்ணனான திருமால் தம் ஒரு கண்ணைப் பறித்து, அதைத் தாமரைப் பூவாகக் கருதி அர்ச்சித்து வழிபாட்டை நிறைவு செய்தார். எனவே இத்திருத்தல இறைவனுக்கு ‘‘நேத்திரார்ப்பண ஈசுவரர்’’ என்ற பெயர் உண்டாயிற்று.

## திருக்கண்டியூர் வீரட்டானம்

மாறாக, திருக்கண்டியூரில் சிவன் திருமாலை வழிபட்டார்.

பிரமன் ஐந்து தலைகளைக் கொண்டிருந்தான். சிவன் அவனது ஒரு தலையைக் கிள்ளினார். தலை கையோடு ஒட்டிக் கொண்டது. மேலும் ’’பிரமஹத்தி’’ என்ற மிகப்பெரிய பாவச்சுமை இவரை நெருக்கியது. இவர் திருமாலை வழிபட்டு, அருள் பெற்றுப் பாவச்சுமையை நீக்கிக் கொண்டார். இத்திருத்தலத் திருமாலுக்கு ‘ஹரசாப விமோசனர்’ என்பது பெயர்.

‘‘ஜனங்களுக்கு பக்தி உண்டாக வேண்டுமானால் அதற்கும் பகவானே வழிகாட்டுகின்றார். எப்படி? தாமே பக்தனாக இருந்து வழிகாட்டுகின்றார். இதற்காகத்தான் சில இடங்களில் சிவன், பக்தனாக இருந்து விஷ்ணுவைப் பூஜிக்கின்றார். சில இடங்களில் விஷ்ணு, பக்தராக இருந்து சிவனைப் பூஜிக்கின்றார்’’.

‘‘இரண்டும் ஒன்றுதான். ஹரன்-ஹரி என்ற பெயர்களே ஒன்றாகத்தான் இருக்கின்றன. இரண்டும் சேர்ந்தே ஹரிஹரன், சங்கர நாராயணன் என்றெல்லாம் ஸமரஸ பாவத்தை வளர்க்கிற மூர்த்திகளாக இருக்கின்றன’’,[32] என்பது காஞ்சிப் பெரியவர் அவர்களின் அருளுரை.

ஆகவே, சங்கர நாராயண வடிவம் என்பது இரு சமய ஒருமைப்பாட்டின் சின்னம். இரு பரம்பொருள்கள், இரு பக்தர்கள் சமமாக இணைந்த வடிவம். பரம்பொருள்கள், பரம பக்தர்களாக இருந்து இரு சமய இணக்கத்திற்கு வழிகாட்டுகின்றனர்.

சங்கர நாராயணர் வடிவத்தில் சங்கரன் பரம்பொருள்; நாராயணன் பக்தர். மற்றும் ஹரிஹர வடிவத்தில் நாராயணன் பரம்பொருள்; சங்கரன் பக்தர்,

## மும்மூர்த்தி வழிபாடு

பிரமன், விஷ்ணு, உருத்திரன் (சிவன்) ஆகியன மூவரையும் ஒருங்கே வழிபடுவது மும்மூர்த்தி வழிபாடு. சுசீந்திரம், திருக்கண்டியூர், திருக்கரம்பனூர் முதலியன மும்மூர்த்தி தலங்கள்.

அரிய பொருள்கள் சிலவற்றில் மும்மூர்த்திகளும் உறைகின்றனர் என்று பக்தர்கள் கருதுகின்றனர்.

லிங்கத்தில் அடிப்பாகம் பிரமனுக்கும், இடைப்பாகம் திருமாலுக்கும், மேல் பாகம் சிவனுக்கும் உரியன.

அரச மரத்தில் மும்மூர்த்திகளும் உறைவதால் அது புனிதமரம் எனப்படுகிறது.

பாமரமக்கள் மும்மூர்த்திகளின் பெருமையை உணர வேண்டும் என்பதற்கு வாழைப்பழ வகைகள் மூன்றினுக்கு மும்மூர்த்திகளின் பெயர்களை முன்னோர் சூட்டினர். மொந்தன் (பிரமன்) பழம்; பூவன் (திருமால்) பழம்; பேயன் (சிவன்) பழம் என்பன கடவுள் பெயர்களோடு தொடர்புடைய வாழைப்பழ வகைகளாம்.

ஒரே பரம்பொருள், மும்மூர்த்திகளாக அவதரித்து முத்தொழில்களைச் செய்கின்றது என்ற கருத்தைப் பலரும் ஏற்கின்றனர்.

**ஊரும் கோயில் அமைப்பும்**

பழங்காலத்தில் சிவன், திருமால் கோயில்கள் சில மரபுகளைப் பின்பற்றிக் கட்டப்பெற்றன.

ஊரின் வடகிழக்கு மூலையில் சிவன் கோயிலையும், தென்மேற்கு மூலையில் திருமால் கோயிலையும் கட்டுவது பழைய மரபு. ஸ்ரீவைகுண்டம், ஆழ்வார் திருநகரி, திருப்பேரை, பெருங்குளம் முதலிய பல தலங்களில் இத்தகைய அமைப்பைக் காணலாம். காஞ்சிபுரத்தில் சிவகாஞ்சி, விஷ்ணுகாஞ்சி என்ற இருபகுதிகள் இப்போதும் உண்டு. நகரங்கள் விரிவடைவதால் கோயில்கள் அமைந்த திசைகள் மாறுகின்றன.

**அக்ரஹாரம்**

சிற்றூர் அல்லது தெருவின் இருபக்கங்களில் அரி, அரன் கோயில்களைக் கட்டுவது மற்றொரு பழைய மரபு. 'ஹரிஉறரன்' என்ற பெயர்கள் 'ஹரிஹாரம்' என்றும் பின்னர் 'அக்ரஹாரம்' என்றும் மாறின என்று ஒரு கருத்து உள்ளது.[7] இப்போது 'அகரம்' என்றும் வழங்குகின்றது. ஆகவே, அரி, அரன் என்ற இருவரது கோயில்களை எல்லைகளாகக் கொண்ட பகுதியே 'அக்ரஹாரம்' என்பது தெளிவாகின்றது.

**உறவு முறைகள்**

தெய்வங்களில் திருக்கோலங்களுக்குப் பல வரையறைகள் உள்ளன. சிவனை லிங்க வடிவம், நின்ற கோலம், நடனக் கோலம் முதலிய பல நிலைகளில் வழிபடுகின்றனர். திருமால் நின்ற, இருந்த, கிடந்த கோலங்களில் எழுந்தருளி அருள்பாலிக்கின்றார்.

**சுருட்டப்பள்ளி**

தமிழக வட எல்லையிலுள்ள ஊத்துக்கோட்டை என்ற ஊரிலிருந்து இரண்டு கிலோ மீட்டர் தூரத்தில் சுருட்டப்பள்ளி என்ற கிராமம் உள்ளது. இது ஆந்திர மாநிலத்தைச் சார்ந்தது. இங்கே சிவன் நஞ்சுண்ட மயக்கத்தில் கிடந்த கோலத்தில் விளங்குகின்றார். நீலகண்டேசுவரர் என்பது இப்பள்ளி கொண்ட பரமசிவனின் பெயராம். இவரது கிடந்த கோலம் மிகப்பெரியது; சுதையாலானது; இதற்கு அபிடேகம் செய்யப்படுவதில்லை.

**திருப்பாற்கடல்**

திருப்பாற்கடல் என்ற திருத்தலத்தில் திருமால் லிங்கத்தின் மேற்பகுதியில் காட்சி தருகின்றார் என்பன முன்னரே கண்டோம். பாணலிங்கத்திற்குப் பதிலாக இவரது வடிவம் காணப்படுவது வியப்பே.

இவ்வாறு கிடந்த கோலச் சிவனும், லிங்கத்திருமாலும் வேறுபட்ட வடிவங்களே. இரு சமய ஒருமைப்பாட்டை இவையும் எடுத்துக்காட்டுகின்றன.

**உறவால் இணைப்பு**

சிவனுக்கும், திருமாலுக்குமிடையில் சில உறவுமுறைகளைக் கற்பித்து, இரு பரம்பொருள்களுக்கிடையில் ஓர் இணக்கத்தை ஏற்படுத்தி, முரண்பட்ட இரு சமயங்களுக்கிடையில் ஓர் ஒருமைப்பாட்டை உருவாக்க முனைந்தனர்.

1. அழகரின் தங்கை மீனாட்சி; இவளைச் சொக்கநாதர் மணந்தார். எனவே, சிவனின் மைத்துனர் திருமால்.

2. ஒருமுறை, திருமால் அசுரரை அடக்க மோகினி அவதாரம் எடுத்தார். மோகினியைக் கண்டு சிவன் மயங்கினார். இருவருக்கும் பிறந்த மகனே ஐயப்பன். எனவே, ஐயப்பனுக்கு 'ஹரிஹர புத்திரன்' என்ற பெயரும் உள்ளது. இப்புராண மரபின்படி அரனின் மனைவி அரி, மகன் ஐயப்பன்.

சிவனுக்கும், திருமாலுக்குமிடையில் உறவுமுறைகளைக் கற்பிக்கின்ற புராணக்கதைகள் இன்னும் சில உண்டு. இவை இருசமய இணக்கத்திற்காகத் தோன்றிய புராணப் புனைகதைகளாம்

**சமயச் சின்னங்கள்**

**துளசியும் வில்வமும்**

சைவம், வைணவம் என்ற இரு சமயங்களின் சின்னங்களுக்கிடையில் ஓர் ஒருமைப்பாடு உள்ளது. சைவத்திற்குரியது திருநீறு, வைணவத்திற்குரியது திருநாமம். திருநீறும், திருநாமமும் திருமண்ணின் இருவேறு வடிவங்களே. இவை நிலையாமையை அறிவுறுத்துகின்ற அறிகுறிகளே. திருவரங்கத்துப் பிள்ளையார் இவை இரண்டையும் நெற்றியில் புனைந்து இரட்டைப் பொலிவுடன் வீற்றிருக்கின்றார்.

மதுரை அழகர் கோயில், கோபுரவாயிலின் காவல் தெய்வம் கருப்பண்ணசாமி, இவரை ஆடி மாதத்தில் வழிபடுகின்றபோது, அன்று ஒருநாள் மட்டும் திருநீறு பிரசாதமாக வழங்கப்படுகிறது.

நம்மாழ்வாரும், ''கரிய மேனிமிசை வெளியநீறு சிறிதேயிடும் பெரிய கோலத்தடங்கண்ணன்''[33] என்று திருமண்ணை ''வெளிய நீறு'' - வெண்ணீறு என்று குறிப்பிடுவது கவனிக்கத் தக்கது.

திருமாலுக்குரியது துளசி; சிவனுக்குரியது வில்வம். திருமாலை வில்வத்தாலும், சிவனைத் துளசியாலும் அர்ச்சனை செய்யலாம். இரண்டிலும் மகாலட்சுமி உறைகின்றாள்.

ஸ்ரீமுஷ்ணத்தில் சிவன் கோயிலின் தலமரம் துளசி; திருமால் கோயிலின் தலமரம் வில்வம்.

தாடிக்கொம்பு திருமால் கோயிலின் தலமரம் வில்வம்; திருவிற்குட வீரட்டானத்தின் தலமரம் துளசி. எனவே, தலமரங்களாக அமைந்த துளசியும், வில்வமும் இரு சமய ஒருமைப்பாட்டைப் புலப்படுத்துகின்றன.

**சங்கர நராயணரும் சமயப்பிணக்கமும்**

சங்கர நாராயண வடிவம் இரு சமய இணக்கத்தின் அறிகுறி என்பது உண்மை. எதிராக, சமயப் பிணக்கத்தையும் அதே வடிவம் தோற்றுவிக்கின்றது என்பது மற்றோர் உண்மை.

சங்கர நாராயண வடிவத்திலுள்ள சங்கரனைத் தீவிர வைணவர்கள் வழிபடமாட்டார்கள்; நாராயணனைத் தீவிர சைவர்கள் வணங்க மாட்டார்கள். ஒரே தெய்வத்தை வழிபட வேண்டும் என்ற குறிக்கோளுடைய பக்தர்கள் சங்கர நாராயணர் எழுந்தருளியுள்ள சங்கர நயினார் கோயிலுக்கு வரமாட்டார்கள்.

எனவே, சங்கர நாராயண வடிவம் சமய இணக்கத்திற்கும், சமயப் பிணக்கத்திற்கும் காரணமாகி விடுகின்றது. பக்தர்களின் தீவிரப் பக்தி உணர்வுகளால் இத்தகைய வேறுபாடு ஏற்படுகிறது.

இதுகாறும் கூறியவற்றை தொகுத்து நோக்கின் பகை உணர்வுடைய இரு சமயங்களை இணைக்கச் சான்றோர் கையாண்ட உத்திகளைக் கீழ்வருமாறு வகைப்படுத்தலாம். அவை :

1. பக்தி இலக்கியங்களைப் படைப்போர், சமய வேற்றுமைகளை ஒழித்து ஒற்றுமை உணர்வை வளர்க்கும் வகையில் சமயப் பொதுமையை உணர்த்தும் பாடல்களைப் பாடினர். அத்தகு பாடல்கள் அல்லது இலக்கியங்கள் சமய வேற்றுமை களை ஒழிக்கக் காரணிகளாயின.
2. வேற்றுமை உணர்வால் பிணக்கம் கொண்டிருக்கும் இரு வேறு சமயங்களில் தோன்றிய அருளாளர்கள் அவ்வேற்றுமையை ஒழிக்கும் வகையில் இரு சமயப் பொதுமையுடைய மூர்த்த வடிவங்களை உருவாக்கினர். இதனால்

அவ்விரு சமயத்தாரிடையே நிலவி வந்த பிணக்கம் ஒழிந்து இணக்கம் ஏற்பட வழி ஏற்படலாயிற்று.

3. ஒரு சமயக் கோயிலில் வேறொரு சமயத்தார் போற்றும் தெய்வத் திருவுருவங்களை அமைத்து அதன் மூலம் சமயப் பொதுமையை உருவாக்கவும் முயன்றனர்.

4. பகைமை உணர்வு கொண்ட இருவேறு சமயத்தாரை ஒன்றுபடுத்தும் வகையில், அவ்விருவேறு தெய்வங்களும் உறவு முறையுடையன எனக் காட்டும் புராணக் கதைகளை உருவாக்கினர். இதன் மூலம் சமய ஒற்றுமையையும் , சமயப் பொறையையும் ஏற்படுத்தினர்.

5. ஒரு சமயத்திற்கு மட்டுமே சிறப்பாக உரிமையுடைய சமயச் சின்னங்களை பிற சமயத்திற்கும் உரிமை உடையதாக்கி, பொதுமை உணர்வை வளர்க்க முற்பட்டனர்.

சமய முரண்பாடுகளை நீக்க வேண்டும் என்பதற்காக இன்னும் எத்தனையோ வகைப்பட்ட நடவடிக்கைகளை முன்னோர் மேற்கொண்டனர். இவற்றால் சமய முரண்பாடுகள் ஓரளவு தணிந்தன என்று கூறலாம்; அறவே அகன்றன என்று கூற முடியாது.

## ஆறு சமயங்கள்

காணபதியம் முதலிய சமயங்கள் ஆறாம். இப்பிரிவுகள் ஆறு பரம்பொருள்களைத் தலைமையாக் கொண்டு அமைந்தன. ஒவ்வொரு சமயத்திற்கும் வரையறுக்கப்பட்ட கொள்கைகள் தனித்தனியே இருக்கின்றன.

ஆறு சமயங்களுக்குத் தலைவனும், அவற்றை உருவாக்கியவனும் சிவனே. இதனை,

> ''சமயமவை ஆறினுக்கும் தலைவன்தான் காண்''[34]

> ''அறுவகைச் சமயம் வைத்தா*ர்*''[35]

> ''வெவ்வேறாய் இருமூன்று சமயமாகிப் புக்கானை''[36]

என்னும் வரிகள் உணர்த்துகின்றன. சிவனே பரம்பொருள்; அவனே வெவ்வேறு சமயங்களுக்குரிய பரம்பொருள்களாவும் வடிவெடுக்கின்றான்.

''யாதொரு தெய்வங் கொண்டீர்
அத்தெய்வ மாகி யாங்கே
மாதொரு பாகனார்தாம் வருவர்''[37]

அடியார்கள் தாம் விரும்பியபடி பல தெய்வங்களை வழிபடுகின்றனர் அத்தெய்வங்களில் உள்ளிருந்து (அந்தர்யாமியாய்) இயக்குகின்றவன் நாராயணன் ஒருவனே. எனவே அவனே பரம்பொருள் என்பது வைணவக் கொள்கை.

அவரவர் தமதம அறிவறி வகைவகை
அவரவர் இறையவர் எனவடியடைவர்கள்
அவரவர் இறையவர் குறைவிலர் இறையவர்
அவரவர் விதிவழி அடைய நின்றனரே.[38]

பரம்பொருள்களையும் ஆறு சமயங்களையும் தொகுத்தும், வகுத்தும், விரித்தும் விளக்கியவர் ஆதி சங்கர பகவத் பாதர் அவர்கள். (கி.பி. 788-820) பரம்பொருளை அடைவதற்கு இந்த ஆறு சமயங்களும் ஆறு பெரும் நெறிகளாகத் திகழ்கின்றன. இதனால் ஆதிசங்கரரை ''ஷண்மத ஸ்தாபகர்'' என்ற சிறப்புப் பெயருடன் அழைப்பர்.

சமயங்கள் ஆறும் சங்கமம் ஆகின்ற பெருங்கடலாய்ப் பரந்துள்ளது சங்கர நயினார் கோயில். இப்பெருமை தேர்ந்த சில கோயில்களுக்கு மட்டுமே உண்டு.

**காணபதியம்**

கணபதியைப் பரம்பொருளாகக் கொண்டது. இந்தக் கோயிலில் கணபதியின் சிலைகள் பல இடங்களில் காணப்படுகின்றன. சிம்ம வாகன கணபதியும், உச்சிட்ட கணபதியும் குறிக்கத்தக்கவர்கள்.

**சைவம்**

இதன் பரம்பொருள் சிவன். மூலவர் - சங்கரலிங்கர், சங்கர நாராயணர், நடராசர், பைரவர் முதலிய சிவமூர்த்தங்கள் பல, கோயிலில் எழுந்தருளியுள்ளன.

**வைணவம்**

நாராயணன் இதன் பரம்பொருள். மகாவிஷ்ணு முதலிய பரம்பொருளின் வடிவங்களும், இராமன் முதலிய அவதார வடிவங்களும் கோயிலில் இருக்கின்றன.

**கௌமாரம்**

இது முருகனைப் பரம்பொருளாகப் போற்றுவது. கோயிலில் ஆறுமுக நயினார் சன்னிதி புகழ் பெற்றது. பிரகாரத்தில் இருதேவியருடன் முருகர், பால சுப்பிரமணியர், ஆறுமுகர் சிலைகளையும் காணலாம்.

**சாக்தம்**

சக்தியைப் பரம்பொருளாக வழிபடுவது சாக்தம். கோமதியம்மன் இக்கோயிலின் முதன்மைச் சக்தி. பரிவாரத்தெய்வம் துர்க்கை. மேலும், சரஸ்வதி, இலக்குமி, வீணாகாளி, பத்ரகாளி, மகிடாசுரமர்த்தனி என்பவதும் சக்திகளே.

சங்கர நயினார் கோயிலின் தெற்குப் பிரகாரத்தில் காந்தாரி, பிரம சக்தி, விஷ்ணு சக்தி, ஈசசக்தி, வராக சக்தி முதலிய சக்தி வடிவங்களைத் தரிசிக்கலாம்.

கோயிலில் மகேசுவர வடிவங்களுக்கடுத்து சக்தி வடிவங்களே மிகுதியாக உள்ளன. சக்தி வழிபாட்டைத் தாய்த்தெய்வ வழிபாடு என்றும் கூறுவர்.

**சௌரம்**

சூரியனைப் பரம்பொருளாக வழிபடுவது சௌரம். கோயிலின் தெற்குப் பிரகாரத்திலும், நவக்கிரகங்களுக்கு நடுவிலும் சூரியனின் திருவடிவத்தைக் காணலாம். நவக்கிர வழிபாட்டிலும், வைகறை வழிபாட்டிலும் முதல் வழிபாட்டிற்குரியவன்

சூரியனே. மற்றும் 'சூரிய பூசை' நடைபெறுகின்ற திருத்தலங்களில் சங்கரநயினார் கோயிலும் ஒன்று.

ஆறு சமயங்களுக்குமுரிய திருத்தலமாகச் சங்கரநயினார் கோயில் விளங்குகிறது. என்றாலும் இக்கோயில் சைவ, வைணவ ஒருமைப்பாட்டிற்கே முதன்மையான இடத்தைத் தந்துள்ளது என்பதும் இங்குக் குறிப்பிடத்தக்கது ஆதலின் சைவ, வைணவ ஒருமைப்பாட்டிற்கு இக்கோயில் ஆற்றியுள்ள பணிகளை இனி நோக்குவோம்.

**சங்கர நயினார் கோயிலின் பங்கு**

சைவம், வைணவம் ஆகிய இவ்விரு சமய இணக்கத்திற்குச் சங்கர நயினார் கோயிலும் தன் பங்காகச் சில கடமைகளை நிறைவேற்றுகின்றது. இக்கோயிலுக்குச் சமயப்பொறையுடைய அனைவரும் வருகை தருகின்றனர். காரணம், இது ஆறு சமயங்களுக்கும் பொதுவானதாகத் திகழ்கின்றது.

***சங்கர நயினார் கோயிலில் வைணவம்***

சங்கர நயினார் கோயில் சிவன் ஆலயம். ஆதலால் இது சைவ சமயம் சார்ந்தது என்பதில் ஐயமில்லை. அவ்வாறே சைவ வைணவ ஒருமைப்பாட்டை வளர்க்கும் திருத்தலம் இஃதாதலால் இக்கோயிலில் வைணவத்தின் செல்வாக்கும் உண்டு.

1. தல வரலாற்றின்படி, சங்கர நாராயணர் வடிவத்தை முதன்முதல் தரிசித்து வழிபட்ட முதல் வைணப் பக்தன் பதுமன் ஆவன்.

2. சங்கர நாராயண வடிவத்தில் நாராயணனின் பாதி வடிவம் வைணவச் சார்புடையது.

3. கருவறையின் பின்பக்கம், மேற்குக் கோட்டத்தில் லிங்கோற்பவரோ மகாவிஷ்ணுவோ எழுந்தருளியிருப்பது முறை. ஆனால் இக்கோயிலில்

யோக நரசிம்மர் எழுந்தருளியிருக்கின்றார். இப்படி விஷ்ணுவின் ஓர் அவதாரம் கோட்டத்தில் வீற்றிருப்பது ஒரு தனிச்சிறப்பு.

4. கோயிலில் அவதாரச் சிலைகள் மேலும் சில இருக்கின்றன. அவை. 1. யோக நரசிம்மர், 2. இரணிய சம்ஹார மூர்த்தி, 3. இராமர், 4. வாமனர், 5. திரிவிக்கிரமர்.

நரசிம்ம அவதாரச் சிலைகள் மட்டும் 1, நரசிம்மர், 2. யோக நரசிம்மர், 3. இரணிய சம்ஹார மூர்த்தி என்ற மூன்று நிலைகளில் காணப்படுவது மற்றொரு தனிச்சிறப்பு.

5. மகாவிஷ்ணு, வெங்கடாசலபதி சிலைகளும் கோயிலில் உள்ளன.

6. சரஸ்வதி, இலக்குமி, பிரமன், மன்மதன், இலக்குவனது சிலைகளும் வைணவத் தொடர்புடையன. ஐம்முகப் பிரமன் சிலையும் இங்கே இருக்கிறது.

சைவத்தையும், வைணவத்தையும் நிகராகப் போற்ற வேண்டும் என்பதற்காக இந்தச் சிவன் கோயிலில் வைணவச் சார்புடைய பல சிலைகளை நிறுவினர். இத்தனை சிலைகளைப் பொதுவாக வேறு சிவன் கோயில்களில் காண முடியாது.

## சங்கர நயினார் கோயிலில் சங்கர நாராயண வடிவத்தை எழுந்தருளச் செய்ததற்குரிய காரணங்கள்

சங்கர நாராயணருக்குத் தனிச்சன்னதியைக் கொண்ட ஒரே கோயில் சங்கர நயினார் கோயில். இங்கே அந்த வடிவத்தை எழுந்தருளச் செய்வதற்குச் சில காரணங்கள் இருக்கின்றன. அவை வருமாறு:-

1. இரு சமய ஒருமைப்பாட்டை வற்புறுத்தச் சங்கர நாராயண வடிவத்தை முன்னோர் எழுந்தருளச் செய்தனர்.

2. அர்த்தநாரீசுவரர் வடிவம் திருச்செங்கோட்டில் உள்ளது. அதைப் போலச் சங்கர நாராயண வடிவத்தைச் சங்கர நயினார் கோயிலில் நிறுவினர். இவை இரண்டுமே இரண்டாயிரம் ஆண்டுக்கு முற்பட்டவை.

3. இரு சமயச் சான்றோர்கள் சங்கர நாராயண வடிவத்தை ஏற்று அதைப் பலவாறு புனைந்துரைத்தனர். எனவே, இது புகழ்பெற்ற வடிவமாயிற்று. சங்கர நயினார் கோயிலில் நிலைநாட்டப்பட்டது.

4. இலக்கியப் புனைந்துரைகளுக்குத் தகுந்தபடி பல்லவர் சங்கர நாராயண கற்சிலை வடிவங்களைத் தளவரிசைகளில் உருவாக்கினர். அவற்றைச் சோழர்கள் கோட்டங்களில் வடித்தனர். பாண்டியர் அந்த வடிவத்தைத் தனிச் சன்னதியில் நிறுவிச் சமயப்பொறையை வெளிப்படுத்தினர்.

5. கோயில்களைக் கட்டியவர்கள் பக்தி ஆர்வத்தால், அவற்றின் அமைப்பு முதலியவற்றில் எவையேனும் புதுமைகளைப் புகுத்துவது உண்டு. சங்கர நயினார் கோயிலில் சங்கர நாராயண வடிவத்தைப் பதித்தது வேறு எந்தத் திருத்தலத்திலும் காண முடியாத புதுமையாம்.

இதுகாறும் கூறியவற்றைத் தொகுத்து நோக்கின், சமயங்கள் தத்துவங்களால் பலவாகக் கிளைத்தன என்பதும் வேறுபாடுடைய சமயங்களுள் சில காழ்ப்புக் கொண்டன என்பதும், அதனால் சமய பூசல்கள் உருவாயின என்பதும் புலனாகின்றது. அப்பூசல்கள் ஒழிய சமயச் சான்றோர் பலர் அரும்பணி ஆற்றினர். அவர்தம் அருஞ் செயல்களால் பிணக்கம் ஓரளவு தணிந்து இணக்கம் ஏற்படலாயிற்று. அவ்வாறு இணக்கம் காண முயன்ற திருத்தலங்களுள் ஒன்றாக சங்கர நயினார் கோயில் திகழ்கிறது என்பது இவ்வியலால் துணியப்படுகிறது. இவ்வியலில் கூறியுள்ள செய்திகளை இனித் தொகுத்துக் காண்போம்.

# தொகுப்புரை

1. சங்கர நாராயண வடிவத்தை அகநானூறு முதன்முதல் குறித்தது. ஆனால் அந்த வடிவத்தின் பெயரைச் சுட்டவில்லை.

2. சிவனையும், திருமாலையும் சங்க இலக்கியங்களும், சிலப்பதிகாரமும் ஒத்த நிலையில் போற்றின.

3. சான்றோர் பலர் சங்கர நாராயண வடிவத்தைப் புனைந்துரைத்ததால் மகேசுவர வடிவங்களில் அது புகழ்பெற்ற வடிவமாகத் திகழ்ந்தது.

4. மாமல்லையில் வடிக்கப்பட்ட சங்கர நாராயணர் கற்சிலைகள் காலத்தால் மிக்க பழமையானவை.

5. பல்லவர், சோழர், பாண்டியர் ஆகிய மூவரும் சங்கர நாராயண வடிவத்தை எழுந்தருளச் செய்தனர்.

6. சங்கர நாராயண வடிவத்தைத் தளவரிசைகளிலும், பிரகாரங்களிலும், கோட்டங்களிலும், சன்னதிகளிலும், கருவறைகளிலும் நிறுவினர்.

7. சங்கர நாராயணர் எழுந்தருளியுள்ள சிறப்பான திருத்தலங்கள் நான்கு; இவற்றில் மூன்று தமிழகத்திலும், ஒன்று கர்நாடகத்திலும் உள்ளன.

8. சங்கர நாராயண வடிவம் இரு சமய ஒருமைப்பாட்டின் சின்னம்.

9. சிவன் கோயில்களில் திருமால் சிலைகள் இருப்பது பெரும்பான்மை, திருமால் கோயில்களில் சிவன் சிலைகள் இருப்பது சிறுபான்மை.

10. திருமாலின் சன்னிதிகளை உள்ளடக்கிய பழைய சிவனின் கோயில்கள் மொத்தம் பன்னிரண்டு.

11. இரு சமயங்கள் முரண்பட்டபோது, அவற்றை நீக்கப் பல நடவடிக்கைகள் மேற்கொள்ளப்பட்டன. இவற்றால் அந்த முரண்பாடுகள் ஓரளவு தணிந்தன; அறவே அகலவில்லை.

12. ஆறு சமயப் பரம்பொருள்கள் எழுந்தருளியுள்ள கோயில்களாகச் சங்கர நயினார் கோயில் திகழ்கின்றது. இது சமயப் பொறைக்குச் சிறந்த எடுத்துக்காட்டு.

# அடிக்குறிப்புகள்

1. அகம் 360, வரி 6-9.

2. பரி 8; 1-3

3. முருகு 161-2

4. புறம் 56; 1-16

5. சிலம்பு 14; 7,8

6. சிலம்பு 5; 169

7. சிலம்பு 5; 172

8. சிலம்பு 11 ; 128,9

9. சிலம்பு 26; 62-67

10. அற்புதத்திருவந்தாதி 41

11. திருஞானசம்பந்தர் தேவாரம், இரண்டாம் திருமுறை பதிகம் 67, திருப்பெரும்புலியூர்- பாடல் 1,

12. திருஞானசம்பந்தர் தேவாரம், திருவால வாய்ப் பதிகம்; பாடல் 7.

13. திருநாவுக்கரசர் தேவாரம், திருநெய்த்தானப் பதிகம், பாடல் 7,

14. திருநாவுக்கரசர் தேவாரம், திருப்பயற்றுார்ப்பதிகம், பாடல் 7.

15. பொன்வண்ணத்தந்தாதி 6

16. மேற்படி 65

17. முதல் திருவந்தாதி 14

18. மேற்படி, 98

19. மூன்றாம் திருவந்தாதி 63

20. நாலாயிர திவ்யப்பிரபந்தம், பெரிய திருமொழிப்பாடல் 1186

21. மேற்படி பாடல் 1664

22. மேற்படி பாடல் 1640

23. நாலாயிர திவ்யப்பிரபந்தம், திருவாய்மொழி 10 பாடல் எண் - 3112

24. மேற்படி, திருவாய்மொழி - 4. பாடல் எண் - 2500

25. கம்பராமாயணம், கிஷ்கிந்தா காண்டம், நாடவிட்ட படலம், பாடல் 24

26. முக்கூடற்பள்ளு 171

27. நாகசாமி, இரா., மாமல்லை, ப.156, 157.

28. Soundrarajan, KV., Art of South India, Tamil Nadu and Kerala, Appendix II, Harihara.

29. சுப்பிரமணியகவிராயர், சொ. டாக்டர் (1) திருக்குற்றால நாத சுவாமிகள் வரலாறும் பண்பாடும், ப.133-134, 223, (2) ஆசிரியர் குழு, தமிழக இந்துக் கோயில்கள், பாகம் 2.

30. நான்முகன் திருவந்தாதி 6

31. தேவாரத்திருத்தலங்கள், இணைப்பு, பொ.பாலசுப்பிரமணியன், ப.12

32. ஜகத்குரு ஸ்ரீகாஞ்சி காமகோடி ஸ்ரீசந்திர சேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சாரிய சுவாமிகள், அருளுரை, தொகுதி 13, ப.22,

33. திருவாய்மொழி 4:6.

34. திருநாவுக்கரசர் தேவாரம், திருக்கச்சி ஏகம்பப் பதிகம், பாடல் 7.

35. மேற்படி, திருமறைக்காட்டுப்பதிகம், பாடல் 6.

36. மேற்படி, திருவீதிமிழைலைப் பதிகம், பாடல் 7.

37. சிவஞான சித்தியார், சுபக்கம், பாடல் 115

38. திருவாய்மொழி, 1:5.

# முடிவுரை

ஒரு சமூகத்தின் பண்பாட்டு வரலாற்றுடன் நெருங்கிய தொடர்பு கொண்டவையாய்க் கோயில்கள் விளங்குகின்றன. அக்காலத்திலிருந்து இக்காலம் வரையில் கலை இலக்கியங்களின் வளர்ச்சிக்கும் சமூக ஒற்றுமைக்கும் கோயில்கள் பெரும் பங்காற்றியுள்ளன. இத்தகு சிறப்பிற்குரிய கோயில்களை ஆராய்வதன் மூலம், அக்கோயில்களை உருவாக்கிய சமூகத்தைப் பற்றித் தெளிவாக அறிய இயலும். அத்தகையதொரு முயற்சியாகவே சங்கர நயினார் கோயில், இலக்கிய வரலாற்று ஆய்வு எனும் தலைப்பில் இவ்வாய்வு மேற்கொள்ளப்பட்டுள்ளது.

கணினியுகமென்று அறியப்பெறும் இந்த இருபத்தியோராம் நூற்றாண்டில், சமய சமரச மனப்பான்மை உலகெங்கும் குறைந்து வருவதைத் தெளிவாகக் காண முடிகின்றது. இந்தியாவில் பாபர் மசூதி இடிக்கப்பட்டதும் ஆப்கானிஸ்தானில் புத்தர் சிலைகள் கணநேரத்தில் உடைத்து நொறுக்கப்பட்டதுமான நிகழ்ச்சிகளிலிருந்து அண்மைக் காலத்தில் சமய நல்லிணக்கமின்மை உலகில் பெரும் சிக்கலாக உருவெடுத்துள்ளமையை அறியலாம். இத்தகையதொரு பிற்போக்கான சூழலில் சைவம், வைணவம் எனும் இரு பெரும் அகச் சமயங்களிடையே ஒருமைப்பாட்டுணர்வை ஏற்படுத்தும் வகையில் அமைக்கப்பட்ட சங்கர நயினார் கோயில் பற்றி ஆராய்வது காலத்தின் கட்டாயமாகக் கொள்ளத்தக்கதாகும்.

சிவ வழிபாடு தோன்றி மெதுவாக வளர்ச்சி பெற்றுக் கனிந்து கச்சிதமான உச்சநிலையை அடைந்தபோது கி.பி.பதினோராம் நூற்றாண்டில் சங்கர நயினார் கோயில் தோன்றியது. தோன்றிய காலந்தொட்டு இக்கோயில் புகழ்பெற்று விளங்குகிறது. இப்புகழுக்குச் சங்கரன் நயினார் கோயிலிலுள்ள சங்கர நாராயணர் வடிவமே, முக்கிய காரணமாகத் திகழ்கின்றது. அதாவது மூர்த்தியில் சிறப்புப் பெற்ற திருத்தலமாகச் சங்கர நயினார் கோயிலைச் சுட்டலாம். சங்கரனார், சங்கர நாராயணர், கோமதியம்பிகை ஆகிய மூன்று சன்னதிகள் வரிசையாக இருப்பதும், திருமேனியுடன் நடராசர் காட்சியளிப்பதும், காரைக்காலம்மையார் எழுந்தருளி இருப்பதும், யோக நரசிம்மர், கார்த்தவீரியன் முதலியோரின் எழில் வாய்ந்த

திருவுருவச் சிலைகளும் சங்கர நயினார் கோயிலுக்குப் பெரும் புகழ் சேர்க்கின்றன. இக்கோயிலில் வேறு திருத்தலங்களில் காணக்கூடிய சிலைகளுடன் எங்கும் காண முடியாத அரிய சிலைகளும் உள்ளனவென்பது மிகவும் குறிப்பிடுவதற்கு உரியது ஆகும்.

கோமதியம்மையின் திருவுருவின் முன் அமைந்துள்ள மந்திரச் சக்கரம், கோயிலின் மாண்பிற்கு முக்கியக் காரணமாகத் திகழ்கிறது. இச் சக்கரம் மனிதனின் அகப் புற நோய்களை அகற்றுகின்ற மந்திர மருந்தாகக் கருதப்படுகிறது. மேலும் உடற் பிணிகளை நீக்குகின்ற புற்றுமண் மருந்தும் சங்கர நயினார் கோயிலில் காணப்படுகிறது.

நேர்த்திக்கடன் செலுத்தும் திருத்தலம், சைவ வைண ஒருமைப்பாட்டுத் தலம், பெண் தெய்வ வழிபாட்டில் சிறப்புடைய திருத்தலம் எனும் பல்வேறு பெருமைகளுக்கு உரியதாக சங்கர நயினார் கோயில் திகழ்கிறது. இக் கோயிலின் மேன்மைகளைப்பல மடங்கு உயர்த்தும் நோக்கில் இங்கு ஆண்டுதோறும் ஆடித் தவசுத் திருவிழா கொண்டாடப்படுகிறது. சங்கர நயினார், சங்கர நாராயணராக திருக்காட்சி அளிக்கின்ற சிறப்பிற்குரியதாக இப்பெருவிழா அமைந்துள்ளது.

சங்கர நயினார் கோயிலுக்கு வந்து வழிபடுவோர் துன்பங்கள் யாவும் முற்றிலுமாக நீங்கிவிடும் என்பது மக்களது நம்பிக்கையாகும். இவ்வகையில் திருநெல்வேலி மாவட்டத்திலுள்ள புகழ்பெற்ற வழிபாட்டுத் தலமாக சங்கர நயினார் கோயில் திகழ்வதாகக் கூறலாம். திருநெல்வேலியைச் சுற்றியுள்ள பகுதிகளில் வாழும் விவசாயிகள், வியாபாரிகள், தொழிலாளிகள் உள்ளிட்ட அனைத்து மக்களின் நம்பிக்கைகளையும் பெற்ற சிறப்பான வழிபாட்டுத் தலமாக சங்கர நயினர் கோயில் உள்ளது என்பதை இவ்வாய்வேட்டில் சான்றுகளுடன் சுட்டி விளக்கப்பட்டுள்ளது.

இவ்வாய்வேட்டில் விவாதிக்கப்பட்டுள்ள செய்திகளும் கண்டறியப்பட்டுள்ள முடிவுகளும் இயல் வரிசை முறைப்படி தொகுக்கப்பட்டுக் கீழே காட்டப்பட்டுள்ளது.

**இயல் ஒன்றில் கண்டறியப்பட்டுள்ள முடிவுகள்**

மொகஞ்சதாரோ, ஹரப்பா அகழ்வாய்வில் கிடைத்த சிவ வடிவம் பொறித்த முத்திரைகளும், இலிங்கங்களும் ரிக் வேதமும் சிவ வழிபாட்டின் தொன்மையைத் தெரிவிக்கின்ற ஆதாரங்கள் ஆகும்.

சிவ வழிபாடு, அடிப்படையில் மூன்று வகைப்படும். (1) சிவனை, அருவ நிலையில் வழிபடுவது அருவ வழிபாடு (2) சிவ லிங்க வழிபாடு என்பது அருவுருவ வழிபாடு (3) சிவ வடிவங்களை வழிபடுவது உருவ வழிபாடு. இவை மூன்றும் தொன்மையானவை; இப்போதும் வழக்கத்தில் இருப்பவை.

சிவனைப் பற்றிய குறிப்புகள் தொல்காப்பியத்தில் இல்லை.

''சிவ வடிவம் இதுவே'' என்று பழங்காலத்தில் வரையறை செய்யப் பட்டிருந்தது. இது தென்மையான தமிழ் இலக்கியங்கள் மூலம் அறியப்படுகின்றது.

சிவனது பல வேறுபட்ட வடிவங்களைச் சங்கப்பாடல்கள் விவரிக்கின்றன.

சங்கர நாராயணர் வடிவமும் சங்க காலத்தில் இருந்தது.

சிவன், சிவ வழிபாட்டைப் பற்றிய குறிப்புகள் சில சிலப்பதிகாரத்தில் காணப்படுகின்றன.

சங்கப் பாடல்கள், சிலப்பதிகாரம் முதலியன சிவனைச் 'சிவன்' என்ற பெயரால் குறிப்பிடவில்லை. அவனை முக்கண்ணன், ஆலமர் செல்வன், கறைமிடற்றண்ணல், இமையா நாட்டத்து இறைவன், பிறவா யாக்கைப் பெரியோன் என்றெல்லாம் அடைமொழிச் சிறப்புடன் குறித்தன.

தெய்வங்கள் பலருள் முதன்மையிடம் சிவனுக்கே இருந்தது. இவனே பரம்பொருளாக மதிக்கப்பட்டான்.

'சைவம்' என்ற சொல்லை மணிமேகலை முதன் முதல் குறிப்பிடுகிறது.

கி.பி. இரண்டாம் நூற்றாண்டளவில் 'சைவம் சமயம்' சமுதாயத்தில் பரவியிருந்தது. சைவ வாதிகளும் இருந்தனர். சமய முரண்பாடுகளும் இருந்தன.

சிவனின் பழைய கற்சிலை வடிவங்களை மாமல்லபுரத்தில் காணலாம்.

ஆதிவராஹர் குகையிலும், தர்ம ராசா ரதத்திலும் சங்கர நாராயணரின் கற்சிலை வடிவங்கள் உள்ளன.

பாண்டிய நாட்டில் சைவம், வைணவம், கௌமாரம், சாக்தச் சார்புடைய திருத்தலங்கள் பல இருக்கின்றன.

சங்கரன் கோயில் என்பது பாண்டி நாட்டுச் சிவத்தலம். இது கி.பி. பதினோரம் நூற்றாண்டில் தோன்றியது.

திருத்தலத்திற்கும், இறைவனுக்கும், இறைவிக்கும் பல பெயர்கள் நூல், உலகு ஆகிய இரு வழக்குகளிலும் வழங்குகின்றன.

சங்கரன், சங்கர நயினார், சங்கர நாராயணர் என்ற முப்பெரும் பெயர்கள் தனிச்சிறப்புடையன.

சிவனது சில பெயர்களை மக்கள் சூடிக்கொண்டனர்.

சங்கரநயினார் கோயிலுடன் மிக நெருக்கமான தொடர்புடைய பாண்டியர் உக்கிரபாண்டியன் முதலியோர் அறுவரேயாவர்.

காவை வடமலையப்பப் பிள்ளையன் அறங்காவலர் திரு.என்.ஏ.வி. சோமசுந்தரம் பிள்ளை ஆகியோர் சங்கரன் கோயிலுக்குச் செய்த திருப்பணிகள் பாராட்டுக்குரியன. கோயிலின் இப்போதைய கட்டமைப்புக்கு இவர்களே காரணம்.

''பூலித்தேவன் அறை'' வரலாற்றுச் சிறப்புடையது.

சங்கரநயினார் கோயிலில் பொறிக்கப்பட்ட கல்வெட்டுகள் பல, மன்னர் கோயிலுக்கு அளித்த தேவதானத்தையும், தனிப்பட்டவருக்கு அளித்த நிலக்கொடையையும் விவரிக்கின்றன.

## இயல் இரண்டில் கண்டறியப்பட்டுள்ள முடிவுகள்

சங்கர நயினார்கோயில் மிக அழகான அமைப்புடையது. இந்த ஒரு கோயிலுக்குள் ''முப்பெருங் கோயில்கள்'' இருப்பது இதன் தனிச் சிறப்பு.

பழைய மரபின்படி ஊரின் மையத்தில் கோயில் உள்ளது.

சங்கர நாராயணரின் இரட்டை வண்ணச்சிலை வியப்புக்குரியது; இதைப்போன்ற சிலையை வேறு எங்கும் காண முடியாது.

சங்கர நாராயணரது வடிவம் பக்தி ஆர்வத்தால் தோன்றிய வடிவம்; இது சமய இணக்கத்தின் சான்றாக அமைந்தது.

சைவ, வைணவச் சான்றோர்கள் சங்கர நாராயணரின் வடிவத்தைப் புனைந்துரைக்கின்றனர்; புகழ்ந்துரைக்கின்றனர்.

சிவனின் சக்தி வடிவமே நாராயணன்; இதனை இரு சமயச் சான்றோரும் ஏற்கின்றனர்.

சங்கர நயினார் கோயிலின் புற்றுமண் மருத்துவப் பேராற்றலுடையது. ஸ்ரீ சக்கரம் மந்திரப் பேராற்றலுடையது எனவும் இவற்றால் பலரது நோய்கள் தணிகின்றன; அகலுகின்றன எனவும் நம்புகின்றனர். எனவே இத்தலம் சிறந்த ‘‘பிரார்த்தனைத் திருத்தலமாக’’ விளங்குகின்றது.

நடராசரின் அம்பலத்தில் காரைக்காலம்மையார் எழுந்தருளியிருப்பது கோயிலின் ஒரு சிறப்பம்சமாம்.

கோயிலில் அமைந்த பாண்டியர் மரபைத் தழுவிய பழங்காலக் கற்சிலை வடிவங்களும், அண்மைக்கால ஓவியங்களும் அழகானவை. கோயிலில் பழமையும், புதுமையும் இணைந்துள்ளன.

கற்சிலை வடிவங்களில் காண முடியாத தெய்வ வடிவங்களை ஓவியங்களிலும், இந்த ஓவியங்களில் காண முடியாத தெய்வ வடிவங்கைளக் கற்சிலைகளிலும் காண முடியும்.

ஆறு சமயங்களுக்குரிய தெய்வங்கள் இக்கோயிலில் கற்சிலைகளாய், ஓவியங்களாய்க் காட்சி தருகின்றனர்.

பக்தர்கள் சங்கரலிங்க சுவாமி என்ற ஒருவரையோ, சங்கரன், நாராயணன் என்ற இருவரையோ, கோட்டத் தெய்வங்களாகத் திகழ்கின்ற மும்மூர்த்திகள் என்ற மூவரையோ தாம் விரும்புகின்ற முறைகளில் வழிபடுகின்றனர்.

சமய இணக்கதிற்குச் சங்கர நாராயணர் வடிவம் ஒரு சிறந்த சான்று எனக் கொள்ளலாம்.

**இயல் மூன்றில் கண்டறியப்பட்டுள்ள முடிவுகள்**

தேர்ந்த சில சடங்குகளின் தொகுதிகளே திருவிழாக்களாக அமைகின்றன. இவை காலத்தைக் கணிக்க முடியாத பழமை கொண்டவை.

திருவிழாக்கள் மரபுவழிப்படி தொடர்ந்தும், பல நூற்றாண்டுகளைக் கடந்தும், இப்போதும் நடைபெறுகின்றன.

கார்த்திகை விளக்கீடு, இந்திரவிழா, திருவாதிரைத்திருவிழா முதலியன இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு மேற்பட்ட பழமையுடைய திருவிழாக்களாகும்.

திருவிழாக்கள் பழங்காலத்தில் சமயச்சார்புடையன அல்ல; ஏறக்குறைய முதல் நூற்றாண்டுக்குப் பிறகு அவை சமயச் சார்புடையனவாக மாறின.

மக்கள் ஓய்வாகவும், மகிழ்ச்சியாகவும், செல்வச் செழிப்புடனும் வாழ்கின்ற காலச்சூழ்நிலைகளில் விழாக்கள் நடைபெறுவது வழக்கம்.

மக்களிடையே நாகரிகம், பண்பாடு, மொழி, சமயம் முதலியன மெல்லக்கலப்பதற்குத் திருவிழாக்கள் முக்கியக் காரணங்கள் ஆகும்.

சங்கரநயினார் கோயிலில் பஞ்ச பருவ வழிபாடுகளும் சிறப்பாக, நிறைவாக நடைபெறுகின்றன.

கோயிலில், ஆறு சமயத் தெய்வ வழிபாடுகளில் சிவ வழிபாடு முதன்மையானது. இந்த வழிபாட்டுக்கு நிகராக மற்ற ஐந்து சமயத் தெய்வங்களையும் போற்றி வழிபடுகின்றனர்.

இந்துமதக் கோயில்கள் பலவற்றில் அறு சமயத் தெய்வ வழிபாடுகள் நிறைவாக நிகழ்கின்றன.

அறு சமயத் தெய்வ வழிபாடுகளைத் தவிர வேறு சில வழிபாடுகள் வருமாறு:

1. சங்கர நாராயணர் வழிபாடு
2. மும்மூர்த்தி வழிபாடு
3. சமய குரவர் நால்வர் வழிபாடு
4. நாயன்மார் வழிபாடு
5. காவல் தெய்வங்கள் முதலிய சிறு தெய்வ வழிபாடுகள்
6. விளக்கு வழிபாடு
7. நவக்கிரக வழிபாடு

பௌர்ணமி நாட்களில் திருவிழாக்கள் நடைபெறுகின்றன; அல்லது பிரம்மோற்சவங்கள் தொடங்குகின்றன. இப்பழைய மரபை இப்போதும் எல்லாக் கோயில்களும் வழுவாமல் பின்பற்றுகின்றன.

கார்த்திகை விளக்கீடு, நவராத்திரி, தீபாவளி முதலியன கோயிலுக்குள்ளே நடைபெறுகின்றன. இவற்றைக் காண உள்ளூர் மக்கள் திரளாகப் பங்கேற்கின்றனர்.

கோயிலின் அகத்தும், புறத்தும் நடைபெறுகின்ற சித்திரைப் பெருந்திரு விழாவிலும், ஆடித்தவசு விழாவிலும் உள்ளூர் வெளியூர் மிகப்பெருந்திரளான மக்கள் கூடி வழிபடுகின்றனர்.

பொதுவாக எல்லாக் கோயில்களிலும் நடைபெறுவதைப் போல இக்கோயிலிலும் பெருந்திருவிழா நடைபெறுகின்றது.

ஆனால் ஆடித்தவசு விழா சிறப்பாக ஒரு புராண வரலாற்றுப் பின்னணியோடு நிகழ்கின்றது. அரிய நுட்பமான கருத்துகளை மக்கள் எளிதில் புரிந்து கொள்ளும்படி ஆடித்தவசு விழாவின் நடைமுறைகள் உள்ளன.

தெய்வ வடிவங்கள், வழிபாடுகள், திருவிழாக்களின் மூலமாக ''அரியும் சிவனும் ஒண்ணு'' என்ற கருத்து ஆழமாகவும், அழுத்தமாகவும் நிலைநாட்டப் பெறுகின்றது.

பக்தர்கள் கோயிலுக்குச் செலுத்துகின்ற காணிக்கை முறைகள் பலவாகும். 'சூறையிடுதல்' என்ற காணிக்கை முறை இக்கோயிலின் ஒரு சிறப்பம்சம்.

ஆடித்தவசு விழாவுடன் தொடர்புடைய நம்பிக்கைகள் பல உள்ளன. காணிக்கைகள் பல உள்ளன. காணிக்கைகளும், நம்பிக்கைகளும், தமிழர் வாழ்க்கையுடன் திருவிழாக்கள் நெருங்கிய தொடர்புடையன என்பதற்குச் சான்றுகளாக அமைகின்றன.

**இயல் நான்கில் கண்டறியப்பட்டுள்ள முடிவுகள்**

சங்கர நாராயண சுவாமி கோயிற் புராணம் என்ற தல புராணம் ஒன்றும்,சங்கரலிங்க உலா முதலிய சிற்றிலக்கியங்கள் ஏழும், பிற இலக்கியங்களில் பயின்றுவரும் பாடல்கள் சிலவும், தனிப்பாடல்கள் சிலவும் சங்கரன் கோயிலைச் சார்ந்த இலக்கியங்கள் ஆகும்.

மேற்கண்ட இலக்கியங்களால் சங்கரலிங்க சுவாமிகளின் கோயிலைப் பற்றிய வரலாற்றையும், சங்கரன் கோயிலில் வாழும் மக்களின் வாழ்வியலையும் அறிய முடிகிறது.

திருத்தலத்தைப் பற்றிய இலக்கியங்கள், இத்திருத்தலத்தின் தோற்றத்தையும், அரசன், ஜமீன்தார் முதலிய அடியார் இக்கோயிலுக்குச் செய்த வளர்ச்சிப் பணிகள் ஆகியவற்றையும் விளக்குகின்றன.

தல புராணம் விரித்துக் கூறுகின்ற இக்கோயில் பற்றிய பல்வேறு செய்திகளை மற்ற நூல்கள் தொகுத்தும் சுருக்கியும் கூறுகின்றன.

திருத்தலத்தைப் பற்றிய அரிய குறிப்புகள் பல சங்கரலிங்க உலாவில் அதிகமாகக் காணப்படுகின்றன. எனவே இவ்வுலா நூல் சங்கரநயினார் கோயில் வரலாற்று ஆய்வுக்கு சிறந்த ஆய்வுமூலமாகத் திகழ்கிறது.

உக்கிர பாண்டியன், வீரசேனன், முசுகுந்தன், இராம பாண்டியன் முதலிய மன்னர்களைப் பற்றிய வரலாற்றுக் குறிப்புகளும், வடமலையப்பப் பிள்ளையனைப் பற்றிய குறிப்புகளும் இக்கோயில் மீது பாடப் பெற்றுள்ள இலக்கியங்களில் காணப்பெறுகின்றன. எனவே இந்நூல்கள் பக்தி இலக்கியங்களாக மட்டுமேயன்றி வரலாற்று மூலங்களாகவும் திகழ்வது அறிய வேண்டியதாம்.

சங்கரன் கோயிலைப் பற்றிய நாட்டுப்புறப் பாடல்களும் இக்கோயில் பற்றிய அரிய செய்திகளைக் கூறுகின்றன.

### இயல் ஐந்தில் கண்டறியப்பட்டுள்ள முடிவுகள்

சங்கர நாராயண வடிவத்தை அகநானூறு முதன்முதல் குறித்தது. ஆனால் அந்த வடிவத்தின் பெயரைச் சுட்டவில்லை.

சிவனையும், திருமாலையும் சங்க இலக்கியங்களும், சிலப்பதிகாரமும் ஒத்த நிலையில் போற்றின.

சான்றோர் பலர் சங்கர நாராயண வடிவத்தைப் புனைந்துரைத்ததால் மகேசுவர வடிவங்களில் அது புகழ்பெற்ற வடிவமாகத் திகழ்ந்தது.

மாமல்லையில் வடிக்கப்பட்ட சங்கர நாராயணர் கற்சிலைகள் காலத்தால் மிக்க பழமையானவை.

பல்லவர், சோழர், பாண்டியர் ஆகிய மூவரும் சங்கர நாராயண வடிவத்தை எழுந்தருளச் செய்தனர்.

சங்கர நாராயண வடிவத்தைத் தளவரிசைகளிலும், பிரகாரங்களிலும், கோட்டங்களிலும், சன்னதிகளிலும், கருவறைகளிலும் நிறுவினர்.

சங்கர நாராயணர் எழுந்தருளியுள்ள சிறப்பான திருத்ததலங்கள் நான்கு; இவற்றில் மூன்று தமிழகத்திலும், ஒன்று கர்நாடகத்திலும் உள்ளன.

சங்கர நாராயண வடிவம் இரு சமய ஒருமைப்பாட்டின் சின்னம்.

சிவன் கோயில்களில் திருமால் சிலைகள் இருப்பது பெரும்பான்மை, திருமால் கோயில்களில் சிவன் சிலைகள் இருப்பது சிறுபான்மை.

திருமாலின் சன்னிதிகளை உள்ளடக்கிய பழைய சிவனின் கோயில்கள் மொத்தம் பன்னிரண்டு.

இரு சமயங்கள் முரண்பட்டபோது, அவற்றை நீக்கப் பல நடவடிக்கைகள் மேற்கொள்ளப்பட்டன. இவற்றால் அந்த முரண்பாடுகள் ஓரளவு தணிந்தன; அறவே அகலவில்லை.

ஆறு சமயப் பரம்பொருள்கள் எழுந்தருளியுள்ள கோயில்களாகச் சங்கர நயினார் கோயில் திகழ்கின்றது. இது சமயப் பொறைக்குச் சிறந்த எடுத்துக்காட்டு.

கோயில்களைப் பற்றி எதிர்வரும் காலங்களில் ஆய்வு நிகழ்த்த உள்ளவர்களுக்காகப் பின்வரும் தலைப்புகள், பணிவுடன் பரிந்துரைக்கப்படுகின்றன.

1. சமய ஒருமைப்பாட்டில் தமிழ்நாட்டுச் சிவன் கோயில்களின் பங்கு

2. சமய ஒருமைப்பாட்டில் தமிழ்நாட்டுத் திருமால் கோயில்களின் பங்கு

3. தமிழ்நாட்டுக் கோயில் கலை - ஓர் ஆய்வு

4. தமிழ் இலக்கியங்களும் கோயில்களும் - ஓர் ஆய்வு

5. சங்கர நாராயணர் வடிவமும் அரிஅர (ஹரி ஹர) வடிவமும் - ஓர் ஆய்வு

# துணை நூற்பட்டியல்

## முதன்மை ஆதார நூல்கள்


அண்ணாமலை கவிராயர்
**கோமதி அந்தாதி**
அண்ணாமலை ரெட்டியார் நினைவுக் குழு
சென்னிகுளம், முத்தமிழ் அச்சகம்
கரிவலம் வந்தநல்லூர்
*1996.*

அழகிய சொக்கநாதப் பிள்ளை
**சங்கர சதாசிவ மாலை**
தச்சநல்லூர் கலைமன்றம்
*1963.*

ஈசுவரமூர்த்திப்பிள்ளை, ஆ.,
கோமதி சதரத்ன மாலை,
திருக்கோயில் வெளியீடு,
மதுரை, *1995.*

சீவலமாற பாண்டியன் மற்றும் பலர்
சங்கரநாராயணர் கோயிற் புராணம்
சேற்றூர் மு.ரா. அருணாசலக் கவிராஜர்
அரும்பதவுரை - சுருக்க வசனம்.
அம்பாசமுத்திரம், *1926* மூன்றாம் பதிப்பு

முத்துவீரக் கவிராயர்
சங்கரநாராயணர் கோயில் கோமதி அம்பிகை பிள்ளைத் தமிழ்

சங்கரநயினார் கோயில் அந்தாதி
உ.வே.சாமிநாதையர் (ப.ஆ.)
மதுரைத் தமிழ்ச்சங்க முத்திரசாலை
மதுரை, *1934.*

சங்கரநயினார் கோயிற் சங்கரலிங்க உலா டாக்டர் உ.வே.சாமிநாத ஐயர் (ப.ஆ.) மதுரை பலவான்குடி சிவநேசன் அச்சியந்திசாலை, *1933.*

**துணைமை ஆதாரங்கள்**


| | |
|---|---|
| அருணாசலம், மு., (ப.ஆ.) | **முக்கூடற்பள்ளு**<br>தமிழ் நூலகம்<br>முதற்பதிப்பு, 1984. |
| அருணாசலம், டாக்டர் (ப.ஆ.) | சைவ சமயம் (ஓர் அறிமுகம்)<br>கழக வெளியீடு |
| அருள்சாமி, மு.ச., | நீதிநூல்கள் உரையாசிரியர் தமிழகம்,<br>சென்னை<br>நான்காம் பதிப்பு<br>1963 |
| இராகவையங்கார், மு., | **ஆராய்ச்சித் தொகுதி**<br>தமிழ்ப் பல்லைக்கழக வெளியீடு<br>(நிழற்படிப் பதிப்பு)<br>தமிழ்ப் பல்கலைக்கழகம்<br>தஞ்சாவூர், 1984. |
| இராசையா, ந., | **இந்திய விடுதலைப் போரில் முதன் முழக்கம்**<br>இந்திராகாந்தி எழுத்தகம்<br>சென்னை - 17<br>முதற்பதிப்பு, 1985. |
| இராசையா, ந., | **மாமன்னன் பூலித்தேவன்**<br>ஞானமுருகன் எழுத்தகம்<br>3-97, அயன் கொல்லங் கொண்டான்<br>முதற்பதிப்பு, 1992. |
| இராசசேகர தங்கமணி, | **பாண்டியர் வரலாறு**<br>முதற்பாகம்<br>தமிழ்நாடு பாடல்நூல் வெளியீடு<br>1997. |
| இராசமாணிக்கம், தி., | **தமிழகக் கலைச் செல்வங்கள்**<br>கழக வெளியீடு<br>சென்னை - 108<br>பதிப்பு, 1985. |
| இராசமாணிக்கனார், மா., | **சைவ சமய வளர்ச்சி**<br>பாரி நிலையம்<br>சென்னை |

| | |
|---|---|
| இராசமாணிக்கம், | **தமிழகக் குடைவரைக் கோயில்கள்**<br>திருநெல்வேலி தென்னிந்திய சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம்<br>சென்னை<br>முதற்பதிப்பு, *1984.* |
| இராதாகிருஷ்ணன், எம்., | **தென்னாட்டுக் கோயில்கள்**<br>அல்லயன்ஸ் கம்பெனி<br>சென்னை -*4.* |
| இரவி கார்த்திகேயன், | **தமிழ்ச் சமூகமும் தெய்வங்களும்**<br>சரவணபாலு பதிப்பகம்<br>விழுப்புரம், *1995.* |
| இராமன், கே.வி., | **பாண்டியர் வரலாறு**<br>தமிழ்நாடு பாடநூல் வெளியீடு<br>*1977.* |
| இராசசேகரன், சு., | **திருமயிலைத் திருத்தலம்**<br>இலக்கிய வரலாற்றுப் பார்வை<br>ராஜலட்சுமி பதிப்பகம்,<br>சென்னை - *15*<br>முதற்பதிப்பு, *1989.* |
| உமாமகேஸ்வரி, பு.பா., | **நெல்லையப்பர் கோயில்**<br>தென்னிந்திய சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழக லிமிடெட்<br>சென்னை - *18*<br>பதிப்பு, *1990.* |
| ஏகாம்பரநாதன், ஏ., | **தமிழகச் சிற்ப ஓவியக் கலைகள்**<br>திருநெல்வேலி தென்னிந்திய சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம்,<br>சென்னை, முதற்பதிப்பு, *1984.* |
| ஐயப்ப ரெட்டியார் (எ)<br>வானமாமலை ராமானுஜதாசர் | **அகில இந்திய இந்துத் திருத்தலங்கள்**<br>சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம்<br>சென்னை, இரண்டாம் பதிப்பு, *1990.* |
| கதிரேச செட்டியார், மு., | **திருவாசகம் - திருவெம்பாவை**<br>(கதிர்மணி விளக்கம்)<br>சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம்<br>சென்னை - *1953.* |

| | |
|---|---|
| கல்யாணசுந்தரம், ந., | **தமிழ்நாட்டில் கணபதி வழிபாடு**<br>திருக்குமரன் பதிப்பகம்<br>திருச்செந்தூர்<br>*1994.* |
| கார்த்திகேசு சிவத்தம்பி | **தமிழ் இலக்கியத்தில் மதமும் மானுடமும்**<br>(இலக்கிய வரலாற்றாய்வு)<br>நியூசெஞ்சுரி புக் ஹவுஸ் (பிலிட்)<br>அம்பத்தூர், சென்னை *-98.*<br>சிட்கோ இண்டஸ்ரியல் எஸ்டேட்<br>இரண்டாம் பதிப்பு<br>டிசம்பர் *1994.* |
| கிருஷ்ணசாமி, வே., | **தமிழில் தல புராண இலக்கியம்**<br>கிருஷ்ணா அச்சகம்<br>நாகர்கோவில், பதிப்பு *1974.* |
| கிருபானந்த வாரியார்<br>சுவாமிகள் (திருமுருக) | **முருகன்**<br>குகஸ்ரீ வாரியார் பதிப்பகம்<br>சென்னை, *1995.* |
| குமரகுருபரன் பிள்ளை, டி.எம்., | **திருநாவுக்கரசு சுவாமிகள் தேவாரம்,**<br>திருப்பனந்தாள் காசி மடத்துப் பதிப்பு,<br>முதற்பதிப்பு, *1957.* |
| ,, பதிப்பாசிரியர் | **திருத்தொண்டர் புராணம்**<br>காசிமடப் பதிப்பு<br>ஸ்ரீ வைகுண்டம்<br>முதற்பதிப்பு, *1964.* |
| ------ | **பதினோரம் திருமுறை**<br>ஸ்ரீவைகுண்டம், *1963.* |
| குன்றக்குடி அடிகளார், | **தமிழும் சமயமும்**<br>அச்சிட்டோர்<br>மறைமலை அச்சகம்<br>முதற்பதிப்பு நவம்பர் *1983.* |
| குன்றக்குடி அடிகளார் | **நமது நிலையில் சமயம், சமுதாயம்**<br>சென்னைப் பல்கலைக்கழக வெளியீடு<br>*1975.* |

சண்முகசுந்தரம், சு., — **நாட்டுப்புற இலக்கிய வரலாறு**
மணிவாசகர் நூலகம்
சிதம்பரம், முதற்பதிப்பு, 1980.

சண்முகம் பிள்ளை, மு., — **சங்கத் தமிழரின் வழிபாடும் சடங்குகளும்**
உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்
சென்னை- 600 113
முதற்பதிப்பு, 1996.

சாமிநாதையர், உ.வே., — **கம்பராமாயணம் கிஷ்கிந்தா காண்டம்**
டாக்டர் உ.வே.சாமிநாதையர்
நூல் நிலைய வெளியீடு
சென்னை - 70
முதற்பதிப்பு, 1961.

,, — **பரிபாடல் மூலமும் பரிமேலழகர் உரையும்**
டாக்டர் உ.வே.சாமிநாதையர் நூல்நிலையம்
திருவான்மியூர், சென்னை-41
ஐந்தாம் பதிப்பு, 1980.

சிங்கார வேலு முதலியார், ஆ., — **அபிதான சிந்தாமணி**
Asian Educational Services,
New Delhi - 110 006
பதிப்பு, 1988.

சித்தலிங்கம், டி.பி., — **சைவசமயத் தோற்றமும் வளர்ச்சியும்**
திருவரக புத்தகநிலையம்
சென்னை - 17.
முதற் பதிப்பு , பிப்ரவரி , 1998.

சீனிவாசன், அருட்கவி அரங்க. — **காவடிச் சிந்தும் கவிஞன் வரலாறும்**
சேகர் பதிப்பகம்
சென்னை - 78
முதற்பதிப்பு, 1984.

சீனிவாசன் — **சங்கரநயினார் கோமதியம்மை நான்மணி மாலை**
தச்சநல்லூர் கலைமன்றம், 1926.

சுப்பிரமணியகவிராயர், சொ., — **திருக்குற்றால நாதசுவாமி கோயில் வரலாறும் பண்பாடும்**
உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்
சென்னை - 113
முதற் பதிப்பு, 1998.

சுப்பிரமணிய பிள்ளையவர்கள், கா., (உரையாசிரியர்)
**தனிப்பாடற் திரட்டு**
முதற்பாகம்
இரத்தின நாயக்கர் சன்ஸ்
சென்னை.

சுப்பிரமணியன், பி., சக்தி.
**நெல்லை மாவட்டச் சித்தர்கள்**
கழக வெளியீடு, 1944.

சுப்புரெட்டியார், ந.,
**தொண்டை நாட்டுத் திருப்பதிகள்**
பாரி நிலையம்
சென்னை - 108, ஆகஸ்டு, 1974.

செந்துறை முத்து, புலவர்
**திருக்கோயில்களும் வழிபாட்டு முறைகளும்**
சிறுவர்நூற்பதிப்புக் கழகம்
சென்னை -14
இரண்டாம் பதிப்பு, 1988.

,,
**நாம் வணங்கும் சிவமூர்த்தங்கள்**
தேவி வெளியீடு, சென்னை
முதற்பதிப்பு, 1989.

செயராமன், நா.வீ.,
**உலா இலக்கியம்**
மணிவாசகர் நூலகம்
சிதம்பரம்
முதற்பதிப்பு, 1960.

சேதுப்பிள்ளை, இரா.பி.,
**தமிழகம் - ஊரும் பேரும்**
சண்டே டைம்ஸ் அச்சகம்
சென்னை, 1946.

ஞானசம்பந்தன், அ.ச.,
**தேவாரத் திருப்பதிகங்கள்,** (பதிப்பாசிரியர்)
கங்கை புத்தக நிலையம்,
சென்னை - 17
மூன்றாம் பதிப்பு, மே, 2001.

**பெரியபுராணம் ஓர் ஆய்வு**
சேக்கிழார் ஆராய்ச்சி மையம்
சென்னை - 83.

தட்சிணாமூர்த்தி, அ.,
**தமிழர் நாகரிகமும் பண்பாடும்**
யாழ் வெளியீடு
சென்னை - 40
பதிப்பு, பிப்ரவரி 1999.

தனபாக்கியவதி, த., **தமிழ் இலக்கியத்தில் திருமால் வழிபாடு**
குறிஞ்சி பதிப்பகம்
சென்னை - 28
முதற்பதிப்பு, ஜனவரி, 1996.

தேவநாதன், வி.என்., பதிப்பாசிரியர் **நாலாயிரத் திவ்ய பிரபந்தம்**
சென்னை
முதற்பதிப்பு, 1971.

தேவநேயப்பாவாணர், ஞா., **திருக்குறள் மரபு உரை**
இந்து பப்ளிகேசன்
சென்னை, டிசம்பர் 2000.

**பண்டைத் தமிழக நாகரிகமும் பண்பாடும்**
தமிழர் மதம்
தமிழ்மண் பதிப்பகம்
சென்னை , மறுபதிப்பு, 2000.

திவாகரமுனிவர், **சேந்தன் திவாகரம்**
தென்னிந்திய சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகவெளியீடு
சென்னை
முதற்பதிப்பு, 1958.

நாகசாமி, இரா., **மாமல்லை**
தமிழக அரசு தொல்பொருள் ஆய்வுத்துறை வெளியீடு
சென்னை
முதற்பதிப்பு, 1968.

பரமசிவன், தொ., **தெய்வங்களும் சமூக மரபுகளும்**
நியூசெஞ்சுரி புக் ஹவுஸ் (பி) லிட்
41-பி, சிட்கோ இண்டஸ்டிரியல் எஸ்டேட்
சென்னை - 98
முதற்பதிப்பு, ஜனவரி (1995).

பாலசுப்பிரமணியன், பொ., **தேவாரத்திருத்தலங்கள்**
(இணைப்பு)
13, ஆழ்வார்பேட்டைத் தெரு
சென்னை- 18
முதற்பதிப்பு, 1997.

பாஸ்கர தொண்டைமான், — **வேங்கடம் முதல் குமரி வரை**
(பாலாற்றின் மருங்கிலே)
சென்னை-1
முதற்பதிப்பு, 1960.

மணிமேகலை பிரசுர ஆசிரியர் குழு, — **தமிழக இந்துக் கோயில்கள்**
பாகம் -2
மணிமேகலை பிரசுரம்
சென்னை - 17
முதற்பதிப்பு, 1989.

மறைமலை அடிகள், — **சைவசமயம்**
மணிவாசகர் பதிப்பகம்
பாரிமுனை, சென்னை-108
முதற்பதிப்பு, 1998.

**தமிழர்மதம்**
திருநெல்வேலித் தென்னிந்திய
சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம்,
முதற்பதிப்பு, 1965.

மாணிக்கவேலு, மு.அ., — **தமிழ்நாட்டில் நடராசர் வழிபாடு**
அம்பலவாணர் பதிப்பகம்
சென்னை - 02
முதற்பதிப்பு, ஜூலை 1994.

லாரன்ஸ் நாயகம் — **வன்னிராஜன் கதை**
கிருஷ்ணாஅச்சகம்
நாகர்கோவில், 1977.

ராமசேஷன், ஆர்.
வயைப்பேட்டை
கிருஷ்ணன், ரா., — **மகேச்வர வடிவங்கள்**
திருப்புகழ் பதிப்பகம்
சென்னை -5,
முதற்பதிப்பு, 1992.

வசந்த சரவணபவன், — **தெரிந்த கோயில்கள் தெரியாத விஷயங்கள்**
கலா நிலையம்
மயிலாப்பூர், சென்னை
முதற்பதிப்பு, டிசம்பர் 1992.

விசுவநாத தீட்சிதர் — **திருக்கருவைத் தலபுராணம்**
கரிவலம்வந்தநல்லூர்,
1964.

வேலுப்பிள்ளை, ஆ., (டாக்டர்) **தமிழ் இலக்கியத்தில் காலமும், கருத்தும்**
பாரி புத்தகப் பண்ணை
சென்னை -5, மூன்றாம் பதிப்பு, 1985.

வேலுப்பிள்ளை, ஆ., (டாக்டர்) **தமிழர் சமய வரலாறு**
தமிழ் புத்தகாலயம், சென்னை
1984.

**கலைக்களஞ்சியம்** தொகுதி-7
தமிழ் வளர்ச்சிக்கழக வெளியீடு
பல்கலைக்கழகக் கட்டிடம்
சென்னை
முதற்பதிப்பு, 1960.

**சித்தாந்த சாத்திரம் பதிவேடுகள்**
சைவ சித்தாந்தப் பெருமன்ற வெளியீடு
சென்னை - 14
மூன்றாம் பதிப்பு, 1914.

--- **எட்டுத்தொகை**
எஸ்.ராஜம்
மர்ரே வெளியீடு, 1957.

--- **பத்துப்பாட்டு**
எஸ்.ராஜம்
மர்ரே வெளியீடு, 1957.

--- **திருவாசகம்**
ஸ்ரீராமகிருஷ்ண தபோவனம்
திருப்பராய்த்துறை,
1992.

--- **தேவார திருப்பதிகங்கள்**
கங்கைவெளியீடு
மூன்றாம் பதிப்பு, 2001.

--- **தொல்காப்பியம்**
கழக வெளியீடு

--- **கம்பராமாயணம்**
கம்பன் கழகம்
நான்காம் பதிப்பு, 1984.

---
**ஸ்ரீதாயுமான சுவாமி பாடல்கள்**
ஸ்ரீராமகிருஷ்ண தபோவனம்
திருப்பராய்த்துறை
மூன்றாம் பதிப்பு, *1988.*

**இதழ்கள்**

ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சாரிய சுவாமிகள்,
**விகடன் வெளியீடு**
சென்னை
முதற்பதிப்பு, *1993.*

**கட்டுரை**

ஜீவபந்துயர்பால்,
**திருக்குறள் மூலமும் கட்டுரைகளும்**
கட்டுரை நயினார் கோவில்
ஜைன இளைஞர் மன்றம்
சென்னை - *17*

**பலவித்துவான்கள் இயற்றிய பதினான்கு பிரபந்தங்கள் தனிப்பாடல்**
திருநெல்வேலி ஜில்லாவிலுள்ள
வடகரையென்ற சொக்கம்பட்டி
பாளையப்பட்டு சரித்திரம்,
பாகம் 2, மதுரைத் தமிழ்ச்சங்கம்,
பவர் பிரஸ்,
மதுரை , *1916.*

**ஆங்கில நூல்கள்**

Nilakanta Sastri, K.A.,
**The Pandiyan Kingdom**
Swathi Publication
Madtrad, 1972.

Pate H.R.,
**Madras District Gazatters**
Tirunelveli, Vol.1,
Govt. Press, Madras
1917.

Pillay, K.K.,
**The Suchindrum Temple** ✓ Madurai Temple Complex - Jayachandra
Kalakshetra Publications,
Adyar, Madras
I Edition. 1953.

Purnalingam, M.S.,
**History of Tamil Literature**
The bibliotheca, Munnirpalam
Tirunelveli.

Ramachandra Rao, S.K., **The Indian Temples and its Meaning**
Bangalore
I edition, 1976.

Ramakrishna Gopal Bhandarkar **Vaisnavesim, Saivisim and Minor Religious systems**
Asian Educational Services
New Delhi, 1995.

Raman, K.V., **Uggiramkottai An Early Fortress Town of the Pandias**
JIH LII (1974).

Sambandam, P., **Siva Shrenies in India and Beyond Tamils**
Part II, I Edition
Rathnavilas Press

Subramanian, J.N., **South Indian Temples Inscriptions**
Madras
I edition, 1953.


**Mannual**


**The Tirunelveli District Presidency of Madras**
By At. Stuart, M.C.S.,
Acting District Judges, Coimbatore

K.N. Nambiyar **Census of India**
Volume IX, Part XID
1961.

Narayanamurthy, K.C. **Temples of Madras State**
Kannyakumari & Tirunelveli,
1968.

**Tirunelvelly District Manual**
By Rev. Caldwell
1881.

**பதிவேடுகள்**

1. சொத்தின் விவரப்பதிவேடு, அருள்மிகு சங்கரநாராயணசாமி திருக்கோயில், சங்கரநயினார் கோவில்,

2. திருக்கோயிலின் விசேடங்களின் நாட்குறிப்பு, (1980-81).

**தொகுப்பு நூல்கள்**

1. மதுரைத் தமிழ் அகராதி, இ.மா.கோ. பாலகிருஷ்ணக்கோன், மதுரை, 1956.

2. கலைக்களஞ்சியம், தொகுதி ஒன்பது, தமிழ் வளர்ச்சிக் கழகம், சென்னை.

**அழைப்பிதழ்கள்**

திருக்கோயில் வெளியீடுகளான சித்திரைப் பெருந்திருவிழா, ஆடித்தவசுத் திருவிழா, நவராத்திரி, அழைப்பிதழ், சங்கரன் கோவில்.

**மலர்கள்**

1. ஆடித்தவசு மலர், 1973 - 80.

2. ஆண்டுமலர் 39, மதுரைத் திரவியம் தாயுமானவர், இந்துக்கல்லூரி, திருநெல்வேலி, 1980.

3. திருவாரூர் குருபூசை விழா கழகத்தினர், அப்பர் சுவாமி குருபூசை விழா மலர், 1969.

**இதழ்கள்**

1. இதயம் பேசுகிறது, சென்னை 8.11.78 - 2.3.80.

2. செந்தமிழ்ச்செல்வி, கழகம், சிலம்பு, 10.

**செய்தித்தாள்**

1. தினமலர், நெல்லைப் பதிப்பு, 1981, (9.4.81).



சங்கர நயினார் கோயில் கோபுரமும் நாகசுனையும்



கோயிலைக் கட்டக் காரணமாயிருந்த
மணிக்கிரீவன்




சங்கர நயினார் கோயிலைக் கட்டிய
உக்கிர பாண்டியன்



சங்கர நாராயணர் சங்கரலிங்கராக அம்மனுக்குக்
கொடுக்கும் காட்சி



வன்மீகநாதரின் பின்புறத் தோற்றம்



கோமதியம்பிகை திருவுருவம்



தவசு கால அம்மனின் தவக்கோலம்



பாம்புப் புற்று



கோயில் தேர்



மறவர் மண்டகப்படி திருநாளில் அம்மனின்
தவக்கோலம்



யாதவர் மண்டகப்படியில் அம்மனின் தவம்



சவரத் தொழிலாளர் மண்டகப்படியில் அம்மனின்
தவக்காட்சி




36 கிராமப்புற மக்களின் மண்டகப்படி திருநாளில்

அம்மனின் தவம்

(பூம்பல்லக்கு)



மாவீரன் பூலித் தேவன் அறை

# பின்னிணைப்பு - 2

## 1. பட்டியல்

1. பெயர் : கருப்பசாமி

2. பால் : ஆண்

3. வயது : 45

4. சொந்த ஊர் : புளியங்குடி

5. மாவட்டம் : திருநெல்வேலி

6. மாநிலம் : தமிழ்நாடு

7. தொழில் : விவசாயம்

8. கல்வித்தகுதி : பதினொன்றாம் வகுப்பு

1. கோயில்

அ. பெயர் : சங்கரநயினார் திருக்கோயில்

ஆ. அமைந்துள்ள இடம் :

| கிராமம் | வட்டம் | மாவட்டம் | மாநிலம் |
|---|---|---|---|
| | ✔ | | |

2. அ. கட்டப்பட்ட ஆண்டு : கி.பி.1022ஆம் ஆண்டு

ஆ. பாடல் பெற்ற தலமா :

| ஆம் | இல்லை |
|---|---|
| | ✓ |

இ. கல்வெட்டுச் சான்று உண்டா :

| உண்டு | இல்லை |
|---|---|
| ✓ | |

3. தெய்வத்தின் பெயர் :

| மூலவர் | தேவி | பிற |
|---|---|---|
| சங்கர லிங்க சுவாமி ✓ | கோமதி யம்பிகை ✓ | குட்டித் தெய்வங் களும் உண்டு |

4. நிர்வாகம் :

| தனியார் | அறநிலைய பாதுகாப்புத் துறை | பிற |
|---|---|---|
| | ✓ | |

5. திருவிழா குறிப்பிட்ட காலத்தில் நடைபெறக் காரணம் விளக்கம் தரவும் :

அ. பொருளாதார நிலைமையே :

| ஆம் | இல்லை |
|---|---|
| ✓ | |

ஆ. சீதோஷ்ண நிலையே :

| ஆம் | இல்லை |
|---|---|
| | ✓ |

இ. மக்கள் மனதில் விழிப்புணர்ச்சியும் புத்துணர்ச்சியும் ஏற்படுத்த :

| ஆம் | இல்லை |
|---|---|
| ✓ | |

ஈ. மக்கள் நல்வழியில் பொழுதுபோக்க :

| ஆம் | இல்லை |
|---|---|
| ✓ | |

உ. கலைஞர்களை ஊக்குவிப்பதற்காக :

| ஆம் | இல்லை |
|---|---|
| ✓ | |

ஊ. பல ஊரிலுள்ள மக்களும் ஒன்று சேர :

| ஆம் | இல்லை |
| --- | --- |
| ✓ | |

எ. மக்கள் மனதில் பக்தியைப் பரப்ப :

| ஆம் | இல்லை |
| --- | --- |
| ✓ | |

6. திருவிழாக் காலங்களில் மக்களின் பொது நலத்தொண்டு

அ. ஏழை எளியவருக்கு உணவிடுதல் :

| ஆம் | இல்லை |
| --- | --- |
| ✓ | |

ஆ. தண்ணீர்ப்பந்தல்கள் போடுவதுண்டா :

| ஆம் | இல்லை |
| --- | --- |
| ✓ | |

இ. பயன்கருதிச் செய்கின்ற தொண்டா :

| ஆம் | இல்லை |
| --- | --- |
| ✓ | |

7. விழாக்காலங்களில் சமுதாயத் செயல் விளைவுகள்

அ. வியாபார அபிவிருத்தி :

| ஆம் | இல்லை |
| --- | --- |
| ✓ | |

ஆ. தம் உற்றார் உறவினர்களை நெடுநாளைக்கு பின் சந்திக்கின்ற வாய்ப்பு :

| ஆம் | இல்லை |
| --- | --- |
| ✓ | |

இ. அயல் ஊர்களிலிருந்து வருகின்ற மக்களின் பழக்க வழக்கங்களை அறிந்து கொள்ளுதலும் அதைப் பிரதிபலித்தலும் :

| ஆம் | இல்லை |
| --- | --- |
| ✓ | |

8. சேமிப்பு மனப்பான்மை வளர்கிறதா :

| ஆம் | இல்லை |
|---|---|
| | ✓ |

9. விருந்தோம்பும் பண்பின் நலம் காக்கப்படுகின்றதா? :

| ஆம் | இல்லை |
|---|---|
| ✓ | |

10. மக்களின் மனச்சோர்வை அகற்றி இனிய மனவளத்தை வளர்க்கிறதா?:

| ஆம் | இல்லை |
|---|---|
| ✓ | |

11. மனம் விட்டுப் பழகுகின்ற வாய்ப்பு ஏற்படுவதுண்டா? :

| உண்டு | இல்லை |
|---|---|
| ✓ | |

12. சமுதாய ஒற்றுமைக்கு வழிவகுக்கின்றதா? :

| ஆம் | இல்லை |
|---|---|
| ✓ | |

13. சமுதாயத்திற்கு நல் எண்ணத்தை வளர்க்கின்றதா? :

| ஆம் | இல்லை |
|---|---|
| ✓ | |

14. தெய்வ பக்தி வளர்கின்றதா? :

| ஆம் | இல்லை |
|---|---|
| ✓ | |

**தகவலாளியிடமிருந்து திரட்டிய செய்தியில் ஆய்வாளரின் கருத்துக் கணிப்பு**

மக்கள் கோயிலுக்கு வருவதினால் விழிப்புணர்ச்சியும், பக்தி நெறியும் ஏற்படுகின்றது. பொருளாதார நிலை மேம்படுகின்றது. மக்கள் மனம் விட்டுப் பழகுகின்ற வாய்ப்பும் ஏற்படுகின்றது என்று அறிய முடிகின்றது.

## 2. வினா நிரல்

அன்புடையீர்,

கேள்விகளுக்குச் சரியான நேரடியான பதிலைத் தங்களிடமிருந்து எதிர்பார்க்கின்றேன்.

குறிப்பு :
1. தேவையான இடங்களை நிரப்பவும்.
2. ஒன்றிற்கும் மேற்பட்ட செய்திகள் இருப்பின் வரிசை எண்கள் இட்டு விளக்கம் தரவும்.
3. இயன்றவரை பொருத்தமான விடையளிக்க முயற்சி செய்யவும்.

| | | | |
|---|---|---|---|
| 1. | பெயர் | : | சுப்பிரமணியப்பட்டர் |
| 2. | பால் | : | ஆண் |
| 3. | வயது | : | 60 |
| 4. | சொந்த ஊர் | : | சங்கரநயினார் கோவில் |
| 5. | மாவட்டம் | : | திருநெல்வேலி |
| 6. | மாநிலம் | : | தமிழ்நாடு |
| 7. | தொழில் | : | பட்டர் (கோயில் குருக்கள்) |
| 8. | கல்வித்தகுதி | : | எட்டாவது வகுப்பு |

வினா 1 : சித்திரைத் திருவிழா யாருக்காக நடத்தப்பெறும் திருவிழா?

பதில் : 1. கோயிலைக் கட்டிய உக்கிரபாண்டிய அரசருக்கு

2. சங்கரலிங்கருக்கு

வினா 2 : சித்திரைத் திருவிழா எத்தனை நாட்கள் நடைபெறும் ?

பதில் : 45 நாட்கள்

வினா 3 : அப்படியாயின் எம்மாதத்திலிருந்து தொடங்கும்?

பதில் : பங்குனி உத்திரத்தன்று ஆரம்பமாகும்.

வினா 4 : சித்திரைத் திருவிழா முதன் முதலில் யாரால் நடத்தப்பட்டது? தற்பொழுது யாரால் நடத்தப்பட்டு வருகின்றது?

பதில் : முதன் முதலில் கோயிலாரால் நடத்தப்பட்டது. பின் கட்டளைகாரர்களால் நடத்தப்பட்டது. இரண்டாண்டு காலமாக சங்கரன் கோயில் வணிகர்களின் சங்கம் ஏற்று நடத்தி வருகின்றது.

வினா 5 : வியாபார சங்கங்கள் நடத்துவதின் நோக்கம் என்ன?

பதில் : 1. பொருளாதாரச் செழிப்பினால்

2. மக்களின் நன்மதிப்பைப் பெற

3. வியாபாரம் மேலும் பெருக வேண்டும் என்பதற்காக

வினா 6 : வியாபார சங்கங்களுக்குக் கோயில் நிர்வாகத்தினர் சித்திரைத் திருவிழாவில் ஏதேனும் உதவி செய்வதுண்டா?

பதில் : உண்டு.

கலை நிகழ்ச்சிகள் நடைபெறும் பொழுதும் திருவிழா நடைபெறும் பொழுதும் சங்கங்களுக்கு வேண்டிய உதவிகளைச் செய்வார்கள்.

வினா 7 : சித்திரைத் திருவிழாவிற்கு ஆடித்தவசு போல கூட்டம் வருவதுண்டா?

பதில் : இல்லை.

வினா 8 : சித்திரை திருவிழாவிற்கு ஆடித்தவசு போல கூட்டம் வருவதில்லை ஏன்?

பதில் : சித்திரை மாதத்தில் பெரும்பாலான ஊர்களில் தேர்த்திருவிழா நடைபெறும். அதனால் மக்கள் கூட்டம் அதிகம் வருவதில்லை.

வினா 9: சித்திரைத் திருவிழாவின் சிறப்பு என்ன?

பதில் : இத்திருவிழாவே திருவிழாக்களில் பெரிய திருவிழா. இது 45 நாட்கள் நடைபெறும்.

## தகவலாளியிடம் ஆய்வாளர் அறிந்த செய்திகளின் கணிப்பு

சித்திரைத் திருவிழா கோயிலைக் கட்டிய உக்கிரபாண்டியருக்கு நடத்தப்படும் விழாவாக அமைகின்றது எனலாம். மேலும் சங்கரன் கோவிலுள்ள அனைத்துச் சமுதாயத்தினரும் சித்திரைத் திருவிழாவில் தங்கள் கடமைகளை ஆற்ற வாய்ப்பு உள்ளது. முதலில் சித்திரைத் திருவிழா கட்டளைதாரர்களால் நடத்தப்பட்டு, தற்போது வியாபாரி சங்கங்களினால் நடத்தப்பட்டு வருகின்றது என்பதையும் அறிய முடிகிறது.

# 3. பேட்டி

| | | |
|---|---|---|
| பேட்டி தந்தவர் | : | ராம் பட்டர் அவர்கள் |
| பேட்டி கண்டவர் | : | ஆய்வாளர் |
| நாள் | : | 30.5.1996 |
| காலம் | : | காலை 11 மணியிலிருந்து மாலை 4 மணி வரை |
| இடம் | : | சங்கரன் கோவில் |
| பொருள் | : | சங்கரநயினார் கோவில் ஆடித்தவசு திருவிழா பற்றி சில செய்திகள் |

**முகப்புச் செய்திகள்**

தவசு திருவிழாவின் வரலாற்றைக் கூறினார். கோமதியம்மையே சிவபெருமானிடம் சிவன், விஷ்ணு பேதமில்லாமல், தங்களது திருக்கோலத்தைக் காட்ட வேண்டும் என்றும் கூறினாள். அதன்படி சிவன், அரனும் அரியும் இணைந்திருக்கும் திருக்கோலத்தைக் காட்டுகின்றார். தவசு அன்று சங்கரநயினார் கோவில் முழுவதும் கூட்டம் கண்கொள்ளாக் காட்சியாக இருக்கும் என்று கூறினார். மக்கள் காணிக்கை செலுத்துவதின் நோக்கத்தையும் கூறினார். தவசின் முக்கியத்துவத்தை விளக்கினார்.

**1. தவசு திருவிழாவைப் பற்றி பொதுவாக தாங்கள் கருதுவது என்ன?**

தவசு திருவிழா மக்களுக்கு ஒருவித மகிழ்ச்சியையும், தெய்வ நம்பிக்கையையும் அளிக்கின்றது. உறவினர்கள் அனைவரையும் பார்க்கும் நாள் ஆகும். கிராமத்து மக்களின் வேலையிலிருந்து விடுவித்து அவர்களை மகிழ்விக்கும் நாள் தவசு திருநாளேயாகும். அந்நாளில் அவர்கள் பெறும் இன்பம் அளவிடற்கரியது.

**2. தவசு காலங்களில் மக்களின் மனநிலையைப் பற்றி தாங்கள் என்ன நினைக்கின்றீர்கள்?**

மக்கள் தங்களின் பக்குவநிலைக்கேற்ப சாமியைத் தரிசிப்பார்கள். இளைஞர்கள் சிலர் வேடிக்கை பார்ப்பதற்கென்றே வருவார்கள். பொதுவாகக் கிராம மக்களை எடுத்துக் கொண்டால், பல்வேறு உணவுப் பண்டங்களை உண்பதற்காகவும் வருவார்கள்.

**3. தவசு திருநாளின் போது மக்களுக்கு அரசு செய்து வரும் பணிபற்றி தாங்கள் அறிந்தது என்ன?**

மக்களின் வசதிக்கேற்ப பேருந்து வண்டிகளை அதிக அளவில் விட ஏற்பாடு செய்து வருகின்றது. போலீஸ் பாதுகாப்பு தகுந்த முறையில் அளிக்க ஏற்பாடு செய்கின்றனர். குடிநீர் வசதியும் அளிக்கப்படுகின்றது. பொதுவாகக் கூறினால் அரசின் கட்டளைப்படி எல்லா இலாகாக்களும் செவ்வனே தங்களுடைய பணியைச் செய்து வருகின்றன.

**4. தவசு காலங்களில் மக்களுக்கு அளிக்கும் சுகாதார முறைபற்றி நீங்கள் கருதுவது என்ன ?**

வருடந்தோறும் மக்கள் கூட்டம் பெருகி வருகின்ற காரணத்தினால் தடுப்பூசி போடப்பட்டு வருகின்றது. மக்களுக்கு தடுப்பூசி போடுவது ஒரு விதத்தில் நன்மையே என்று கூறலாம்.

**5. விழாவின் போது பொதுமக்களுக்கு ஏற்றவகையில் கோயிலின் நிர்வாகம் ஏதேனும் செய்து வருகின்றதா? அதைப்பற்றி நீங்கள் கருதுவது என்ன?**

எனக்குத் தெரிந்த வரையில் பயணிகளுக்குத் தங்கும் விடுதிகள் குறைவாக உள்ளது. கோயிலின் நிர்வாகத்தின் கீழ் பதினான்கு அறைகள் உண்டு.

அவ்வறைகளும் பல துறைகளில் உள்ள அதிகாரிகளுக்கு அளிக்கப்பட்டு விடுவதால் தங்கும் வசதி குறைவாகவே உள்ளது. கோயிலின் நிர்வாகம் பொது மக்களுக்குத் தங்கும் இட வசதி அளித்தால் நல்லது.

**6. உங்கள் ஞாபகார்த்தமாக சங்கரநயினார் கோயிலுக்கு ஏதேனும் செய்துள்ளீர்களா?**

இல்லை. அம்பாளுக்கும், சங்கரலிங்கப் பெருமானுக்கும் பூசை செய்கின்றேனே அது போதாதா. என் வாழ்க்கையில் அதிர்ஷ்டம் ஏற்பட்டால் கட்டாயம் செய்வேன்.

**7. சங்கர நயினார் கோயில் புற்றுமண் பற்றி தாங்கள் அறிந்தது என்ன?**

தவசுக்கு வருகின்ற மக்கள் புற்றுமண்ணை வாங்காமல் செல்ல மாட்டார்கள். மக்களின் வாழ்க்கையில் நோய் நீக்கவும், கெட்ட கனவுகள் ஆகியவற்றைப் போக்கவும் அருமருந்தாகப் புற்றுமண் பயன்படுகின்றது. கோமதியம்மன் பிள்ளைத் தமிழில் புற்றுமண் பற்றி கூறப்பட்டுள்ளது.

**8. நீங்கள் ஆடித்தவசுத் திருவிழாவைப் பற்றி அறிந்தது என்ன?**

இத்திருவிழா மக்களுக்குத் தங்களுடைய பொருட்களைச் செலுத்த உகந்த நாளாகும். பெரும்பாலான கிராமத்து மக்கள் ‘‘அன்னை மட்டும் தவம் இருந்து வரத்தைப் பெற்றாள். நாமும் நடந்து சென்று அவள் அருளைப் பெற்றால் என்ன? என்ற நம்பிக்கையுடன் நடந்து வருகின்றனர். காணிக்கையாக பெரிய வியாபாரிகள், தங்களுடைய வியாபாரப் பொருட்களை குறையிடுவதன் மூலம் பொதுமக்கள் நன்மையடைகினறனர் என்பது என் கருத்து.

9. **சங்கரன் கோவில் ஆடித்தவசு திருவிழா மட்டும் திருநெல்வேலி மாவட்டத்தில் சிறப்பு வாய்ந்ததாக உள்ளது? ஏன் தவசு விழா மட்டும் முக்கியமாக கருதப்படுகிறது?**

சமய ஒருமைப்பாட்டுச் சின்னமாக இவ்விழா கருதப்படுகின்றது. சைவ, வைணவர்கள் பேதமில்லாமல் இவ்விழா கருதப்படுவதால் எல்லா மக்களும் கலந்து கொள்ள வாய்ப்பளிக்கின்றது.

**தகவலாளரிடம் திரட்டிய செய்தியில் ஆய்வாளரின் கணிப்பு**

சைவ வைணவ ஒற்றுமையை உணர்த்தி சமய பேதங்களை உடைத்தெறியும் சங்கரநயினார் கோயில், சாதி வேற்றுமைகளையும் கடந்து நிற்றலையும், மானுடர் அனைவரும் இறைவன் முன் சமமானவரே என்ற கோட்பாட்டை மக்களிடையே ஏற்படுத்தி ஏற்ற தாழ்வுகளை வேரறுக்க செய்வதையும் மேற்காட்டிய பட்டியலால் உணரலாம். 'சிறப்பொவ்வா செய்தொழில் வேற்றுமையான்' எனும் வள்ளுவத்தின்படி செய்யும் தொழிலாலோ பிறவியாலோ எவரிடையேயும் ஏற்றத்தாழ்வு எண்ணங்கள் உருவாகா வண்ணம் இத்தகைய சமய நிகழ்வுகள் உறுதுணை புரியும் என்பதில் ஐயமில்லை.

# பின்னிணைப்பு - 3

## பாண்டியர் வரலாறு

பாண்டியர் வரலாற்றை ஒரு சங்கிலித் தொடர் போல, எண்ணெய் ஒழுக்கைப் போல இடையீடில்லாமல் தொடர்ந்து எழுதுவது மிகவும் கடினம். அவர்களது வரலாற்றில் ஏற்ற இறக்கங்கள் சற்றுக் கூடுதலாகவே இருக்கின்றன. அதில் பேரரசு எழுச்சியின் உச்சநிலையும், வீழ்ச்சியின் தாழ்நிலையும் மாறி மாறி அமைகின்றன.

பாண்டியரது வரலாற்றோட்டத்தில் பல தடைகள் உள்ளன. பாண்டிய நாட்டை ஒருவன், சில போது இருவர், சில போது ஐவர் வரை சமகாலத்தவராக ஒரே நேரத்தில் அரசாண்டனர். மதுரை, கொற்கை, திருநெல்வேலி, தென்காசி, கரிவலம் வந்தநல்லூர் முதலிய இடங்கள் அவர்களது முக்கியத் தலைநகரங்களாகத் திகழ்ந்தன. ஐந்து இடங்களில் ஐந்து பாண்டியர் அரசாண்டதால் 'பஞ்சவன்' என்ற பெயர் பாண்டியர்க்குரிய பெயர்களில் ஒன்றாயிற்று[65]. பாண்டியர்களில் 1. பாண்டியன், 2. மாறன், 3. செழியன் முதலிய தனித்தனி மரபினர்களும் இருந்திருக்கலாம் என்பதை அந்தந்த மரபினர்க்குரிய பெயர்களே உணர்த்துகின்றன.[66] ஐவர்க்கும் தலைவன், அவர்களுள் ஒருவனான மதுரைப்பாண்டியனேயாவன்.

மேலும், ஒரே பெயரைச் சூடிய பாண்டியர் சிலர்; உறவு முறைகளை உய்த்துணரவும் முடியாத பாண்டியர் சிலர்; சிலர் ஆட்சி புரிந்த காலத்தைக் கணித்துக் கூற முடியாது. இன்ன பிற சிக்கல்கள் பாண்டியர் வரலாற்றில் அதிகமாக இருக்கின்றன. இருப்பினும், அவர்களது வரலாற்றை ஆய்வுக்காக ஆறு பிரிவுகளாகப் பிரிக்கலாம்.

*1.* ***சங்க காலப் பாண்டியர் :*** இவர்கள் ஏறக்குறைய கி.பி.300 வரை அரசாண்ட பாண்டியர்.

*2.* ***களப்பிரர் காலப் பாண்டியர் (கி.பி.300-600) :*** இவர்கள் களப்பிரர் எழுச்சிக் காலத்தில் அரசாண்ட பாண்டியர்.

**3. பல்லவர் காலப் பாண்டியர் (கி.பி.600-900) :** பல்லவர்கள் தொண்டை நாட்டை ஆண்டபோது, அவர்களுக்குச் சில காலம் அடங்கியும் சில போது அடங்காமலும் அரசாண்ட பாண்டியர்கள் இவர்கள்.

**4. இடைக்காலப் பாண்டியர் (கி.பி.900-1190) :** பொற்காலம் கண்ட பிற்காலச் சோழர்களின் காலத்தில் வாழ்ந்த பாண்டியர்.

**5. பாண்டியப் பேரரசர் காலம் (கி.பி. 1190-1310) :** இக்கால எல்லை பாண்டியரது இரண்டாம் பேரரசு காலமாகும். பாண்டியர் எழுச்சியுற்றுச் சிறப்பாக ஆண்ட காலம் இது.

**6. பிற்காலப் பாண்டியர் :** கி.பி.1310ஆம் ஆண்டுக்குப் பிறகு அரசாண்ட பாண்டியர். எழுச்சியுடன் ஆண்ட பாண்டியப் பேரரசு மெல்ல மறைந்தது.

### 1. சங்க காலப் பாண்டியர்கள்

***கி.பி.300 வரை***

சங்கப் பாடல்களை மட்டும் ஆதாரங்களாகக் கொண்டு பாண்டியர் வரலாற்றை மரபுவழி நிரலே எழுதுவது மிக அருமை. அப்பாடல்களாலும், இறையனார் களவியலுரை முதலிய வேறு சில சான்றுகளின் மூலமாகவும் பாண்டியர் சிலரைப் பற்றி நன்கறிய முடியும்.

பாண்டியர், சங்கங்களை நிறுவிப் புரந்தனர்; செந்தமிழ்ப் பாடல்களைப் புனைந்தனர்; பகை நாட்டுப் படைகளைக் கடந்து, செரு வென்றனர்; நிலையான பேரறம் தம்மால் எதிர்பாராமல் நெகிழ்ந்தபோது, ஊழ்வினைப் பயனை நொந்து தம்மைத் தாமே தண்டித்துக் கொண்டனர். இவ்வாறு பெருமாட்சி கொண்ட பாண்டியர் சிலரேயாவர்.

### 1. வடிவம்பல நின்ற பாண்டியன்

இப்பாண்டியன் காலத்தால் மிக முற்பட்டவன். இவனை மாகீர்த்தி என்றும், நிலந்தரு திருவிற்பாண்டியன் என்றும் வழங்குவர். இவனது அவையில் தொல்காப்பியம் அரங்கேற்றப்பட்டது என்பதை நச்சினார்க்கினியர் உரையால் அறியலாம்.[67] 'நெடியோன்' என்ற பெயரும் இவனுக்கிருந்தது.[68] பஃறுளி ஆற்றை வெட்டுவித்துக் கடல் தெய்வத்திற்கு விழாவெடுத்தவனும் இவனே.[69] இவன் தலைச் சங்க காலத்தின் இறுதியில் வாழ்ந்தவன்.

### 2. பல்யாகசாலை முதுகுடுமிப் பெருவழுதி

இவன் பல வேள்விகளைச் செய்தவன் என்பதை இவனது பெயரே உணர்த்துகின்றது.

### 3. மதிவாணன்

இவன் நாடகத் தமிழ் நூல் ஒன்றை இயற்றினான். இந்நூல் மறைந்தது.

### 4. பொற்கைப் பாண்டியன்

ஊழ்வினையால் தவறு நேர, அறம் நெகிழ, அதற்குக் காரணமான தன் கையைத் தானே வெட்டிக் கொண்ட மாமன்னன். தலையானங்கானத்துச் செருவென்ற பாண்டியன் நெடுஞ்செழியன்; இவன் மாங்குடி மருதனார் இயற்றிய மதுரைக் காஞ்சியின் பாட்டுடைத் தலைவன்.

மேலும் 6. அறிவுடை நம்பி 7. ஒல்லையூர் தந்த பூதப்பாண்டியன், 8. ஆரியப்படை கடந்த நெடுஞ்செழியன் முதலியோர் குறிக்கத்தக்க பாண்டியர் ஆவர். இவர்கள் பல துறைகளில் வல்லவர்கள். இவர்களுக்குப் பின்னர்த் தோன்றிய பாண்டியர்களுக்கு இவர்கள் முன்னோடிகளாகவும், வழிகாட்டிகளாகவும் திகழ்ந்தனர். பக்தித் துறையில் இவர்கள் ஆற்றிய திருப்பணிகள் சிந்திக்கத்தக்கன.

### 2. களப்பிரர் காலப் பாண்டியன் (கி.பி.300-600)

களப்பிரர் என்ற இனத்தவர் கி.பி. மூன்றாம் நூற்றாண்டின் முற்பகுதியில் தமிழகத்தில் நுழைந்தனர். வலிகுன்றிய பாண்டியன் ஒருவன் அரசாண்ட போது அவனை வென்று பாண்டிய நாட்டைக் கைப்பற்றி அரசாளத் தொடங்கினர். அப்போது வாழ்ந்த பாண்டியர்களைப் பற்றிய வரலாற்றுக் குறிப்புகள் எவையும் புலப்படவில்லை.

### கடுங்கோன் (கி.பி.575-600)

கி.பி.575ஆம் ஆண்டிலோ அல்லது அதற்குச் சற்று முன்போ பாண்டியர் வழித்தோன்றலான கடுங்கோன் என்பவன் களப்பிரரைவென்று, பாண்டிய நாட்டை மீட்டு ஆளத் தொடங்கினான். இவற்றை வேள்விக்குடிச் செப்பேட்டால் அறிய முடிகின்றது. கடுங்கோனின் வழியினர் பாண்டிய நாட்டைத் தொடர்ந்து அரசாளத் தொடங்கினர்.

### 3. பல்லவர் காலப் பாண்டியர் (கி.பி.600-900)

களப்பிரர்களுக்குப் பிறகு பல்லவர் தொண்டை நாடு முதலான இடங்களில் ஏற்றமிகு சிறப்புகளுடன் அரசாளத் தொடங்கினர். இதற்கு இணையாகப் பாண்டிய அரசும் பன்மையுடன் இயங்கியது.

கடுங்கோனைத் தொடர்ந்து அவன் மகன் மாறவர்மன் அவனி சூளாமணியும் (கி.பி.600-625) அடுத்து, இவன் மகன் செழியன் சேந்தனும் (கி.பி.625-640) அரசாண்டனர்.

### மாறவர்மன் அரிகேசரி

அடுத்து அரசு கட்டிலேறியவன் மாறவர்மன் அரிகேசரி. (கி.பி.640-670) இவன் செழியன் சேந்தனின் மகன். இவனைச் சுந்தர பாண்டியன் என்றும், கூன்பாண்டியன் என்றும், நின்ற சீர் நெடுமாறன் என்றும் வழங்குவர். இவன் சமணனாக இருந்து

திருஞான சம்பந்த சுவாமிகளால் சைவனாக மாறியவன். இவனும், இவன் துணைவியார் மங்கையர்க்கரசியாரும், அமைச்சயர் குலச்சிறையாரும் செய்த சிவநெறித் திருப் பணிகள் முதலியவற்றைப் பெரிய புராணத்தால் அறியலாம்.

அரிகேசரி, பராங்குசன் என்ற பட்டப் பெயர்கள் நெடுமாறனுக்குரியன. இவன் காலத்தில் பலரோடு பல போர்கள் நிகழ்ந்தன. சாளுக்கியன் விக்கிரமாதித்தனை நெல்வேலிப் போரில் வென்றான். மேலும் சேரரும், சோழரும் தென்பாண்டி நாட்டுக் கடலோரப் பகுதிகளில் வாழ்ந்த பரதவர் என்ற பரதரும் இவனுக்கு அடங்கியே வாழ்ந்ததால் இவன் மன்னர் மன்னனாய்த் திகழ்ந்தான். சுருங்கக் கூறினால், பாண்டிய நாட்டின் எல்லைகளைக் கடந்து சென்று இவனது பேரரசு உயர்நிலையில் இருந்தது.

நெடுமாறன் மாமன்னன் என்பதால் இரண்யகர்ப்பம், துலாபாரம் என்ற மகாதானங்களைப் பல முறை செய்தான் என்று வேள்விக்குடிச் சாசனம் கூறுகிறது.

வைகைக் கல்வெட்டின்படி இவன் 50 ஆண்டுகளுக்கும் மேலாக அரசாண்டவன் என்பது தெரிகின்றது. எனவே இவன் காலத்தைக் கி.பி.642-700 என்று டீ.கவி. இராமன் வரையறுக்கின்றார்.[70]

### 4. இடைக்காலப் பாண்டியர் (கி.பி.900-1190)

#### *மூன்றாம் இராசசிம்மன் (கி.பி.900-919)*

சடையவர்மன் பராந்தக பாண்டியனுக்குப்பின் அவன் மகன் மூன்றாம் இராச சிம்ம பாண்டியன் கி.பி.900 இல் பட்டம் பெற்றான். இப்பாண்டியனைப் பராந்தக சோழன் வெள்ளூர்ப் போரில் தோற்கடித்தான்.

#### *சோழன் தலை கொண்ட கோ வீரபாண்டியன் (கி.பி.946 - 966)*

இவன் மூன்றாம் இராசசிம்ம பாண்டியனின் மகன். இராசராசனின் சமகாலத்தவன். ஆட்சியின் தொடக்கத்தில் இவன் சோழனுக்கு அடங்கி வாழ்ந்தான்.

இராஷ்டிர கூட மன்னன் மூன்றாம் கிருஷ்ணதேவன் வடக்கில் சோழனைத் தாக்கினான். தாக்குதலால் சோழன் நலிந்திருந்த போது வீரபாண்டியன் சோழனுடன் போரிட்டுப் பாண்டிய நாட்டை மீட்டுத் தானே முடிமன்னனாக அரசாளத் தொடங்கினான். சோழனுக்குத் திறை செலுத்துவதில்லை.

வீரபாண்டியன் தன் ஆட்சியின் ஆறாம் ஆண்டு முதல் ‘‘சோழன் தலை கொண்ட கோ வீரபாண்டியன்’’ என்று தன்னைத் தானே குறித்துக் கொண்டான். இவன் சோழ குலத்து மன்னன் ஒருவனைக் கொன்றிருக்க வேண்டும்.

சுந்தர சோழனின் முதல் மகனும், முதல் இராசராச சோழனின் தமையனுமான ஆதித்த கரிகாலன் வீரபாண்டியனைக் கொன்று ‘‘வீரபாண்டியன் தலை கொண்ட கோப்பரகேசரி வர்மன்’’ என்று தான் குறித்துக் கொண்டான். எனவே, பாண்டிய நாடு மீண்டும் சோழராட்சிக்கு மாறியது; பழிக்குப் பழியும் தீர்ந்தது.

வீரபாண்டியனுக்குப் பிறகு கி.பி.13ஆம் நூற்றாண்டின் தொடக்கம் வரையில் பாண்டியர் மிகக் குன்றிச் சோழர்களுக்குத் திறை செலுத்தும் சிற்றரசர்களாகவே இருந்தனர். இவர்களது கல்வெட்டுகள் பாண்டிய நாட்டில் எங்கும் கிடைக்கவில்லை.

### *சோழபாண்டியர் (கி.பி.1018–1070)*

பாண்டிய நாடு முழுவதும் சோழராட்சிக்கு உட்பட்டிருந்த போது, வலியிழந்த பாண்டியர் வாளா இருக்கவில்லை. வாய்ப்புக் கிடைக்கின்ற போதெல்லாம் சோழரை எதிர்த்து வந்தனர். இதைத் தடுக்கச் சோழர் முனைந்தனர்.

முதலாம் இராசராசனின் (கி.பி.985-1014) மகன் முதலாம் இராசேந்திரன் (கி.பி.1012-44) தனது ஆட்சியின் தொடக்கத்தில், தன் மகன்களில் ஒருவனைச் சோழ அரசப் பிரதிநிதியாக மதுரைக்கு அனுப்பிப் பாண்டிய நாட்டை இராசராச மண்டலத்தை ஆளுமாறு பணித்தான். இவ்வாறு பாண்டிய நாட்டை அரசாண்ட சோழ அரசனின் பிரதிநிதியே ‘‘சோழபாண்டியன்’’ ஆவன்.

முதல் இராசேந்திர சோழன் மகன் (1) சுந்தர சோழ பாண்டியன், (2) விக்கிரம சோழ பாண்டியன் (3) பராக்கிரம சோழ பாண்டியன் ஆகியோர் ‘‘சோழ பாண்டியன்’’ என்ற பெயரோடு மதுரையிலிருந்து ஆட்சி புரிந்தார்கள். இவர்களது கல்வெட்டுகள் பாண்டிய நாட்டிலும், சேர நாட்டிலும் பரவலாகக் கிடைக்கின்றன. எனவே, சோழபாண்டியர் பாண்டிய நாட்டையும், சேர நாட்டையும் ஒருங்கே அரசாண்டனர் என்பது தெளிவாகின்றது. அவ்விரு நாடுகளை ஆண்ட சோழ பாண்டியரது ஆட்சி கி.பி.1018 முதல் 1070 வரை நிலைத்திருந்தது. இந்த அரசு முறை முதற் குலோத்துங்கன் காலம் முதல் கைவிடப்பட்டது.

பிற்கால சோழ பாண்டியர் ஆட்சிக் காலத்தின் தொடக்கத்தில் சங்கரன் கோயில் தோன்றியது.

# பின்னிணைப்பு - 4

## தெப்பத் திருவிழாவில் காணிக்கை செலுத்திய அடியவர்களின் விவரம்

ஆய்வாளர், 1997ஆம் ஆண்டு தை மாதம் தெப்பத் திருவிழாவிற்கு வந்திருந்த அடியவர்களிடம் கேட்டறிந்த செய்தியாகும்.

| | பெயர் | சாதி | ஊர் | வயது | காணிக்கை |
|---|---|---|---|---|---|
| 1. | சண்முகசுந்தரம் | முதலியார் | சங்கரன் கோவில் | 50 | மாவிளக்கு எடுத்தல் |
| 2. | ஆவுடையம்மாள் | மூப்பனார் | திருநெல்வேலி | 35 | மாவிளக்கு எடுத்தல் |
| 3. | வேலம்மாள் | மறவர் | வயலி | 48 | உருவாரங்கள் போடுதல் |
| 4. | அங்கம்மாள் | மறவர் | வயலி | 60 | மாவிளக்கு எடுத்தல் |
| 5. | லலிதா தேவி | மறவர் | திருநெல்வேலி | 30 | உருவாரங்கள் போடுதல் |
| 6. | மாரியம்மாள் | பண்டாரம் | சங்கரன்கோவில் | 70 | மாவிளக்கு எடுத்தல் |
| 7. | சண்முகத்தாய் | பள்ளர் | சங்கரன்கோவில் | 40 | உருவாரங்கள் போடுதல் |
| 8. | கோமதி | பள்ளர் | சங்கரன்கோவில் | 41 | மாவிளக்கு எடுத்தல் |
| 9. | கோமதியம்மாள் | மறவர் | கரிவலம்வந்த நல்லூர் | 56 | மாவிளக்கு எடுத்தல் |
| 10. | கோமதிநாயகம் | பிள்ளை | ராஜவல்லிபுரம் | 55 | மாவிளக்கு எடுத்தல் |
| 11. | பிரமநாயகம் | பிள்ளை | ராஜவல்லிபுரம் | 32 | உருவாரங்கள் போடுதல் |
| 12. | வெங்கடாசலம் | பிள்ளை | ராஜவல்லிபுரம் | 31 | உருவாரங்கள் செலுத்துதல் |
| 13. | கிருஷ்ண பாண்டியன் | மறவர் | நெல் கட்டும் செவல் | 50 | மாவிளக்கு எடுத்தல் |

| | | | | | |
|---|---|---|---|---|---|
| | | | | | காணிக்கைப் போடுதல் |
| 14. | வாழவந்தாள் | பள்ளர் | செந்தட்டியா புரம் | 48 | மாவிளக்கு எடுத்தல் |
| 15. | காளியம்மாள் | பள்ளர் | சங்கரன் கோவில் | 49 | மாவிளக்கு எடுத்தல் |
| 16. | உலகம்மாள் | கோனார் | சுப்புலாபுரம் | 60 | உருவாரங்கள் போடுதல் |
| 17. | ஆவுடையம்மாள் | முதலியார் | சுப்புலாபுரம் | 42 | மாவிளக்கு எடுத்தல் காணிக்கை செலுத்துதல் |
| 18. | மூக்காயி | பள்ளர் | வீரியிருப்பு | 49 | உருவாரங்கள் செலுத்துதல் |
| 19. | பிச்சாண்டி | வாணியர் | சங்கரன் கோயில் | 50 | உருவாரங்கள் போடுதல் |
| 20. | சோமசுந்தரம் | பிள்ளை | சங்கரன்கோவில் | 26 | உருவாரங்கள் செலுத்துதல் |
| 21. | செல்வநாயகம் | மறவர் | கோதைநாச்சியா புரம் | 30 | உருவாரங்கள் செலுத்துதல் |
| 22. | செல்லத்துரை | மறவர் | கோதைநாச்சியா புரம் | 30 | உருவாரங்கள் செலுத்துதல் |
| 23. | கிருஷ்ணம்மாள் | மறவர் | கோதைநாச்சியா புரம் | 31 | உருவாரங்கள் செலுத்துதல் |
| 24. | மூக்கன் | மறவர் | கோதைநாச்சியா புரம் | 49 | மாவிளக்கு எடுத்தல் |
| 25. | பெருமாள் | பள்ளர் | கரிசல்குளம் | 32 | உருவாரங்கள் செலுத்துதல் |
| 26. | ராஜேந்திரன் | வாணியர் | சங்கரன்கோவில் | 28 | மாவிளக்கு எடுத்தல் |

| | | | | | |
|---|---|---|---|---|---|
| 27. | சாந்தி | முதலியார் | அம்பாசமுத்திரம் | 17 | மாவிளக்கு எடுத்தல் |
| 28. | ஜெயலட்சுமி | பிராமணர் | சங்கரன்கோவில் | 29 | உருவாரங்கள் செலுத்துதல் |
| 29. | வெங்கிடலக்ஷ்மி | பிராமணர் | சங்கரன்கோவில் | 28 | உருவாரங்கள் செலுத்துதல் |
| 30. | குருநாதன் | மறவர் | வயலி | 55 | மாவிளக்கு எடுத்தல் |
| 31. | தங்கம் | மறவர் | வயலி | 28 | மாவிளக்கு எடுத்தல் |
| 32. | கிருஷ்ணவேணி | பிராமணர் | திருநெல்வேலி | 29 | உருவாரங்கள் செலுத்துதல் |
| 33. | காந்திமதி | நாடார் | திருநெல்வேலி | 28 | உருவாரங்கள் செலுத்துதல் |
| 34. | பவானி | நாடார் | திருநெல்வேலி | 29 | மாவிளக்கு எடுத்தல் |
| 35. | சுமித்திரா | நாடார் | திருநெல்வேலி | 32 | மாவிளக்கு எடுத்தல் |
| 36. | நவநீதன் | நாடார் | கொக்கிரகுளம் | 45 | மாவிளக்கு எடுத்தல் |
| 37. | நந்தசாமி | நாயக்கர் | சங்கரன்கோவில் | 40 | உருவாரங்கள் செலுத்துதல் |
| 38. | குமாரசாமி | வாணியர் | பாளையங் கோட்டை | 38 | மாவிளக்கு எடுத்தல் |
| 39. | கோமான் சீனிவாசன் | ஐயங்கார் | திருநெல்வேலி | 45 | உருவாரங்கள் செலுத்துதல் |
| 40. | அனந்தலஷ்மி | பண்டாரம் | சங்கரன்கோவில் | 55 | உருவாரங்கள் செலுத்துதல் |

| | | | | | |
|---|---|---|---|---|---|
| 41. | வள்ளிநாயகம் | முதலியார் | சங்கரன்கோவில் | 49 | உருவாரங்கள் செலுத்துதல் |
| 42. | சுப்புலஷ்மி | முதலியார் | சங்கரன்கோவில் | 42 | மாவிளக்கு எடுத்தல் |
| 43. | ஆவுடைநாயகி | மூப்பனார் | திருநெல்வேலி | 44 | மாவிளக்கு எடுத்தல் |
| 44. | செந்தில்நாயகம் | மூப்பனார் | திருநெல்வேலி | 50 | உருவாரங்கள் செலுத்துதல் |
| 45. | மாரி | சக்கிலியர் | சங்கரன்கோவில் | 50 | உருவாரங்கள் போடுதல் |
| 46. | ராக்காயி | பள்ளர் | சங்கரன்கோவில் | 55 | உருவாரங்கள் போடுதல் |
| 47. | மாரியம்மாள் | சக்கிலியர் | கீழவயலி | 38 | உருவாரங்கள் போடுவுதல் |
| 48. | செக்கம்மாள் | சக்கலியர் | சங்கரன்கோவில் | 40 | உருவாரங்கள் போடுதல் |
| 49. | கோமதியம்மாள் | முதலியார் | சுப்புலாபுரம் | 32 | மாவிளக்கு எடுத்தல் |
| 50. | கணேசன் | முதலியார் | சங்கரன்கோவில் | 40 | உருவாரங்கள் போடுதல் |

**தகவலாளியிடம் திரட்டிய செய்தியில் ஆய்வாளரின் கணிப்பு**

தெப்பத் திருவிழா தைமாதக் கடைசி வெள்ளிக் கிழமையன்று நடைபெறுவதால் நாட்டுப்புற மக்கள் தங்கள் நேர்த்திக் கடனைச் செலுத்த வருகின்றனர். நோய் நீக்கம் பெறுவதற்காக மக்கள் மாவிளக்கு எடுப்பதும், உருவாரங்களை உண்டியலில் போடுவதும் அன்னதானம் வழங்குவதும் போன்ற செயல்களில் ஈடுபடுகின்றனர். கோமதியம்பிகைக்கு எடுக்கப்படும் விழாவாக தெப்பத் திருவிழாவினை ஆய்வாளர் கருத முடிகின்றது.

# பின்னிணைப்பு - 5
## வன்னிராசன் கதை

லாரன்ஸ் நாயகம் அவர்களால் வன்னிராசன் கதை எழுதப் பெற்றுள்ளது. வன்னிச்சி என்பவள் ஊத்துமலையைச் சேர்ந்தவள். அவளுடைய கணவன் பெயர் ராமசாமித் தேவர். வன்னிச்சிக்கு பல ஆண்டுகளாகக் குழந்தைப்பேறு இல்லை. குழந்தையில்லாத வருத்தம் வன்னிச்சிக்குப் பெருங்கவலையை உண்டாக்கியது. எத்தனையோ நபர்களுக்குத் தானதருமங்கள் செய்தாலும் குழந்தைப்பேறு கிட்டவில்லை. உடனே சங்கரநயினார் கோயிலுக்குச் சென்று நாற்பது நாள் தவம் செய்ய வேண்டும் என்று நினைக்கின்றாள். சங்கர நயினார் கோயிலுக்குச் சென்று தவம் செய்கின்றாள். சங்கர நாராயணரே அவள் வயிற்றில் குழந்தையாகப் பிறக்கின்றார் என்பதை விளக்க வந்ததே வன்னிராசன் கதையாகும். அக்கதையின் பாடல்கள் கீழே தரப்பட்டுள்ளன.

### வன்னிச்சி தவம் செய்யத் தீர்மானித்தல்

பார்த்தாளே வன்னிச்சியும் பாவினையாயேது செய்தாள்
என் கணவா மன்னவரே, என் வார்த்தைச் சொல்லக்கேளும்
சங்கர நயினார் கோயிலுக்குத் தவசு செய்யப் போரேன் ஐயா

### வன்னிச்சி புறப்பட்டுப் போதல்

தினை மாவும் எடுத்துக் கொண்டு சிலவுக்கு
    வேண்டிய பொன்னெடுத்து
கட்டமுது தவணைப்புளி மாப்பலகாரம்
    பொரி விளங்காய்
சருவா பரணமெல்லாம் தானெடுத்துப்
    பூண்டு கொண்டு
கணவனையும் அனுப்பிக் கொண்டு
    கன்னி நல்லாள் புறப்பட்டாளே

ஊத்துமலை நாடுமிட்டு ஒத்தடிப் பாதைகூடி

தேவர்குளம் தான் கடந்து வன்னிகரந்தைப் பாதைகூடி

பனவடலிச் சத்திரமும் பாதைவழி தான் கடந்து

குருநிகபட்டிதான் கடந்து கோதை நல்லாள் பெண்கொடியும்

காலங்கரையான் ஓடையிலே கன்னிநல்லாள் தீர்த்தமாடி

தாக சாந்தி பல முடித்து தைய்யநால்லாள் யேதுசெய்தாள்

காலான்கரையான் ஓடையிட்டு கன்னம்மாள் சாலைபெருவழியாய்

சங்கரநயினார் கோயிலிலே தானே வந்து சேரலுற்றாள்

**வன்னிச்சி தவம் புரிதல்**

ஆவுடைப் பொய்கையிலே தீர்த்தமாடி

நாகசுனையிலே ஸ்நானஞ்செய்தாள்

சங்கர நயினாரை சேவை பண்ணி கோமதி

யம்மனை அடி தொழுது

கோயில் குடவற் வாசலிலே கொடிமரங்கம்பத்தடியதிலே

சாந்ததாலே தரைமெழுகி சந்தனத்தாலே கோலமிட்டு

தலைவாழையிலே போட்டு தானே வைத்தாள் நிறைமரக்கால்

நிறைமரக்காலழந்துவைத்து வினாயகரைப் பிடித்து வைத்து

தேங்காய்ப்பழம் உடைத்து தீபதூ பந் தான் கொடுத்து

தினைமாவைத் தானெடுத்து தேனுடன் நறுநெய் கலந்து

தாமரையின் நூல்வாங்கி தான விளக்குப் போடலுற்றாள்

மாவிளக்குப் பார்த்தல்லவோ வசனமிருந்து தவசிருந்தாள்

நாற்பதுநாள் லிருமண்டலம் யிருப்பகலென்று மதியாமல்

சங்கர நயினாரை வேண்டிக் கொண்டு தவம்புரிந்தாள் பெண்கொடியாள்

**சிவ சங்கரலிங்கர் கயிலாயம் செல்லுதல்**

செய்யுந் தவம் பொருக்காமல் சிவசங்கரலிங்கருமோ

அரனுடைய கயிலாயத்தில் ஆதி சங்கரர் போய்சேர்ந்தார்

### சங்கரநயினார் அரசனிடம் முறையிடுதல்

வாருமய்யா யிஸ்பரரே வார்த்தையொன்று சொல்லக்கேளும்
யென் வாசலிலே தவசிருக்கும் யேந்திளையாள் பெண்கொடிக்கு
புத்திரனைக் கொடுக்கவேணும் புகழ் பெரிய அரனாரே

### பட்டயத்தைப் பார்வையிடல்

சங்கர நயினார் சொன்னபோது சாக்ஷாதி யிஸ்பரரும்
சித்திர புத்திரரை சிவனாரும் வரவழைத்து
வன்னிச்சிப் பெண் கொடிக்கு மைந்தன் உண்டுமாயில் லையென்று
பட்டயத்தைத் தானெடுத்து பார்வையிட வேணுமய்யா
அரனார்தான் சொன்னபோது ஆணழகர் நயினாரும்
கருவேல அறைதுறந்து கண்டெடுத்தாரே திருயேட்டை
பட்டயத்தை தானெடுத்து பார்வையிடும் வேளையிலே
ஏழு பிறப்புப் பிறந்தாலும் யிவள் தனக்கு குழந்தையில்லை
பெண் கொடியாள் சொன்னபோது புகழ் பெரிய சங்கரரும்
வாங்கு பெண்ணே வரமதுதான் வயது பதினெட்டில் தவசு உண்டும்
புத்து மண்ணும் விபூதியும் பெண்கொடிக்கு கொடுக்கலுற்றார்
யிருகையால் வாங்கி யல்லோ யிருகண்ணிலும் ஒத்தலுற்றாள்
முக்காலுஞ் சுத்திவந்து முடிவணங்கத் தெண்ட னிட்டாள்.

### வன்னிராசன் கதையைப் பற்றி ஆய்வாளரின் கருத்து

சங்கர நயினார் கோயிலைச் சுற்றியுள்ள கிராம மக்களிடையே, 'வன்னிராசன் கதை' மிகவும் பரவலாக வழங்கப்படுகிறது. அம்மக்கள் இக்கதையினை ஒருகதையாக எண்ணாமல், ஒரு வரலாறாக எண்ணுகின்றனர். இதனால் குழந்தைப் பேறு இல்லாத் தம்பதியினர் இக்கோயிலுக்கு வந்து நோன்பிருந்து வழிபடுவதை இன்றும் காண முடிகிறது. திருநெல்வேலி மாவட்டத்திலிருந்து புலம்பெயர்ந்தோர் கூட இக்கோயில் மீதும், வன்னிராசன் வரலாறு மீதும் கொண்டுள்ள ஆழ்ந்த நம்பிக்கையினால், தம் இன்னல்களைத் தீர்க்கவும், குழந்தைப் பேறு முதலான நன்மைகள் வாய்க்கவும் நோன்பு நோற்பதாக வேண்டிக் கொண்டு இக்கோயிலில் வந்து வழிபடுவதை இன்றும் காண முடிகிறது. இவை எல்லாம் இம்மக்களின் வாழ்வோடு இக்கோயில் ஒருமித்து நிற்கும் நிலைபாட்டை உணர்த்துகிறது.

# பின்னிணைப்பு - 6

## அருஞ்சொற் பொருள் நிரல்

| | | |
|---|---|---|
| ஆகமம் | - | அன்பர்கள் ஆலயங்களுக்குச் சென்று தாங்களே மூர்த்திகட்குத் திருமுழுக்காட்டி மலரிட்டுப் பாட்டுப்பாடிப் போற்றி வழிபடுவதை ஆகம வழிபாடு என்றும் கூறுவர். மேலும் ஒரு திருமேனியில் இறைவனை எழுந்தருளச் செய்து மற்றவர் வழிபாடு செய்து கொள்ளத் தருதல். |
| உட்பிரகாரம் | - | கோயிலிலுள்ள உட்புறத்தில் அமைந்துள்ள சுற்று |
| உற்சவ மூர்த்தி | - | திருவிழாக்காலங்களில் வெளியே கொண்டு போவதற்குப் பயன்படுத்தப்படும் மூலவர் விக்ரகம் |
| ஊஞ்சல் திருநாள் | - | திருவிழா முடிவடைந்த பின்,சுவாமி, அம்பாள் இவர்களின் களைப்பினைப் போக்க ஊஞ்சலில் வைத்து ஆட்டுவார்கள். இத்திருநாளுக்கு ஊஞ்சல் திருநாள் என்று பெயர். |
| கருவறை | - | கோயிலில் உள்ள மூலவர் இருக்கும் அறை |
| காப்புக்கட்டுதல் | - | இத்தொழிலை நான் செய்து முடிப்பேன் என உறுதிபூண்டு மஞ்சளில் தோய்ந்த நூலினை வலக்கை மணிக்கட்டில் கட்டிக் கொள்ளுதல் |
| காமிக ஆகமம் | - | நாள்தோறும் இறைவனுக்கு மனமுவந்து செய்யும் வழிபாடு |
| குட முழுக்கு | - | இறைவனுக்கு திரவம் போன்ற பொருட்களை அபிடேகம் செய்தல் |
| சங்கரன் கோவில் (சங்கர நயினார் கோவில்) | - | சங்கரநயினார் கோயிலின் ஊரைக் குறிப்பதாகும். |
| சங்கர நயினார் கோயில் | - | திருக்கோயிலின் பெயராகும் |

| | | |
|---|---|---|
| சாயரட்சை | - | மாலையில் இறைவனுக்கு வழிபாடு நடத்தப்படும் நேரம் |
| சூரிய பூசை | - | சூரியன், தனது சாயைகளுடன் உத்திராயண, தட்சிணாயன காலங்களில் இறைவனை வழிபடுதல் |
| சூறையிடுதல் | - | பொருட்களை மக்களுக்குப் பயன்படும்படி எடுத்து வீசுதல் |
| தவசு | - | அம்மன் தவமிருத்தல் |
| தவசு மண்டபம் | - | தவசு திருநாளில் அம்மனுக்கு சங்கர லிங்கர், சங்கர நாராயணராகக் கொடுக்கும் காட்சி மண்டபம் |
| தமிழ் மறை ஓதுதல் | - | வேதங்களை ஓதுதல் |
| துருஏறாத் தகரம் | - | எவர்சில்வர் என்று தற்காலத்தில் வழங்கப்படும் பெயர் |
| பாம்புப்புற்று | - | மண் புற்றில் இருக்கும் பாம்பிற்கு பாம்புப் புற்று என்று பெயர் |
| முளையிடுதல் | - | நவதானியங்களை மண் உள்ள பாத்திரத்தில் போட்டு, தண்ணீர் ஊற்றி முளைக்கச் செய்தல். |

# சங்கர நயினார் கோயில் – இலக்கிய வரலாற்று ஆய்வு

*சென்னைப் பல்கலைக்கழக*
*முனைவர் (பிஎச்.டி.) பட்டத்திற்கான*
*ஆய்வேடு*


*பகுதி நேர ஆய்வாளர்*
**உ.சண்முக சுந்தரி,** எம்.ஏ., எம்.ஃபில்.,
தமிழ்த் துறை
மாநிலக் கல்லூரி, சென்னை - 600 005

*மேற்பார்வையாளர்*
**முனைவர். மு.சண்முகம்,** எம்.ஏ., எம்.ஃபில்., பிஎச்.டி.,
இணைப் பேராசிரியர்
தமிழ்த் துறை
மாநிலக் கல்லூரி ( தன்னாட்சி)
சென்னை- 600 005



**தமிழ்த் துறை**
**மாநிலக் கல்லூரி (தன்னாட்சி)**
**சென்னை - 600 005**

**ஜூலை 2002**

# முடிவுரை

ஒரு சமூகத்தின் பண்பாட்டு வரலாற்றுடன் நெருங்கிய தொடர்பு கொண்டவையாய்க் கோயில்கள் விளங்குகின்றன. அக்காலத்திலிருந்து இக்காலம் வரையில் கலை இலக்கியங்களின் வளர்ச்சிக்கும் சமூக ஒற்றுமைக்கும் கோயில்கள் பெரும் பங்காற்றியுள்ளன. இத்தகு சிறப்பிற்குரிய கோயில்களை ஆராய்வதன் மூலம், அக்கோயில்களை உருவாக்கிய சமூகத்தைப் பற்றித் தெளிவாக அறிய இயலும். அத்தகையதொரு முயற்சியாகவே சங்கர நயினார் கோயில், இலக்கிய வரலாற்று ஆய்வு எனும் தலைப்பில் இவ்வாய்வு மேற்கொள்ளப்பட்டுள்ளது.

கணினியுகமென்று அறியப்பெறும் இந்த இருபத்தியோராம் நூற்றாண்டில், சமய சமரச மனப்பான்மை உலகெங்கும் குறைந்து வருவதைத் தெளிவாகக் காண முடிகின்றது. இந்தியாவில் பாபர் மசூதி இடிக்கப்பட்டதும் ஆப்கானிஸ்தானில் புத்தர் சிலைகள் கணநேரத்தில் உடைத்து நொறுக்கப்பட்டதுமான நிகழ்ச்சிகளிலிருந்து அண்மைக் காலத்தில் சமய நல்லிணக்கமின்மை உலகில் பெரும் சிக்கலாக உருவெடுத்துள்ளமையை அறியலாம். இத்தகையதொரு பிற்போக்கான சூழலில் சைவம், வைணவம் எனும் இரு பெரும் அகச் சமயங்களிடையே ஒருமைப்பாட்டுணர்வை ஏற்படுத்தும் வகையில் அமைக்கப்பட்ட சங்கர நயினார் கோயில் பற்றி ஆராய்வது காலத்தின் கட்டாயமாகக் கொள்ளத்தக்கதாகும்.

சிவ வழிபாடு தோன்றி மெதுவாக வளர்ச்சி பெற்றுக் கனிந்து கச்சிதமான உச்சநிலையை அடைந்தபோது கி.பி.பதினோராம் நூற்றாண்டில் சங்கர நயினார் கோயில் தோன்றியது. தோன்றிய காலந்தொட்டு இக்கோயில் புகழ்பெற்று விளங்குகிறது. இப்புகழுக்குச் சங்கரன் நயினார் கோயிலிலுள்ள சங்கர நாராயணர் வடிவமே, முக்கிய காரணமாகத் திகழ்கின்றது. அதாவது மூர்த்தியில் சிறப்புப் பெற்ற திருத்தலமாகச் சங்கர நயினார் கோயிலைச் சுட்டலாம். சங்கரனார், சங்கர நாராயணர், கோமதியம்பிகை ஆகிய மூன்று சன்னதிகள் வரிசையாக இருப்பதும், திருமேனியுடன் நடராசர் காட்சியளிப்பதும், காரைக்காலம்மையார் எழுந்தருளி இருப்பதும், யோக நரசிம்மர், கார்த்தவீரியன் முதலியோரின் எழில் வாய்ந்த

திருவுருவச் சிலைகளும் சங்கர நயினார் கோயிலுக்குப் பெரும் புகழ் சேர்க்கின்றன. இக்கோயிலில் வேறு திருத்தலங்களில் காணக்கூடிய சிலைகளுடன் எங்கும் காண முடியாத அரிய சிலைகளும் உள்ளனவென்பது மிகவும் குறிப்பிடுவதற்கு உரியது ஆகும்.

கோமதியம்மையின் திருவுருவின் முன் அமைந்துள்ள மந்திரச் சக்கரம், கோயிலின் மாண்பிற்கு முக்கியக் காரணமாகத் திகழ்கிறது. இச் சக்கரம் மனிதனின் அகப் புற நோய்களை அகற்றுகின்ற மந்திர மருந்தாகக் கருதப்படுகிறது. மேலும் உடற் பிணிகளை நீக்குகின்ற புற்றுமண் மருந்தும் சங்கர நயினார் கோயிலில் காணப்படுகிறது.

நேர்த்திக்கடன் செலுத்தும் திருத்தலம், சைவ வைண ஒருமைப்பாட்டுத் தலம், பெண் தெய்வ வழிபாட்டில் சிறப்புடைய திருத்தலம் எனும் பல்வேறு பெருமைகளுக்கு உரியதாக சங்கர நயினார் கோயில் திகழ்கிறது. இக் கோயிலின் மேன்மைகளைப்பல மடங்கு உயர்த்தும் நோக்கில் இங்கு ஆண்டுதோறும் ஆடித் தவசுத் திருவிழா கொண்டாடப்படுகிறது. சங்கர நயினார், சங்கர நாராயணராக திருக்காட்சி அளிக்கின்ற சிறப்பிற்குரியதாக இப்பெருவிழா அமைந்துள்ளது.

சங்கர நயினார் கோயிலுக்கு வந்து வழிபடுவோர் துன்பங்கள் யாவும் முற்றிலுமாக நீங்கிவிடும் என்பது மக்களது நம்பிக்கையாகும். இவ்வகையில் திருநெல்வேலி மாவட்டத்திலுள்ள புகழ்பெற்ற வழிபாட்டுத் தலமாக சங்கர நயினார் கோயில் திகழ்வதாகக் கூறலாம். திருநெல்வேலியைச் சுற்றியுள்ள பகுதிகளில் வாழும் விவசாயிகள், வியாபாரிகள், தொழிலாளிகள் உள்ளிட்ட அனைத்து மக்களின் நம்பிக்கைகளையும் பெற்ற சிறப்பான வழிபாட்டுத் தலமாக சங்கர நயினர் கோயில் உள்ளது என்பதை இவ்வாய்வேட்டில் சான்றுகளுடன் சுட்டி விளக்கப்பட்டுள்ளது.

இவ்வாய்வேட்டில் விவாதிக்கப்பட்டுள்ள செய்திகளும் கண்டறியப்பட்டுள்ள முடிவுகளும் இயல் வரிசை முறைப்படி தொகுக்கப்பட்டுக் கீழே காட்டப்பட்டுள்ளது.

**இயல் ஒன்றில் கண்டறியப்பட்டுள்ள முடிவுகள்**

மொகஞ்சதாரோ, ஹரப்பா அகழ்வாய்வில் கிடைத்த சிவ வடிவம் பொறித்த முத்திரைகளும், இலிங்கங்களும் ரிக் வேதமும் சிவ வழிபாட்டின் தொன்மையைத் தெரிவிக்கின்ற ஆதாரங்கள் ஆகும்.

சிவ வழிபாடு, அடிப்படையில் மூன்று வகைப்படும். (1) சிவனை, அருவ நிலையில் வழிபடுவது அருவ வழிபாடு (2) சிவ லிங்க வழிபாடு என்பது அருவுருவ வழிபாடு (3) சிவ வடிவங்களை வழிபடுவது உருவ வழிபாடு. இவை மூன்றும் தொன்மையானவை; இப்போதும் வழக்கத்தில் இருப்பவை.

சிவனைப் பற்றிய குறிப்புகள் தொல்காப்பியத்தில் இல்லை.

''சிவ வடிவம் இதுவே'' என்று பழங்காலத்தில் வரையறை செய்யப் பட்டிருந்தது. இது தென்மையான தமிழ் இலக்கியங்கள் மூலம் அறியப்படுகின்றது.

சிவனது பல வேறுபட்ட வடிவங்களைச் சங்கப்பாடல்கள் விவரிக்கின்றன.

சங்கர நாராயணர் வடிவமும் சங்க காலத்தில் இருந்தது.

சிவன், சிவ வழிபாட்டைப் பற்றிய குறிப்புகள் சில சிலப்பதிகாரத்தில் காணப்படுகின்றன.

சங்கப் பாடல்கள், சிலப்பதிகாரம் முதலியன சிவனைச் 'சிவன்' என்ற பெயரால் குறிப்பிடவில்லை. அவனை முக்கண்ணன், ஆலமர் செல்வன், கறைமிடற்றண்ணல், இமையா நாட்டத்து இறைவன், பிறவா யாக்கைப் பெரியோன் என்றெல்லாம் அடைமொழிச் சிறப்புடன் குறித்தன.

தெய்வங்கள் பலருள் முதன்மையிடம் சிவனுக்கே இருந்தது. இவனே பரம்பொருளாக மதிக்கப்பட்டான்.

'சைவம்' என்ற சொல்லை மணிமேகலை முதன் முதல் குறிப்பிடுகிறது.

கி.பி. இரண்டாம் நூற்றாண்டளவில் 'சைவம் சமயம்' சமுதாயத்தில் பரவியிருந்தது. சைவ வாதிகளும் இருந்தனர். சமய முரண்பாடுகளும் இருந்தன.

சிவனின் பழைய கற்சிலை வடிவங்களை மாமல்லபுரத்தில் காணலாம்.

ஆதிவராஹர் குகையிலும், தர்ம ராசா ரதத்திலும் சங்கர நாராயணரின் கற்சிலை வடிவங்கள் உள்ளன.

பாண்டிய நாட்டில் சைவம், வைணவம், கௌமாரம், சாக்தச் சார்புடைய திருத்தலங்கள் பல இருக்கின்றன.

சங்கரன் கோயில் என்பது பாண்டி நாட்டுச் சிவத்தலம். இது கி.பி. பதினோரம் நூற்றாண்டில் தோன்றியது.

திருத்தலத்திற்கும், இறைவனுக்கும், இறைவிக்கும் பல பெயர்கள் நூல், உலகு ஆகிய இரு வழக்குகளிலும் வழங்குகின்றன.

சங்கரன், சங்கர நயினார், சங்கர நாராயணர் என்ற முப்பெரும் பெயர்கள் தனிச்சிறப்புடையன.

சிவனது சில பெயர்களை மக்கள் சூடிக்கொண்டனர்.

சங்கரநயினார் கோயிலுடன் மிக நெருக்கமான தொடர்புடைய பாண்டியர் உக்கிரபாண்டியன் முதலியோர் அறுவரேயாவர்.

காவை வடமலையப்பப் பிள்ளையன் அறங்காவலர் திரு.என்.ஏ.வி. சோமசுந்தரம் பிள்ளை ஆகியோர் சங்கரன் கோயிலுக்குச் செய்த திருப்பணிகள் பாராட்டுக்குரியன. கோயிலின் இப்போதைய கட்டமைப்புக்கு இவர்களே காரணம்.

''பூலித்தேவன் அறை'' வரலாற்றுச் சிறப்புடையது.

சங்கரநயினார் கோயிலில் பொறிக்கப்பட்ட கல்வெட்டுகள் பல, மன்னர் கோயிலுக்கு அளித்த தேவதானத்தையும், தனிப்பட்டவருக்கு அளித்த நிலக்கொடையையும் விவரிக்கின்றன.

### இயல் இரண்டில் கண்டறியப்பட்டுள்ள முடிவுகள்

சங்கர நயினார்கோயில் மிக அழகான அமைப்புடையது. இந்த ஒரு கோயிலுக்குள் ''முப்பெருங் கோயில்கள்'' இருப்பது இதன் தனிச் சிறப்பு.

பழைய மரபின்படி ஊரின் மையத்தில் கோயில் உள்ளது.

சங்கர நாராயணரின் இரட்டை வண்ணச்சிலை வியப்புக்குரியது; இதைப்போன்ற சிலையை வேறு எங்கும் காண முடியாது.

சங்கர நாராயணரது வடிவம் பக்தி ஆர்வத்தால் தோன்றிய வடிவம்; இது சமய இணக்கத்தின் சான்றாக அமைந்தது.

சைவ, வைணவச் சான்றோர்கள் சங்கர நாராயணரின் வடிவத்தைப் புனைந்துரைக்கின்றனர்; புகழ்ந்துரைக்கின்றனர்.

சிவனின் சக்தி வடிவமே நாராயணன்; இதனை இரு சமயச் சான்றோரும் ஏற்கின்றனர்.

சங்கர நயினார் கோயிலின் புற்றுமண் மருத்துவப் பேராற்றலுடையது. ஸ்ரீ சக்கரம் மந்திரப் பேராற்றலுடையது எனவும் இவற்றால் பலரது நோய்கள் தணிகின்றன; அகலுகின்றன எனவும் நம்புகின்றனர். எனவே இத்தலம் சிறந்த ‘‘பிரார்த்தனைத் திருத்தலமாக’’ விளங்குகின்றது.

நடராசரின் அம்பலத்தில் காரைக்காலம்மையார் எழுந்தருளியிருப்பது கோயிலின் ஒரு சிறப்பம்சமாம்.

கோயிலில் அமைந்த பாண்டியர் மரபைத் தழுவிய பழங்காலக் கற்சிலை வடிவங்களும், அண்மைக்கால ஓவியங்களும் அழகானவை. கோயிலில் பழமையும், புதுமையும் இணைந்துள்ளன.

கற்சிலை வடிவங்களில் காண முடியாத தெய்வ வடிவங்களை ஓவியங்களிலும், இந்த ஓவியங்களில் காண முடியாத தெய்வ வடிவங்கைளக் கற்சிலைகளிலும் காண முடியும்.

ஆறு சமயங்களுக்குரிய தெய்வங்கள் இக்கோயிலில் கற்சிலைகளாய், ஓவியங்களாய்க் காட்சி தருகின்றனர்.

பக்தர்கள் சங்கரலிங்க சுவாமி என்ற ஒருவரையோ, சங்கரன், நாராயணன் என்ற இருவரையோ, கோட்டத் தெய்வங்களாகத் திகழ்கின்ற மும்மூர்த்திகள் என்ற மூவரையோ தாம் விரும்புகின்ற முறைகளில் வழிபடுகின்றனர்.

சமய இணக்கதிற்குச் சங்கர நாராயணர் வடிவம் ஒரு சிறந்த சான்று எனக் கொள்ளலாம்.

**இயல் மூன்றில் கண்டறியப்பட்டுள்ள முடிவுகள்**

தேர்ந்த சில சடங்குகளின் தொகுதிகளே திருவிழாக்களாக அமைகின்றன. இவை காலத்தைக் கணிக்க முடியாத பழமை கொண்டவை.

திருவிழாக்கள் மரபுவழிப்படி தொடர்ந்தும், பல நூற்றாண்டுகளைக் கடந்தும், இப்போதும் நடைபெறுகின்றன.

கார்த்திகை விளக்கீடு, இந்திரவிழா, திருவாதிரைத்திருவிழா முதலியன இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு மேற்பட்ட பழமையுடைய திருவிழாக்களாகும்.

திருவிழாக்கள் பழங்காலத்தில் சமயச்சார்புடையன அல்ல; ஏறக்குறைய முதல் நூற்றாண்டுக்குப் பிறகு அவை சமயச் சார்புடையனவாக மாறின.

மக்கள் ஓய்வாகவும், மகிழ்ச்சியாகவும், செல்வச் செழிப்புடனும் வாழ்கின்ற காலச்சூழ்நிலைகளில் விழாக்கள் நடைபெறுவது வழக்கம்.

மக்களிடையே நாகரிகம், பண்பாடு, மொழி, சமயம் முதலியன மெல்லக்கலப்பதற்குத் திருவிழாக்கள் முக்கியக் காரணங்கள் ஆகும்.

சங்கரநயினார் கோயிலில் பஞ்ச பருவ வழிபாடுகளும் சிறப்பாக, நிறைவாக நடைபெறுகின்றன.

கோயிலில், ஆறு சமயத் தெய்வ வழிபாடுகளில் சிவ வழிபாடு முதன்மையானது. இந்த வழிபாட்டுக்கு் நிகராக மற்ற ஐந்து சமயத் தெய்வங்களையும் போற்றி வழிபடுகின்றனர்.

இந்துமதக் கோயில்கள் பலவற்றில் அறு சமயத் தெய்வ வழிபாடுகள் நிறைவாக நிகழ்கின்றன.

அறு சமயத் தெய்வ வழிபாடுகளைத் தவிர வேறு சில வழிபாடுகள் வருமாறு:

1. சங்கர நாராயணர் வழிபாடு
2. மும்மூர்த்தி வழிபாடு
3. சமய குரவர் நால்வர் வழிபாடு
4. நாயன்மார் வழிபாடு
5. காவல் தெய்வங்கள் முதலிய சிறு தெய்வ வழிபாடுகள்
6. விளக்கு வழிபாடு
7. நவக்கிரக வழிபாடு

பௌர்ணமி நாட்களில் திருவிழாக்கள் நடைபெறுகின்றன; அல்லது பிரம்மோற்சவங்கள் தொடங்குகின்றன. இப்பழைய மரபை இப்போதும் எல்லாக் கோயில்களும் வழுவாமல் பின்பற்றுகின்றன.

கார்த்திகை விளக்கீடு, நவராத்திரி, தீபாவளி முதலியன கோயிலுக்குள்ளே நடைபெறுகின்றன. இவற்றைக் காண உள்ளூர் மக்கள் திரளாகப் பங்கேற்கின்றனர்.

கோயிலின் அகத்தும், புறத்தும் நடைபெறுகின்ற சித்திரைப் பெருந்திரு விழாவிலும், ஆடித்தவசு விழாவிலும் உள்ளூர் வெளியூர் மிகப்பெருந்திரளான மக்கள் கூடி வழிபடுகின்றனர்.

பொதுவாக எல்லாக் கோயில்களிலும் நடைபெறுவதைப் போல இக்கோயிலிலும் பெருந்திருவிழா நடைபெறுகின்றது.

ஆனால் ஆடித்தவசு விழா சிறப்பாக ஒரு புராண வரலாற்றுப் பின்னணியோடு நிகழ்கின்றது. அரிய நுட்பமான கருத்துகளை மக்கள் எளிதில் புரிந்து கொள்ளும்படி ஆடித்தவசு விழாவின் நடைமுறைகள் உள்ளன.

தெய்வ வடிவங்கள், வழிபாடுகள், திருவிழாக்களின் மூலமாக ''அரியும் சிவனும் ஒண்ணு'' என்ற கருத்து ஆழமாகவும், அழுத்தமாகவும் நிலைநாட்டப் பெறுகின்றது.

பக்தர்கள் கோயிலுக்குச் செலுத்துகின்ற காணிக்கை முறைகள் பலவாகும். 'சூறையிடுதல்' என்ற காணிக்கை முறை இக்கோயிலின் ஒரு சிறப்பம்சம்.

ஆடித்தவசு விழாவுடன் தொடர்புடைய நம்பிக்கைகள் பல உள்ளன. காணிக்கைகள் பல உள்ளன. காணிக்கைகளும், நம்பிக்கைகளும், தமிழர் வாழ்க்கையுடன் திருவிழாக்கள் நெருங்கிய தொடர்புடையன என்பதற்குச் சான்றுகளாக அமைகின்றன.

**இயல் நான்கில் கண்டறியப்பட்டுள்ள முடிவுகள்**

சங்கர நாராயண சுவாமி கோயிற் புராணம் என்ற தல புராணம் ஒன்றும்,சங்கரலிங்க உலா முதலிய சிற்றிலக்கியங்கள் ஏழும், பிற இலக்கியங்களில் பயின்றுவரும் பாடல்கள் சிலவும், தனிப்பாடல்கள் சிலவும் சங்கரன் கோயிலைச் சார்ந்த இலக்கியங்கள் ஆகும்.

மேற்கண்ட இலக்கியங்களால் சங்கரலிங்க சுவாமிகளின் கோயிலைப் பற்றிய வரலாற்றையும், சங்கரன் கோயிலில் வாழும் மக்களின் வாழ்வியலையும் அறிய முடிகிறது.

திருத்தலத்தைப் பற்றிய இலக்கியங்கள், இத்திருத்தலத்தின் தோற்றத்தையும், அரசன், ஜமீன்தார் முதலிய அடியார் இக்கோயிலுக்குச் செய்த வளர்ச்சிப் பணிகள் ஆகியவற்றையும் விளக்குகின்றன.

தல புராணம் விரித்துக் கூறுகின்ற இக்கோயில் பற்றிய பல்வேறு செய்திகளை மற்ற நூல்கள் தொகுத்தும் சுருக்கியும் கூறுகின்றன.

திருத்தலத்தைப் பற்றிய அரிய குறிப்புகள் பல சங்கரலிங்க உலாவில் அதிகமாகக் காணப்படுகின்றன. எனவே இவ்வுலா நூல் சங்கரநயினார் கோயில் வரலாற்று ஆய்வுக்கு சிறந்த ஆய்வுமூலமாகத் திகழ்கிறது.

உக்கிர பாண்டியன், வீரசேனன், முசுகுந்தன், இராம பாண்டியன் முதலிய மன்னர்களைப் பற்றிய வரலாற்றுக் குறிப்புகளும், வடமலையப்பப் பிள்ளையனைப் பற்றிய குறிப்புகளும் இக்கோயில் மீது பாடப் பெற்றுள்ள இலக்கியங்களில் காணப்பெறுகின்றன. எனவே இந்நூல்கள் பக்தி இலக்கியங்களாக மட்டுமேயன்றி வரலாற்று மூலங்களாகவும் திகழ்வது அறிய வேண்டியதாம்.

சங்கரன் கோயிலைப் பற்றிய நாட்டுப்புறப் பாடல்களும் இக்கோயில் பற்றிய அரிய செய்திகளைக் கூறுகின்றன.

### இயல் ஐந்தில் கண்டறியப்பட்டுள்ள முடிவுகள்

சங்கர நாராயண வடிவத்தை அகநானூறு முதன்முதல் குறித்தது. ஆனால் அந்த வடிவத்தின் பெயரைச் சுட்டவில்லை.

சிவனையும், திருமாலையும் சங்க இலக்கியங்களும், சிலப்பதிகாரமும் ஒத்த நிலையில் போற்றின.

சான்றோர் பலர் சங்கர நாராயண வடிவத்தைப் புனைந்துரைத்ததால் மகேசுவர வடிவங்களில் அது புகழ்பெற்ற வடிவமாகத் திகழ்ந்தது.

மாமல்லையில் வடிக்கப்பட்ட சங்கர நாராயணர் கற்சிலைகள் காலத்தால் மிக்க பழமையானவை.

பல்லவர், சோழர், பாண்டியர் ஆகிய மூவரும் சங்கர நாராயண வடிவத்தை எழுந்தருளச் செய்தனர்.

சங்கர நாராயண வடிவத்தைத் தளவரிசைகளிலும், பிரகாரங்களிலும், கோட்டங்களிலும், சன்னதிகளிலும், கருவறைகளிலும் நிறுவினர்.

சங்கர நாராயணர் எழுந்தருளியுள்ள சிறப்பான திருத்ததலங்கள் நான்கு; இவற்றில் மூன்று தமிழகத்திலும், ஒன்று கர்நாடகத்திலும் உள்ளன.

சங்கர நாராயண வடிவம் இரு சமய ஒருமைப்பாட்டின் சின்னம்.

சிவன் கோயில்களில் திருமால் சிலைகள் இருப்பது பெரும்பான்மை, திருமால் கோயில்களில் சிவன் சிலைகள் இருப்பது சிறுபான்மை.

திருமாலின் சன்னிதிகளை உள்ளடக்கிய பழைய சிவனின் கோயில்கள் மொத்தம் பன்னிரண்டு.

இரு சமயங்கள் முரண்பட்டபோது, அவற்றை நீக்கப் பல நடவடிக்கைகள் மேற்கொள்ளப்பட்டன. இவற்றால் அந்த முரண்பாடுகள் ஓரளவு தணிந்தன; அறவே அகலவில்லை.

ஆறு சமயப் பரம்பொருள்கள் எழுந்தருளியுள்ள கோயில்களாகச் சங்கர நயினார் கோயில் திகழ்கின்றது. இது சமயப் பொறைக்குச் சிறந்த எடுத்துக்காட்டு.

கோயில்களைப் பற்றி எதிர்வரும் காலங்களில் ஆய்வு நிகழ்த்த உள்ளவர்களுக்காகப் பின்வரும் தலைப்புகள், பணிவுடன் பரிந்துரைக்கப்படுகின்றன.

1. சமய ஒருமைப்பாட்டில் தமிழ்நாட்டுச் சிவன் கோயில்களின் பங்கு

2. சமய ஒருமைப்பாட்டில் தமிழ்நாட்டுத் திருமால் கோயில்களின் பங்கு

3. தமிழ்நாட்டுக் கோயில் கலை - ஓர் ஆய்வு

4. தமிழ் இலக்கியங்களும் கோயில்களும் - ஓர் ஆய்வு

5. சங்கர நாராயணர் வடிவமும் அரிஅர (ஹரி ஹர) வடிவமும் - ஓர் ஆய்வு